

திருமணம்

செல்வக் கேசவராய முதலியார், எம். ஏ.

1864 - 1921

பேராசிரியர்

திருமணம் செல்வக் கேசவராய முதலியார்

பயன்படுத்திய இந்நூல்

அவர்கள்தம் பேரன் திருவாளர்

தி நம்பிராசன் அவர்களால்

மறைமலையடிகள் நூல்நிலையத்திற்கு

அன்பளிப்பாக

வழங்கப்பெற்றது.

உ

கணபதிதுணை.

# திருக்குற்றாலத்தலபுராணம்.

பாண்டிநாட்டுள்ள

மேலகரம்

திரிகூடராசப்பக்கவிராயமூர்த்திகள்

அருளிச்செய்தது.

இஃது

திருநெல்வேலி

சைவப்பிரகாசவித்தியாசாலைக்கதிபர்

கல்லடைக்குறிச்சி

சிதம்பரநாதகவிராயரவர்களால்

பலபிரதிகளைக்கொண்டு

பரிசோதிக்கப்பட்டு

தச்சநல்லூர்

கணபதியப்பபிள்ளையவர்கள்

குமாரர்

முத்தழகப்பபிள்ளையவர்களால்

திருநெல்வேலி

அம்பலவாணன்கவிராயரவர்கள்

கு. சிவராமமுதலியாரவர்கள்

புதூர். வள்ளிநாயகம்பிள்ளையவர்கள்

இவர்களது

முத்தமிழாகரஅச்சுக்கூடத்தில்

பதிப்பிக்கப்பட்டது.

துசாளரு பங்குனிமீ





திருச்சிற்றம்பலம்.

திருஞானசம்பந்தசுவாமிகளருளிச்செய்த

## திருக்குற்றாலப்பதிகம்.

பண் — குறிஞ்சி.

வம்பார்குன்றநீடுயர்சாரல்வளர்வேங்கைக்
கொம்பார்சோலைக்கோலவண்டியாழ்செய்குற்றால
மம்பானெய்யோடாடலமர்ந்தானலர்கொன்றை
நம்பான்மேயநன்னகர்போலுநமரங்காள்.

பொடிகள்பூசித்தொண்டர்பின்செல்லப்புகழ்விம்மக்
கொடிகளோடுநாள்விழமல்குகுற்றாலங்
கடிகொள்கொன்றைகூவிளமாலைகாதல்செய்
யடிகண்மேயநன்னகர்போலுமடியீர்காள். ௨

செல்வமல்குசெண்பகம்வேங்கைசென்றேறிக்
கொல்லைமுல்லைமெல்லரும்பீனுங்குற்றாலம்
வில்லினொல்கமும்மதிலெய்துவினைபோக
நல்குநம்பானன்னகர்போலுநமரங்காள். ௩

பக்கம்வாழைப்பாய்கனியோடுபலவின்றேன்
கொக்கின்கோட்டுப்பைங்கனிதூங்குங்குற்றால
மக்கும்பாம்புமாமையும்பூண்டோரனலேந்தி
நக்கன்மேயநன்னகர்போலுநமரங்காள். ௪

மலையார்சாரன்மகவுடன்வந்தமடமந்தி
குலையார்வாழைத்தீங்கனிமாந்துங்குற்றால
மிலையார்சூலமேந்தியகையானெயிலெய்த
சிலையான்மேயநன்னகர்போலுஞ்சிறுதொண்டீர். ௫

மைம்மாநீலக்கண்ணியர்சாரன்மணிவாரிக்
கொய்ம்மாவேனலுண்கிளியோப்புங்குற்றாலங்
கைம்மாவேழத்தீருரிபோர்த்தகடவுளெம்
பெம்மான்மேயநன்னகர்போலும்பெரியீர்காள். ௬

நீலநெய்தல்தண்சுனைசூழ்ந்தநீள்சோலைக்
கோலமஞ்ஞைபேடையோடாடுங்குற்றாலங்
காலன்றன்னைக்காலாற்காய்ந்தகடவுளெஞ்
சூலபாணிநன்னகர்போலுந்தொழுவீர்காள். ௭

போதும்பொன்னுமுந்தியருவிபுடைசூழக்
கூதன்மாரிநுண்டுளிதூங்குங்குற்றால
மூதூரிலங்கைமுட்டியகோனை மிறைசெய்த
நாதனமேயநகர்போலுநமரங்காள். ௮

அரவின்வாயின்முள்ளெயிறேய்ப்பவரும்பீனு
குரவம்பாவைமுருகமர்சோலைக்குற்றாலம்
பிரமன்னொடுமாலறியாதபெருமையெம்
பரமனமேயநன்னகர்போலும்பணிவீர்காள். ௯

பெருந்தண்சாரல்வாழ்சிறைவண்டுபெடைபுல்கிக்
குருந்தம்மேறிச்செவ்வழிபாடுங்குற்றால
மிருந்துண்டேருநின்றுண்சமணுமெடுத்தார்ப்ப
வருந்தனமேயநன்னகர்போலுமடியீர்காள். ௰

மாடவீதிவருபுனற்காழியார்மன்னன
கோடலீன்றுகொழுமுனைகூம்புங்குற்றால
நாடவல்லநற்றமிழ்ஞானசம்பந்தன
பாடல்பத்தும்பாடநம்பாவம்பறையுமே. ௧௧

திருச்சிற்றம்பலம்.

---

திருச்சிற்றம்பலம்.

திருஞானசம்பந்தசுவாமிகளருளிச்செய்த

## திருக்குறும்பலாப்பதிகம்.

பண்—காந்தாரம்

திருந்தமதிசூடித்தெண்ணீர்சடைக்கரந்துதேவிபாகம்
பொருந்திப்பொருந்தாதவேடத்தாற்காடுறைதல்புரிந்தசெல்வ
ரிருந்தவிடம்வினவிலேலங்கமழ்சோலையினவண்டியாழ்செய்
குருந்தமணநாறுங்குன்றிடஞ்சூழ்தண்சாரற்குறும்பலாவே. ௧

நாட்பலவுஞ்சேர்மதியஞ்சூடிப்பொடியணிந்தநம்பானம்மை
யாட்பலவுந்தானுடையவம்மானிடம்போலுமந்தண்சாரற்
கீட்பலவுங்கீண்டுகிளையிளையமந்திபாய்ந்துண்டுவிண்ட
கோட்பலவின்றீங்கனியைமாக்கடுவனுண்டுகளுங்குறும்பலாவே. ௨

வாடற்றலைமாலைசூடிப்புலித்தோல்வலித்துவீக்கி
யாடலரவசைத்தவம்மானிடம்போலுமந்தண்சாரற்
பாடற்பெடைவண்டுபோதலர்த்தத்தாதவிழ்ந்துபசும்பொனுந்திக்
கோடன்மணங்கமழுங்குன்றிடஞ்சூழ்தண்சாரற்குறும்பலாவே. ௩

பால்வெண்மதிசூடிப்பாகத்தோர்பெண்கலந்துபாடியாடிக்
காலனுடல்கிழியக்காய்ந்தாரிடம்போலுங்கல்சூழ்வெற்பி
னீலமலர்க்குவளைகண்டிறக்கவண்டரற்றுநெடுந்தண்சாரற்
கோலமடமஞ்ஞைபேடையொடாட்டயருங்குறும்பலாவே. ௫

தலைவாண்மதியங்கதிர்விரியத்தண்புனலைத்தாங்கித்தேவி
முலைபாகங்காதலித்தமூர்த்தியிடம்போலுமுதுவேய்சூழ்ந்த
மலைவாயசும்புபசும்பொன்கொழித்திழியுமல்குசாரற்
குலைவாழைத்தீங்கனியுமாங்கனியுந்தேன்பிலிற்றுங்குறும்பலாவே. ௬

நீற்றேதுதைந்திலங்குவெண்ணூலர்தண்மதியர்நெற்றிக்கண்ணர்
கூற்றேர்சிதையக்கடிந்தாரிடம்போலுங்குளிர்சூழ்வெற்பி
லேற்றேனமேனமிவையோடவைவிரவியிழிபூஞ்சாரற்
கோற்றேனிசைமுரலக்கேளாக்குயில்பயிலுங்குறும்பலாவே ௭

பொன்னொத்தகொன்றையும்பிள்ளைமதியும்புனலுஞ்சூடிப்
பின்னொத்தவார்சடையெம்பெருமானிடம்போலும்பிலயந்தாங்கி
மன்றத்துமண்முழவமோங்கிமணிகொழித்துவயிரமுந்திக்
குன்றத்தருவியயலேபுனறதும்புங்குறும்பலாவே. ௮

ஏந்துதிணிதிண்டோளிராவணனைமால்வரைக்கீழடரவூன்றிச்
சாந்தமெனநீறணிந்தசைவரிடம்போலுஞ்சாரற்சாரற்
பூந்தணறுவேங்கைக்கொத்திறுத்துமத்தகத்திற்பொலியவேந்திக்
கூந்தற்பிடியுங்களிறுமுடன்வணங்குங்குறும்பலாவே. ௯

அரவினணையானுநான்முகனுங்காண்பரியவண்ணல்சென்னி
விரவிமதியணிந்தவிகிர்தர்க்கிடம்போலும்விரிபூஞ்சாரன்
மரவமிருகரையுமல்லிகையுஞ்சண்பகமுமலர்ந்துமாந்தக்
குரவமுறுவல்செய்யுங்குன்றிடஞ்சூழ்தண்சாரற்குறும்பலாவே. ௰

மூடியசீவரத்தர்முன்கூறுண்டேறுதலும்பின்கூறுண்டு
காடிதொடுசமணைக்காய்ந்தாரிடம்போலுங்கல்சூழ்வெற்பி
னீடுயர்வேய்குனியப்பாய்கடுவனீள்கழைமேலிருந்துசெய்யக்
கூடியவேடுவர்கள்கூய்விளியாக்கைமறிக்குங்குறும்பலாவே. ௧௧

கொம்பார்பூஞ்சோலைக்குறும்பலாமேவியகொல்லேற்றண்ணல்
நம்பானடிபரவுநான்மறையான்ஞானசம்பந்தன்சொன்ன
வின்பாயபாடலிவைபத்தும்வல்லார்விரும்பிக்கேட்பார்
தம்பாலதீவினைகள்போயகலுநல்வினைகடளராவன்றே. ௧௨

திருச்சிற்றம்பலம்.

உ

சிவமயம்.

திருநெல்வேலியிலிருக்கும்

தச்சநல்லூர்

மகாராஜராஜஸ்ரீ

வன்னியப்பபிள்ளையவர்கள்

குமாரர்

# அழகியசொக்கநாதபிள்ளையவர்கள்

இயற்றிய

## சிறப்புப்பாயிரம்.

நீராருஞ்சடைமுடியுநிலவியவெண்ணீற்றொளியுங்
காராருங்கறைமிடறுங்காட்டியெனதுளநெகிழ்க்கு
மேராரும்விடைப்பாகனிணையில்விழுப்புகழ்தோற்றிச்
சீராருந்தமிழ்தழைக்குந்திருப்பாண்டிநன்னாட்டில். க

மலைவளமுமலர்ப்பழனமணவகமழுமருதநிலத்
தலைவளமுந்தடமுலைத்தனிவளமுந்தழையுமிக்கு
மலைவளமுமகத்தடக்கியளகையினுமிதுபோல
விலைவளமதெனயாருமெடுத்துநவின்றிடப்பொலிந்தே. உ

வரிகூடமதுபமுரன்மலர்ப்பொழில்கள்புடைநெருங்கும்
விரிகூடமணிமாடமேலகரமெனுநகரி
லரிகூடப்புகலரிதாமரனருளாலவதரித்தோன்
திரிகூடராசப்பனெனுநாமச்சிறப்புடையோன். ங

பொற்றுலமலர்த்தொடையான்புகழ்த்தோழற்கொருதோழ
றெற்றுல்மினிதருந்தியிமையவரைப்புரந்தருளுங்
குற்றுலநாதாவிடைக்குழகனார்குளைகழற்கே
நற்றுலமிசையோங்குநவிலுமுவலன்புடையோன். ச

துன்னியவாணவவிருளைத்துரந்தடியார்க்கினிதருள
மன்னியவாவடுதுறைவாழ்வரசுப்ரமண்யனெனுந
தன்னியவானந்தகுருத்தான்றோன்றத்தன்மரபை
முன்னியவானவனருளான்முழுதுமினிதழைவித்தோன். ௫

கொக்கலையும்படியெறியுங்கூரியவேற்குமரனைத்தன்
னுக்கலையுள்வைத்தாட்டுமொளிர்குழல்வாய்மொழிபாகத்
தக்கலையுநதிருவளையானருட்செல்வப்பெருமையினு
லெக்கலையுமகிழ்ந்தேத்துமினித்ததமிழ்க்கலைக்குரிசில். ௬

ஏரானவிறைபுகழாயினமலர்களவையாய்ந்து
நாரான்சார்தொடுத்துநலம்பெருகப்பாமாலைச்
சீரானசிவஞானச்செழுமணமேபரிமளிக்கக்
காரானகறையுமிடற்றன்கழற்சாத்தும்பெருமையினான். ௭

வேறு.

இன்னமாதவத்தோல்சூதர்சொலும்பதினெண்புராணத்
அன்னமாண்புதவுகாந்தத்துளைத்திடுந்திருக்குற்றாலப்
பொன்னமார்சடையினார்தம்புராணத்தைத்தமிழாற்பாடி
முன்னமாவுலகுக்கின்பமுதிரமுதெனத்தந்தானுல். ௮

தந்திபுராணந்தன்னைத்தாலபத்திரத்திற்றீட்டி
வந்திடுமுறைமையாலேமறறதுபெறுவான்வேண்டி
னுந்திடுநிதியிலாருக்குறுவதிங்கருமையானு
முந்திடுமறிவினாலேமூத்தவர்தமக்கேயன்றி. ௯

கூரியபுந்தியில்லாக்கொடியனேன்போல்வார்க்கெல்லாந்
தேரியபடிக்குங்காலைச்சிரமங்கள்விளைதலானும்
பாரியவினையவேறுபான்மைகள்பயத்தலானு
மாரியவிவற்றையெல்லாமகற்றிடவகத்துட்டேறு. ௰

வேறு.

அளம்பதிதடந்தண்பணைசெழிப்புறவானகடுகீண்டுயரியவணிவேய்
வளம்பதிதிருநெல்வேலிமாபதிக்குவடகுணபாரிசமாகுங்
களம்பதிமதில்சூழ்தபதியம்பதிவாழ்கணபதியப்பவேள்புதல்வன்
றளம்பதியளகையாளியின்மிக்கசம்பனன்றருமசிந்தையினன. ௧௧

சுரர்புகழ்வேளாண்டலைமையிற்சிறந்தோன்றன்னிலமகிழ்படைத்துவச
னரனடிக்கன்புசெய்பவன்றமிழினருமைநன்கறியும்விற்பனவான்
பிரமரமுரல்பைங்குவளையந்தொடையன்பிறங்குநல்லொழுக்கமுமுடையான்
வரநதிகுலத்திற்கணிதிலகம்போன்மன்னுமுத்தழகப்பமகிபன். ௧௨

# சிறப்புப்பாயிரம்.

இதம்பரவியவப்புராணத்தையெழுதாவெழுத்தினிலமைத்திடல்வேண்டி
நிதம்பரமானந்தக்கடற்றிளைக்குநெறியினைடாவினிமலர்
பதம்பரசுரவோன்கல்லடைக்குறிச்சிப்பதியில்வாழ்பலகலையாய்ந்த
சிதம்பரநாதகவிசிரோமணியாற்செய்வித்தனனுண்மைதெளிய. ௧௩

பற்பலபிரதிவருத்துபுநன்றாய்ப்பார்வையிட்டாயதன்பின்னர்
கற்பகத்திருநெல்வேலிமுத்தமிழாகரவச்சிற்பதிப்பித்துக்கதிர்கான்
றற்பகல்விளக்குமிருசுடருளமட்டங்கண்மாஞாலமெங்கணுநதன
பொற்பகலாதபுகழெனும்பயிரைப்பொலிவுறவளர்த்தனனமாதோ. ௧௪

பெருமைசேரனந்தஞானியோர்தமக்கும்பேசுதற்கரியவிப்புராண
மருமைசேரச்சிலியற்றுவித்திட்டவழகியமுத்தழகப்பன்
கருமைசேரளகக்கன்னிபாகத்துக்கனந்தருகுறும்பலாநாத
னிருமைசேருநாஞ்செல்வமுமழியாவின்பமுமெய்திவாழியவே. ௧௫

---

குருவேதுணை.

---



கணபதிதுணை

சிவமயம்

# திருக்குற்றாலத்தலபுராணம்.

## முதலாவது-தானவைபவகாண்டம்.

### காப்பு

அறுசீரடியாசிரியவிருத்தம்.

புயல்காட்டும்பனிவரையின்பிடிதழுவுஞ்சிவவேழம்பொருப்பில்வாளி
வியல்காட்டுமிருபிடிசேர்மூன்காலுறுதிக்கையன்மூன்னின்றஞானச்
செயல்காட்டுமொருகோட்டினிருகோட்டுவெண்பிறைவாழ்செக்கர்வானை
மயல்காட்டுந்திருமேனிமலைமதச்செண்பகக்களிற்றைமனத்துள்வைப்பாம்.

### பாயிரம்.

## கடவுள்வணக்கம்.

திருக்குறும்பலாவீசர்.

பூமேவுசதுர்முகத்துப்புத்தேளுமவனையுந்திபூத்ததேவுந்
தேமேவுநிலமேவிவான்மேவித்தினந்தேடத்திரிகூடத்துக்
கோமேவுபழம்பொருளைக்குற்றாலப்பரஞ்சுடரைக்குறும்பலாவின்
மாமேவுமறைக்கொழுந்தைப்பிறைக்கொழுந்தணைந்தானைவணக்கஞ்செய்வாம்

குழல்வாய்மொழியம்மை.

இமையவரைக்குலக்கொழுந்துகயிலைவரைபெருவரைக்கிறைவிவேதச்
சிமையவரைத்திரிகூடச்சிவக்கொழுந்துமணக்குமொருசெழும்பூங்கொம்பு
கமையவரைப்புரக்கவருட்கடல்சுரந்துமடைதிறந்தகண்ணுளென்னுஞ்
சமையவரைத்தலைவிகுழல்வாய்மொழியம்பிகைதிருத்தாளைமேற்கொள்வாம். (௨)

சித்திரசபைநடராசர்.

வானாகிவெளியாகிக்கனலாகிப்புனலாகிவளர்பாராகி
யூனாகியுயிராகியொன்றாகிப்பலவாகியுலகம்யாவுந்
தானாகிப்புறமாகியறமாகியறம்வளர்த்தாடாளமேந்தக்
கோனாகிடம்புரியுஞ்சித்திரப்பொற்பொதுவுடையான்கோலம்போற்றி. ௩,

### செண்பகப்பூங்கோதையம்மை.

அம்பரத்தினிடைத்தோன்றுமாருதம்போலம்பரத்திலருளாய்த்தோன்றி
யம்பரத்தினம்புரவாறொருதனுப்போலிருதனுவுமமைந்தொன்றாகி
யம்பரத்தின்விசிகரம்போலத்துவிதமாகியண்டமனைத்துமீன்று
ளம்பரத்தினமர்கடந்தவருள்விழிச்செண்பகக்கோதையடிசார்ந்துய்வாம். (௪)

### திரிகூடநாதர்.

பொன்பூத்தாணையிதழிப்பூமாலைபொன்னரியமாலையாகக்
கொன்பூத்தபுயங்கவெள்ளிக்கொடிவேய்ந்தசடைபவளக்கொடியாம்வீடு
மன்பூத்தமணவறையாமதிவிளக்காமலர்கண்மதுத்தாரைவார்ப்பத்
தென்பூத்தநறுமாதைச்சேர்வேட்குந்திரிகூடச்சிவன்சீர்வேட்பாம். (௫)

### ஞானபராசத்தி.

வேறு.

பூதபலபேதவுயிர்தேககரணாதிமுறைபோகபுவனாதிகளெலா
மாதியுமைவாணிதிருவாயவிலலோகநிறைவாகவருள்கூருமொருதாய்
காதர்கயிலாசகிரிவாசர்திரிகூடநடராசருடனுறுதவடிவாய்
வேதமொழியோதிவிளையாடுகுழல்வாய்மொழிமெய்ஞ்ஞானபராபாதநினைவாம்.

### தெக்கணாமூர்த்தி.

வேறு.

ஆல்வருக்கர்தனிலுயர்ந்தவடநிழற்கேதென்முகங்கொண்டறவோராய
நால்வருக்குளிருவருக்குமொருவருக்குநவின்றருளிநவிலொணாத
நூல்வருக்கமொருவருக்குநுவலாமனுவன்றனைநுதற்கண்ணனைப்
பால்வருக்கைக்கனியையருட்பசுந்தேனைப்பரவாமற்பரவல்செய்வாம். (௭)

### விநாயகக்கடவுள்.

கங்கையாரம்பலைப்பூங்கவுரிநுதற்சிந்தூரத்தைக்கயிலையாளி
செங்கையார்மாதங்கத்திருமுனியைமுனிவரர்கள்தேவவேந்தர்
பங்கயாசனன்முதலோர்முடிமலர்த்தும்பியைவலவைபருவப்பாரக்
கொங்கையார்களபத்தைச்செண்பகக்குஞ்சரத்தைமனக்கூடஞ்சேர்ப்பாம். (௮)

### சண்முகக்கடவுள்.

வேறுமுகர்தொழுந்தோறும்பிறந்துழலுஞ்சனனமிடாய்விடுப்பமூலச்
சேறுமுகமாயைமலங்கழியவிருவினைப்பழையபதிட்டுக்கீரக்
கூறுமுகர்தொழுமகர்க்குழைதாவிவள்ளிதெய்வக்கொடிகட்செல்வ
யாறுமுகம்பெற்றகொற்றத்தாணந்தக்கடற்பரவியாடல்செய்வாம். (௯)

### சரசுவதி.

எண்கமலக்கரஞ்சலிப்பவொருகமலத்தயன்பிறப்பிலெழுதாவண்ணத்
தண்கமலப்பதஞ்சிரமேல்வைத்தருள்வார்குற்றமறத்தமிழ்நூல்வாய்ப்பக்
கண்களெனுங்கருங்கமலங்கரங்களெனும்பசுங்கமலங்கவினப்பூத்த
வெண்கமலத்திருந்தாளைச்செங்கமலத்திருந்தாளைவேண்டல்செய்வாம். (௰)

### திருநந்திதேவர்.

நேத்திரங்களொருமூன்றும்புயநான்கும்விழிமணியுநிறைநூன்மார்புஞ்
சாத்துபுலித்தோலுடையும்வெண்ணீறும்விரிசடையுஞ்சடைமேற்பாம்புங்
காத்திரக்கைம்மான்மழுவுங்கண்ணுதலாமெனத்தோற்றிக்களங்கார்மைநீத்
வேத்திரத்தின்படைதரித்தவிடைமுகத்தெம்பெருமானைவேண்டல்செய்வாம். ௰௧

### சண்டேசுரர்.

தான்பிறந்ததந்தையையுமினிப்பிறக்குந்தந்தையையுந்தடிந்துசேயென்
றான்பிறங்குமழுவிடைமேலொருவரழைத்திடவிருவரயிர்ப்பவேகிக்
கான்பொலிதாரரிபிரமாதியர்க்குமெய்தாவிருக்கையெய்திக்கடவுட்சேடம்
வான்புலவர்பெறாப்பேறுபெற்றவனைநற்றவனைவழுத்தல்செய்வாம். (௰௨)

### திருஞானசம்பந்தசுவாமிகள்.

மதுரேசர்திருநாட்டுவேதசமண்கழுவேறமாறச்சைவஞ்
சதுரேறமனுநீதிதழைத்தேறத்திருவேடுதமிழ்சேர்வைகை
யெதிரேறத்தொண்டர்குழாமீடேறப்பரசமயவிருள்விட்டோடக்
கதிரேறுமணிச்சிவிகையேறினான்சரணமந்தக்கரணஞ்சேர்ப்பாம். (௰௩)

### திருநாவுக்கரசுசுவாமிகள்.

திருநீற்றைமெய்யழுத்தியஞ்செழுத்தைநெஞ்சழுத்திச்சிலைக்கைமார
னுருநீற்றும்பெருமானையுறவழுத்திச்சமண்பொறுமொன்றூர்மூட்டும்
பொருநீற்றுக்குடவறையுங்கடகரியும்விடவரவும்புறங்கண்டாழிக்
கருநீத்தங்கடப்பவொருகற்றோணியுகைத்தானைக்கருத்துள்வைப்பாம். (௰௪)

### சுந்தரமூர்த்திசுவாமிகள்.

புவியாசைக்களைகழிந்ததலைவர்வணக்கூடம்புகுந்துபொற்பூண்
டவிர்த்த o கொம்பிரண்டுமேவி ‡ யொருவல்லிதொடர்தளையயர்வீக்
குவியாரம்புனைபரவைகொங்கையாளையின்பொருட்டுக்குழைதோய்சங்கச்
செவியானைத்தூதுவிட்டகவியானைத்தனைத்தினமுஞ்சிந்தைசெய்வாம். (௰௫)

---

o கொம்பிரண்டு, பரவையார். சங்கிலியாரிருவர்.

‡ ஒருவல்லிதொடர்தளை, சங்கிலியாரதுபற்று.

### மாணிக்கவாசகசுவாமிகள்.

சொன்னவனைத்துளகலையும்பயிலாமாத்தியர்குலத்துத்தோன்றியாங்கோர்
தென்னவனையரசுரிமைத்திறல்செயுமந்திரியாகித்தென்னர்க்கெல்லா
முன்னவனைப்பின்னுசடைமுடியின்மேற்பொன்னின்முடிசூட்டியாண்—
மன்னவனைமதுரையிலேகுதிரைவிற்கச்சொன்னவனைவணக்கஞ்செய்வாம். (௰௬)

### அகஸ்தியமாமுனிவர்.

கிளையேந்துமணிநிலவுவிரிகூடத்திரிகூடக்கிரிக்கேயாவும்
விளையேந்துபுனற்கரகந்தண்டேந்திப் ✠ படைத்தபிரான்விடுத்துநேமி
வளையேந்துங்கரத்தமழுமானேந்திப்பசுந்துளவமவுலிக்காடு
முளையேந்துமதியேந்தத்துதியேந்துந்தமிழ்முனிதாண்முடிமேற்கொள்வாம். (௰௭)

### அறுபத்துமூவர்முதலியநாயன்மார்

தில்லைவாழந்தணர்பொய்யடிமையில்லாப்புலவர்சிவபத்தராதி
வல்லபொம்பெருமாக்களெழுவரடிபரவியயன்மாலுங்காணு
நல்லசீர்மலர்ப்பாதங்கண்டதிருத்தொண்டொடுநாயன்மார்க
ளெல்லைதீர்பெரும்புகழாரறுபத்துமூவர்பதமிறைஞ்சல்செய்வாம். (௰௮

### திருக்கோயிற்பணிவிடைக்காரர்

காவார்நற்றிரிகூடத்தானுவக்குமெனுமொழிக்கவுரியார்க்குந்
தேவாரப்பணிபுரிவாருழைவாரப்பணிபுரிவார்சேவைசெய்வார்
பூவாசத்தொடைதொடுப்பார்புகழ்வாசத்தொடைதொடுப்பார்பூசைசெய்வா
ராவார்கண்முதலாயவடியார்கட்கடியார்கட்கடிமைசெய்வாம். (௰௯)

### திரிகூடச்சிவநாமகீர்த்தனர்

நடந்தாலுமிருந்தாலுநின்றாலும்வளர்ந்தாலுநலிவுற்றாலுங்
கிடந்தாலுமயின்றாலும்பயின்றாலுந்துயின்றாலுங்கிரிகூடாவிப்
படர்ந்தாலும்விழுந்தாலுமெழுந்தாலுந்திரிகூடப்பரமனுமாந
திடந்தாலுமுறவழுத்துந்தொண்டரடிப்பாதுகைகள்சென்னிசேர்ப்பாம். (௨௰)

### வாழ்த்து

சீதமழைமுகில்பொழிகதேசமெல்லாம்பயிர்விளைகசெல்வமோங்க
மாதர்குழாமக்கள்குழாமனையறங்களுடன்பொலிந்துமலிந்துவாழ்க
மேதகுசீர்ச்சைவநெறிவேதநெறிதழைத்தோங்கமேலுமேலும்
பூதலமேற்சிவபெருமானாலயங்கள்பூசனைகள்பொலிகமாதோ. (௨௧)

கடவுள்வணக்கமுற்றிற்று.

---

✠ படைத்தபிரான்விடுத்தல்.பூர்வகற்பத்தில்அயனாயிருந்தசிவன்அவ்வுருவிட்டெரியாயிருத்தல். புகழ்வாசத்தொடை,தோத்திரக்கவிமாலை.

காரணமுங்காரியமுங்கற்பனையுங்கடந்ததனிப
பூரணமாய்நின்றபிரான்புவனமெல்லாம்படைத்தருளி
யாரணமுமாகமமுமருங்கலையும்விரித்தருளி
நாரணற்குநான்முகற்குநவிலுவனநவின்றருளி. (௧)

செப்பரியகயிலையின்மேற்றிருநந்திதேவனுக்கு
வைப்பரியபொருளைவிரித்துபதேசம்வைத்தருள
வொப்பரியசனற்குமாரற்குண்மையாவவனுரைப்ப
மெய்ப்பொருளையுணர்ந்தவனும்வியாதமாமுனிக்குணர்த்த. (௨)

சூதனுக்குவியாதமுனிசொன்னதொல்கதைமூவாறின்
மாதவற்குக்காருடநாரதம்விண்டுபாகவத
மாதவனுக்குயர்பிரமகைவருத்தமழலோற்கு
மேதகுசீராக்னேயம்விதிக்குயர்பற்பம்பிரமம். (௩)

இச்சைபெறுநால்வருக்குமிருநான்குவகைபோக
மச்சம்வாமனங்கூர்மம்வராகமாற்கண்டேய
மெச்சுபவிடியங்காந்தம்வியனிலிங்கம்பிரமாண்ட
மச்சைவமெனச்சிவபுராணங்களையிரண்டில். (௪)

காந்தமெனுமகலிடத்திற்கடலேழினுயர்கழித்துச்
சார்ந்தகடலாறனையசனற்குமாரஞ்சூதங்
கூர்ந்தசிவமால்பிரமங்குமாரமெனப்பெயர்குலவு
மார்ந்தபெருஞ்சங்கிதைகளாறுகுமாங்கவையில். (௫)

கிளர்ந்தபெருஞ்சங்கரசங்கிதையென்னும்பாற்கடலும்
வளம்பெருகுஞ்சனற்குமாரசங்கிதையாமதக்கடலு
முளந்தனிலொன்றாப்பெருக்கியுயர்மதிமந்தரமாகக்
குளந்தருகட்புனிதர்திரிகூடமான்மியவமிர்தம். (௬)

முனிசூதன்கடைந்தெடுத்தமுதுநாவாற் ௦ தருவிகொடு
நனிமேவுமாதவத்துநைமிசாரணியத்தோ
ரினிதாகச்செவிவாயாலிசைத்தருந்தப்பரிமாறிப்
புனிதமாக்கதிநிறைக்கும்புண்ணியமாக்கதையிதனை. (௭)

வடமொழியைத்தென்மொழியாவகுத்துநீயுணர்த்துகெனத்
திடமொழியாலத்தலத்துச்சிவமறையோர்பணித்தருள
வுடனுறைவைதிகமறையோருறுபொருளைவிரித்துணர்த்தக்
குடமுனிபோற்றியபெருமான்றிருவருளாற்குறிக்கொண்டு. (௮)

வேறு.

சித்துநதிநாடுநகர்புராணமூலஞ்சிகரிதலமருவிமதுகங்கைமூர்த்தி
சத்திகுறும்பலவுமந்தாநிலத்தின்பான்மைதக்கன்மகமகமழிதல்வானோர்பாலம்

௦ தருவி. சட்டுவம்.

புத்தெளிர்பவர்தீர்தல்சம்புவேடன்புரியும்வலங்கடகளிறுபுரியும்பூசை
வைத்தபெருஞ்சங்கரசங்கிதைசேர்தானவைபவகாண்டஞ்சருக்கம்பதினெட்டாக
தேவிதிருவவதாரம்பரமன்வேட்டல்செங்கண்மால்சிவனுதல்பூசைப்பான்மை
பாவிவனசரன்பேறுவானோர்கும்பன்பணிவிடைவாசகிதவஞ்சிற்பரமனுடல்
தாவில்பொருட்கண்டகசேதனன்கவுற்சன்சமையமிகழ்புட்பகந்தன்றருமசாமி
மேவுகதிநூற்பயனற்சனற்குமாரம்விளங்குசிவரகசியத்தின்விரிவீரோழா. (௰)

ஒருமைபெறுசிவநெறியேவடிவமாகவுளபயகாண்டமூங்கருணைப்பார்வையாக ன்
வருமைதெரிதருசருக்கமுறைமையெல்லாமவையவங்களாகமதியணிந்த பெம்மா
கருதுகீர்த்தனங்களணிகலன்களாகக்கற்பவர்கேட்பவர்க்கிருமைக்கதியும்வீடுந்
திருவருள்செய்குற்றாலச்சிவபுராணச் செல்விகல்வியுருமகிமைதெரிக்கின்றேனால்-

வேறு.

தோட்டகத்தளிகள்பாயுந்துணர்த்தபூங்கடுக்கைவேய்ந்தா
ரோட்டகத்தெழுதாவேதமேத்தரும்வரம்பில்சீர்த்தி
காட்டகத்தறிஞோர்முன்னர்நாளெடுத்தியம்பும்பான்மை
கோட்டகக்கமலநாப்பண்கொட்டிபூத்தலர்வதாமால். (௰௨)

புகழ்தருமறைக்குமேலோன் ೦ புடார்ச்சுனபுரத்தின்சீர்மை
நிகழ்தரநிகழ்த்தவல்லைநீகொலென்றெனதுநெஞ்சே
யிகழ்தரவெழுந்தநாணுமிச்சையுந்தினம்போராடி
யகழ்தரநாணந்தோற்றதாசையேவென்றதம்மா. (௰௩)

தேக்கியகடுவைமுக்கட்டேவனுக்கமுதமாக்கும்
பாக்கியச்செல்விஞானப்பாவைசெண்பகப்பூங்கோதை
யாக்கியகருணைபோற்றியமலனைப்பரவலாலென்
வாக்கினில்வழுச்சொல்லெல்லாமங்கலச்சொற்களாமால். (௰௪)

செறிந்திலன்சிந்தையேனுந்தெளிந்திலன்கல்விகேள்வி
யறிந்திலன்புகலாநின்றேனுதியார்திரிகூடத்து
மறிந்தவான்கங்கைதிங்கள்வனைந்தபூமுடிமேல்வேழ
மெறிந்தநீர்தளிருங்கொண்டாரென்பதுதெளிந்துமாதோ. (௰௫)

கவையடிவிலங்கின்வல்லூண்கண்ணப்பன்கனிவாயேறி
யவிகளினமிழ்தின்மிக்காவமலனுக்காறுபோலக்
குவிதருநெறியொன்றில்லேன்குறைமொழிநிறைசான்மேலோர்
செவிபுகிற்றிரிகூடத்துச்செல்வனுக்கினியதாமால். (௰௬)

வேலையில்வீழ்த்தகல்லுமென்குடம்புகுத்தவென்புஞ்
சாலையிற்கொளுவுந்தீயுந்தரங்கநீர்வையையாறுஞ்
சோலையாண்பனையும்வேதக்கதவமுந்தொழும்புகொண்ட
வாலையாந்தமிழ்ப்பூஞ்செல்விவளர்தமிழ்ப்பாண்டிநாட்டுள். (௰௭)

---

೦ புடார்ச்சுனபுரம் என்பது திருக்குற்றாலத்தின்இருபத்தொருநாமத்துள்ஒன்று-

வேரியஞ்சுரும்பூடாடாவெயில்புகாக்காவிற்கோடி
சூரியர்திரண்டாலென்னச்சுடர்கள்விட்டெறிப்பமன்றி
லாரியனுடுசேர்த்தென்னுரியகாடுசொல்வாம்
வாரிநீரருவித்தெய்வவரநதிமுதலாமன்றே. (டு௮)

புராணவியல்பும் அவையடக்கமுமுற்றிற்று.

ஆகப்பாயிரம் திருவிருத்தம்—௫௯.

---

## க வது திருநதிச்சருக்கம்

தேர்கொண்டவசந்தவீதிச்சிவபிரான்றிருவெண்ணீற்றி
னேர்கொண்டவடியார்சங்கமெனப்பரந்தேகிவேலை
நீர்கொண்டுதன்பால்வெண்பானிறங்கொண்டுதரங்கமேகக்
கார்கொண்டகடலின்மேனிகைக்கொண்டுமீண்டமேகம். [க]

பைந்தரக்குரிவைபூண்டபரமர்சித்திரப்பூமன்றி
னந்தரப்பேரிபோலவதிர்தரமுழங்கிநீண்ட
சுந்தரச்சடைபோன்மின்னிச்சுந்தரவரைமேலங்கை
மந்திரத்தையங்காட்டிவரதம்போற்பொழிந்தமாரி. [உ]

கிரிமிசைமழைநீர்த்தாரைகிரீசனெம்பெருமான்றன்னை
யரியவானவர்களாட்டுமமுததாரைகளாமன்றிச்
சொரிசூதத்தும்பியாட்டுந்திக்கைநீர்த்தாரைபோலுஞ்
சரிதருமின்னுத்தோற்றந்தளிரருச்சனைபோலாமால். [௩]

துளிதருதுளியாவானந்தூவுநீர்திரிகூடத்துத்
தெளிபுனற்றிரள்காலாறுய்த்திசைதொறும்பரந்ததம்மா
வொளிர்விடைப்பெருமானெம்மையுடையவனடியார்க்கீயுங்
குளிர்பொருளொன்றுநூறுகோடியாயனந்தமாம்போல. [௪]

முத்திரச்சிகரம்வானைமுயங்கிநுண்டுளிச்சூற்கொண்டு
பைத்திரள்கொடிகளென்னும்பசுநரம்போடிநீடி
யத்திரளகடுவிம்மியாகமுமவிளர்த்தவால
சித்திரகங்கையென்னுஞ்செல்வியைப்பயந்ததன்றே. (ரு)

வேறு.

கோடனைத்தும்பலகோடிநதிவருதல்பதினொருமுக்கோடிதேவுந்
தேடரியதிரிகூடப்பரன்பணிக்குவானிழிந்துசேறல்காட்டு
நீடருவிதிசைதோறுங்குதிபாய்தலெண்டிசைக்குநிருபராவா
ராடல்பெறுசேனையொடுமண்ணலார்விழாக்காணவண்ணலாமால். (௬)

மொய்யலைத்தெண்டிரைக்கடன்மேல்வானிட்டிமுதுதரைமேற்படிவங்காட்டிச்
சையமுடிதொடுக்கனந்தமணிமுடிகள்கவித்ததலையருவிமேருள்
வையந்தாங்கியசேடன்வானகந்தாங்குறநிமிர்ந்தவகையாமன்றி
வெய்யமருத்துடணிகலிமேருவின்மேன்முடிகவித்தவிசையமாமால். (எ)

போராளிவனத்தெறுனிபுனலாமைவாமனஞ்சேற்பொலிவுகாட்டி
✠ யாராமமபிராமமிசைந்துசங்கிராமம்விளைத்தாயர்பாடிப்
○ பேராவிலினந்தொடர்ந்துவாங்குதிரையெனத்தாவும்பெருமையாலே
சீரார்பத்தவதாரச்செங்கணெடுமால்போலுந்தெய்வவாரி. (அ)

பொருந்துபெரும்புண்டரீகப்பொகுட்டினிடமருவியரும்புவனமீன்று
பருந்திகிரித்தண்டுகமண்டலமுகந்துமூலமறைபலவுமோதி
யரும்பெறலுந்தியந்தடத்துவந்துதிசைமுகமாகியன்னமூர்ந்து
விரும்புபாரதிமேவிப்பூவிலயன்போலாகும்விமலதீர்த்தம். (௯)

மாமலையின்மிசைப்பிறந்துதிரிகூடச்சிவபெருமான்வலப்பான்மன்னித்
தேமருவுமஞ்சனக்கண்களிகூரத்திருமேனிதிளைத்துமேவித்
தாமமிடுமணக்கோலமுகந்தருளியறம்வளர்க்குந்தகைமையாலே
பூவலர்செண்பகவனத்துநமையாளுமுமையாளைப்பொருவும்வாரி. (௰)

பொங்குமாகடலிடத்துத்தெள்ளமுதிற்பிறந்துசெழும்பூமேலாகிச்
சங்கமாநிதியினொடுமணியினொடுந்தருவினொடுந்தகவாய்த்தோன்றி
யெங்குமேயடுத்தவர்க்குவாழ்வருளியாக்கமதாமியற்கையாலே
செங்கண்மாலுரத்துறையுந்திருமானினுருமானுந்தெய்வவாரி. (௰௧)

வெண்கமலமேவியுயர்வெண்படிகமணிந்துவெள்ளைமேனிவாய்ந்து
தண்குமுதவாய்ச்சிவப்புந்தடங்குவளைக்கண்கறுப்புந்தழைப்பத்தோன்றி
வண்கலைபோதம்பயின்றுமாருத ‡ சொல்வளர்த்துமலரோடேந்திப்
பண்குலவத்தாலமிசைநடித்துநாமகட்பொருவும்பரமதீர்த்தம். (௰௨)

வேறு

ஆணிப்பொன்வயிரமுத்தமைவனந்தோளாயெனன்
மாணிக்கநறுந்தேனுதிவரைத்திரவியங்களெல்லாம்
பூணிக்கேதிரளாவேந்திப்பணிதலாற்குமரவேட்குக்
காணிக்கைகுறிஞ்சிமாக்களெய்த்ததுகடுக்கும்வாரி. (௰௩)

குயிற்றியகுரவஞ்சாத்திக்குமரிதாள்பணிந்துவேடர்
பயிற்றியகணைவாள்கொண்டுபறிபொருட்குறையாடி
யெயிற்றியர்குறும்புசாயவெழுந்ததுசெழுந்தண்கங்கை
தயித்தியர்குறும்புசாய்க்குஞ்சதமகன்சேனைமான. (௰௪)

---

✠ ஆராமம்-சோலை-அபிராமம்-அழகு-சங்கிராமம்-பொருதல்- எனப்பிரவாகத்தி னமேற்செல்லுகையிலும்- அவைபரசுராமாவதாரமும்- தசரதராமாவதாரமும்- பலபத்திராமாவதாரமும்ஆகியமூன்றும் எனத்திருமால்மேற்செல்லுகையிலும் பொருள்கொள்க

○ பேராவிலினந்தொடர்ந்து-என்றது- சிற்றாயருடன்ஆநிரைகாத்தகிருஷ்ணாவதார மெடுத்து என்னும்பொருள்படநின்றது.

‡ சொல்-என்பது-பிரவாகத்திற்குச்செல்லுங்கால் நெற்பயிர்.

கொன்றையங்குழல்வாய்க்கொண்டுகோவினந்தடாவேகிக்
கன்றினால்விளவெறிந்துபாலைமுன்கவர்ந்தவாற்றல்
முறாறில்வாய்க்குரவைபாடிமுல்லைமாதரைமயக்கி
மன்றன்மாமருதத்தூர்மொல்லைநத்தவழ்ந்ததாறு. (௰௫)

மையுலாங்குவளைக்காடாயிடையிடைவனசமபூத்து
மெய்யெல்லாம்விழியாநோக்கிவெள்ளைவாரணநடாத்திச்
செய்யவாடரம்பைநீமவ்ச்செழுந்தருநீழன்மன்னிச்
சையமார்சிலைறகளிர்ந்தசமமணிகர்க்குமவாரி. (௰௬)

பரத்தியருணக்குமீனுமளத்தியர்படுத்தவுப்புத்
திரைக்கடல்கொழித்தமுத்தும்பவளமுந்தாள்சேர்சங்கு
நரைத்திரைக்காதநால்வாரிநாவிலபொருளுமீய்ந்து
நுரைக்கடற்பொருள்கொள்வார்போனுழைந்ததுநுளையர்சேரி. (௰௭)

கொல்லையங்குறிஞ்சித்தேனுங்குடத்தியர்மிடவுப்பாலு
முல்லையார்ததியுநெய்யுமுதுபனைக்கரும்பின்சாறுந்
தொல்லுவர்க்கேணிநீருந்தொடுத்தெழுநீத்தமெம்மா
னெல்லைமாமதுரையீட்டிமெழுகடல்பொருவுமாதோ. (௰௮)

நால்வகைமலர்சேரைம்பானதியெறும்பருவக்கன்னி
கால்வழிக்கலிங்கமார்ப்பக்கனதளம்பணைப்பப்பாங்கின்
பால்வளைத்திரைக்கைவீசிப்பன்மலர்த்தொடைகள்சூடிச்
சேல்விழிகளிப்பவேலைச்செல்வனைமணந்ததன்றே. (௰௯)

தம்பமீனும்புத்துப்புச்சங்குதண்டரளந்தன்பாற்
பைம்பொருளனைத்துங்கொண்டார்பான்மைவானேதிநோக்கி
யிம்பர்மேற்றுவியைம்பாலிடத்தபல்பொருளுங்கொண்டு
கம்பமார்கடல்போக்தென்னப்போகதுடைவுணீத்தம். (௨௰)

கோளியமிடங்காரகக்குளைதிரைத்துரகந்தூண்டி
வாளைவாளாகவீசிக்கமடமாம்பரிசைலூங்கிக்
காணமாநாரையார்ப்பக்கனவளைவிடுத்தசேனை
நீளமார்கடன்மேற்சென்றுபொருவதுங்கர்க்குநீத்தம். (௨௧)

அரிசனீந்தகரமாஞ்சியகிற்றுணிகோட்டஞ்சாந்தந்
திரிபலைகரிக்கோடாரமயிற்பீலிதவதார
மரகதம்பவளநீலம்வயிரநித்திலங்கண்மற்று
நிரைநிரைகூலமேற்றிவணிகரைச்குமவாரி. (௨௨)

வேறு.

திங்கள்சூடியதேவனொருவனே
பொங்குபல்சமையப்பொருளாதல்போ

லங்கங்கேபெருத்தாயிரமாமுகக்
கங்கைபோன்றதுசித்திரகங்கையே. (உ௩)

பள்ளத்தாழ்வொடுமேடுறப்பாய்புன
லள்ளற்பாரொங்குமார்த்தநுவார்கடல்
வெள்ளத்துசினண்மேகலையார்ப்பதாம்
புள்ளினார்ப்பவள்போர்வையினார்ப்பரோ. (உ௪)

நீடுகோபுரநீண்மதிற்கோயில்பூங்
காடுமூருங்கயல்வெடிதாவுவ
நாடுபல்வளம்பார்க்குா திமகள்
கோடிகோடிவிழிபெறுங்கொள்கையாம். (உ௫)

கோதுமைசேர்திணைகூடியொழுகியுங்
காலவாரிகலக்கமறுமையான்
மேதுமேதும்விளைபொருள்வாஞ்சைசேர்
சேலுண்கண்ணியர்க்குள்ளந்தெளியுமோ. உ௬

எங்குமேவினுமீசனெம்மானரு
ளங்கமாமடியாரிடத்தாதல்போற்
சங்கநீர்நதியைந்திணைதாவினும்
பொங்குசீர்மருதம்பொலிந்தோங்குமே. உ௭

௧ வது திருநதிச்சருக்கமுற்றிற்று.

ஆகத் திருவிருத்தம்—கூ௰கூ.

---

## உ வது திருநாட்டுச்சருக்கம்.

ஆறுதுறைதோறுநிரையாயணைவகுப்பார்
சேறுகடலூடணைசெய்சேதரனிகர்ப்பா
ரேறுபுனல்வாவிகுளம்யாவையுநிறைப்பார்
வீறுகடல்வேறுசெய்வியன்சகரரொப்பார். (௧)

கொம்புகிளைகோடுசுமூறக்குழுமிமள்ள
ரம்புநதிவாவிதடமாரகழியாகத்
தம்படைசெயுந்தொழில்கள்வென்றிநிலைசூரப்
பைம்பயிரரண்புரிபடைத்தலைவரொத்தார். (உ)

சைவவிசையம்புரிசயம்பதிரிகூடத்
தெய்வநெறியிந்திரன்முதற்பரவல்செய்து
கைவருபடைத்தொழிலுடன்களமர்சென்று
றுய்வருபுணர்ச்சுழனியேர்வ்வளமையொன்றோ. (௩)

தேமடைமலர்க்கழனிதேனைவடியமள்ளர்
மாமடைசெறித்தவயல்வாய்மடைதிறந்து

தாமடைவளைக்குவைசரித்துமரைதாவி
யாமடைமிறித்தழுபடைக்கணிவகுப்பார். (௪)

உழவர்திரளார்ப்பொலியுமோங்குபுனலார்ப்பு
முழவுகிணையார்ப்பொலியுமுத்தமிழ்செய்நாடர்
விழவுமணமார்ப்பொலியுமேம்படலினன்றே
பழையகடலார்ப்பொலிபயப்படுவதம்மா. (௫)

வேறு

வேலையிற்செல்லும்போதும்வேலைபஞ்செட்டிழிபோது
மாலையொப்புடையசேவுமயிடமுந்திரளாய்வைகற்
காலையிற்பகலோடெல்லிகலந்தெனத்தாமான்பூண்ட
நீலநித்திலத்தின்கோவைநிரைவடம்புனையப்பூட்டி. (௬)

கார்நிறக்களமரீட்டங்கவின்பெறுபடைவாள்சேர்த்தி
யேர்பலநிரைத்துநாளிட்டிசைத்துழுசால்கடோறுங்
கூர்வலம்புரிசூன்முற்றிக்கொழிக்கின்றதரளராசி
பார்தனையுழுதபண்டைப்பன்றியைநகைத்தன்மானும். (௭)

பாலிகைபாத்தியாகவுழுதெருப்பரப்பியெங்குஞ்
சாலியாழ்கெனவேமள்ளர்தண்முளைதெளிப்பவாரி
போலெழுதுரவையீட்டம்புதுப்புனற்கொழுநன்வேட்ட
வேலிசூழ்பழனக்கன்னிவிதிமணச்சடங்குபோலும். (௮)

முத்தெனமுளைத்துப்பொன்னின்முகிழ்த்தம்விளைத்துக்கால்கள்
வித்துருமம்பொனீட்டிமரகதம்விரித்துநீல
மொய்த்தசிர்நாறுநாறுமுறைகண்டுசேறுநாறச்
செய்த்தலையுழுதுசேர்ப்பத்தெளிசெய்துதெய்வம்போற்றி. (௯)

அரித்துடன்பெயர்த்துவெவ்வேறமைத்தலுமமைத்தநாறு
பரித்தலுங்கழனிதோறும்பதித்தலும்புரியுமள்ளர்
பிரித்தலும்பிரிக்தார்தம்மைப்பேணலும்பேணிப்பின்னர்ப்
பொருத்தலுஞ்செயுமமைச்சர்போல்வர்மன்பொருவும்பண்ணை. (௰)

குவவுநீறணிந்ததென்னன்கூனைநிமிர்த்துமானி
தவமெனவளர்த்துழுவர்தமிழெனத்தழைத்துவஞ்சர்
பவமெனக்கருவாய்கல்லோர்பலமெனவீன்றியாவுஞ்
சிவமெனத்தெளிந்தோர்முத்திதிருவெனவிளைந்தசென்னெல். (௰௧)

நற்பொறிகருவாம்போதுநாடுக்கணிகைமாரின்
முற்படமறைந்துதோன்றிமுகமெடுத்தாடிப்பின்னர்
விற்பொலிபுருவங்கோட்டிவிளைந்துநெட்டிலைமுக்காட்டின்
கற்புடைமடவார்நாணங்காட்டுவகதிர்ச்செஞ்சாலி. (௰௨)

வரம்புவயற்செந்நெலுக்குவாழ்வேலியான்கரும்பு
கரும்பினுக்குநாறுங்கதலிக்கதலிகட்குக்கமுகவனை
மருங்கமுகுக்குயர்தாழையணிவேலியதன்புறத்துக்
குரம்பையுடைநீர்க்கரும்புங்கொங்குவளைசெங்குவளை. (௨௧)

தாவிவளத்திடைப்பகற்பூந்தாதாடிவருவதனைக்
காவிமலர்கண்காட்டக்கடிக்குமுதம்வாய்விள்ளப்
பூவனசந்தவடைப்பப்பேட்டளிக்குப்புன்மாலை
வாவியிடைத்துனிதீர்ப்பான்வண்டிசைக்குமண்டிசைக்கும். (௨௨)

வானுறுதலைமடுக்குமாளிகையுஞ்சூளிகையுங்
கானுறுகுன்றம்போற்கார்மேறுஞ்சேர்மருங்கு
பானுறுகரும்பிசைக்கும்பணைநாறுகரும்பிசைக்குந்
தேனுறுகரும்பிசைக்குந்தேங்காவிபூங்காவி. (௨௩)

காமாரிதிரிகூடவரைச்சாரற்கடுங்குளிரா
னுமாரிங்கிருக்கவெனுநடுங்கொடுங்கோடை
தேமாரிபுயல்பொழியுந்திங்கடொறுமும்மாரி
பூமாரிதருமருவிப்பொன்மாரிதருமருவி. (௨௪)

முருந்துநகையார்கூந்தன்முகிற்புகையுமகிற்புகையும்
விருந்துபுறந்தருவார்கள்விரும்புகையில்வரும்புகையுங்
கரும்பாலடும்புகையுங்கடும்பரவிமகப்புகையும்
வரம்பிலாத்திசைதோறுமயிலாடமயிலாடும். (௨௫)

தேன்குளிக்குந்தேன்வாவித்திரைகுளிக்குந்துவியனந்
கயன்குளிக்கும்பசுந்தென்றல்களைகுளிக்குமெறிதரங்க
மீன்குளிக்கும்புனலயாறுமிசைகுளிக்குங்காவிமந்
மான்குளிக்கும்விரிபாளைமடல்குளிக்கும்வரிவாளை. (௨௬)

வண்டாடுமலர்க்கூந்தல்வாராடுங்களபமுலை
கண்டாடுமாதரிதழ்க்கனியாடுமதுரமொழி
விண்டாடுங்கிளிப்பிள்ளைவியர்த்தாடுமடப்பூவை
கொண்டாடுங்குயிற்பேடைகூத்தாடும்பசுந்தோகை. (௨௭)

வள்ளைப்பாடலினமடவார்வளரிசையமலர்க்குழன்மேற்
கள்ளைப்பானஞ்செயும்போற்கற்குமளியளியிசையைப்
பிள்ளைக்கோகிலம்பயிலுங்குயிலிசையைப்பெருஞ்சோலைக்
கிள்ளையபேடைகள்பயின்றுபூவையுடன்கிளக்குமால். (௨௮)

பண்ணுறுமொழியாடாப்பசர்நாணஞ்செயவேண்டிக்
கண்ணுனைசொழுநர்புணர்கலவிமொழிகுளறியதில்
விண்ணுணமையாதான்மிகநாணும்பசுங்கிள்ளை
பெண்ணூர்தஞ்சின்னநடைக்கன்னநடைபேதுறுமால். (௨௯)

அன்னவரிசமும்யாறுமம்பொனூடாக்கக்காட்டும்
பொன்னணிமறுகும்வாணர்புலமையுஞ்சங்கமேய
மன்னுசீர்விழாவுமாதர்வதனமுந்திங்களார்க்கு
மின்னனூர்தனமுஞ்சோலைவேலியுநாந்தகாறும். (௪௭)

காவிகள்கிளைக்குமாலைகமழ்நுழற்கிளைக்குமாலை
யேவுநீர்ப்பழனதோட்டமிடந்தொறும்பழனத்தோட்ட
மாவிவாய்க்கமடமேயுமறங்கள்வாய்க்கமடமேயுந
லாவியமடப்பரிலன்னந்துறைதொறுமடப்பாலனனம். [௪௮]

புயல்கள்கோடரங்குலாவும்பொழில்கள்கோடரங்குலாவுங்
கயல்கண்மாதரங்கமேவுங்கனகமாதரங்கமேவு
மியலிசைகொழிக்குஞ்சங்கமினமணிகொழிக்குஞ்சங்கம்
வயலெலாம்பொருங்காலாறுமலரெலாம்பொருங் ✠ காலாறு. (௪௯)

அலைபடுங்கொடியும்யாறுமலிபடுமுணவுந்தெவ்வு
முலைபடுங்கனியும்பொன்னுமுடைபடுந்தீயுந்தூள
மலைபடுமலருமஞ்சம்வளைபடுந்தனுவுஞ்செய்யுங்
கலைபடுமதியுமன்றுங்களைபடுந்தடமுஞ்சாந்தம். (௫௰]

வேறு.

செய்காட்டுந்தாமரையாற்றேன்காட்டுங்கழுநீரா
மெய்காட்டுநறுந்தளவாமுருகாட்டுமாந்தளிராக்
கைகாட்டிமுகங்காட்டிக்கண்காட்டிக்கைகாட்டி
மெய்காட்டித்திருமடந்தைவிளையாடுந்திருநாடு. (௫௧)

பண்ணவருங்கடவுளரும்பரவுசராசரமாகக்
கண்ணகன்சீர்த்திசைதோறுங்காதலாயுறைகுவரோ
லண்ணலானன்னகர்த்தென்னூரியநாட்டணிபுகழ்தல்
விண்ணவர்கட்கெய்தரிமேமதினியோர்க்கெளிதாமே. (௫௨)

பூவினுக்கிறைவர்கஞ்சப்பூமகட்கிறைவர்தங்க
ளாவிக்கிறைவர்யாழ்தென்னூரியநாடுசொற்றும்
பாவினிற்பயனிற்சொல்லிற்பண்ணினிற்பயினுமேதாது
நாவினுக்கினியதானநகரினிப்பகர்தல்செய்வாம். (௫௩)

உ வது-திருநாட்டுச்சருக்கமுற்றிற்று.

ஆகத்திருவிருத்தம் - ௫௰௩.

---

✠ காலாறு - வண்டு.

## ௩-வது-திருநகரச்சருக்கம்.

அகிலகாரணனகிலலோகமும்படைத்தளித்தருளிடமாகிச்
சகலகாலமுமழிவிலாத்தலமெனுந்தகைமையாற்சதுர்வேதன்
பகலிராத்தொறுந்தவிர்படுபலபருப்பதங்களுங்கடல்யாவும்
புகலிடம்பெறவந்திடும்பிடித்ததாம்புரிசையுமகப்பாவும். (க)

பூமிக்கோராசிருக்கைதென்புடார்ச்சுனபுண்ணியபுரமாகு
நேமிக்குளறமோநகர்ப்புறஞ்சூழ்தருநெடுங்கிலைப்பெருஞாயில்
வாமக்குன்றெலாமாடங்கள்வளைக்கொருமருகனார்திருக்கோயி
லேமக்குன்றஞ்சூழ்காற்கிரிகோபுரமெண்டுலக்கிரிமாதோ (உ)

இஞ்சிசூழ்வதுநாற்றிசைப்புறமெலாமிடந்தொறுந்துளிதூங்க
மஞ்சுசூழ்வதுமணிமதிற்புறமெலாமங்கையரடிசேர்செம்
பஞ்சுசூழ்வதுமன்னர்பொன்முடியெலாம்பயிலுமங்கலநாத
மஞ்சுசூழ்வதுமனையெலாமணிகொழித்தாறுசூழ்வதுமூதூர், (ங)

நாட்டம்போல்வதுதளைமகட்கநகர்நாடொறுமளகேசன்
றேட்டம்போல்வதுதிரள்பெறுமிருநிதிதிரிபுரைசெழுங்காமக்
கோட்டம்போல்வதுகுளிரறச்சாலைநற்குறுமுனிபெரும்பான்மை
நீட்டம்போல்வதுநிகழ்தருபதிதொறுநிறைதருபெருஞ்செல்வம், (ச)

நீலமாடமுநித்திலத்தெற்றியுநிரைத்தனதெருத்தோறுங்
கோலமோதிமமாகியொவ்வோருருகொண்டுபற்பலகால
மாலமுண்டவனடிமுடிதேடுவாரணிவிழாத்தொறுங்காண்பான்
மூலமானபற்பலவுருக்கொடுநகர்சூழ்நதுநிற்பதுமாலும். (ரு)

வேறு.

முந்தமாமறையோர்முதுவீதிவாய்
விந்தைநாரியர்மேடையின்மேற்கிளி
சிந்தைவேதச்சிறாரயிர்ப்பாயினுஞ்
சந்தைசொல்லுந்தனித்தனிமாடங்கள். (சு)

விரும்புகைக்குலமேகத்துளியெலாங்
கரும்புகைக்குங்கனிமொழிமாதரார்
சுரும்புகைக்குமலர்க்குழல்சூட்டகில்
லரும்புகைக்குளிர்வாசனைவீசுமால். (எ)

வேறு.

விடமுந்தூயதெள்ளமுதமுமின்னனார்விழிகளினிடைத்தோன்றுங்
கடவுதண்டமுங்கருணையுமனுநெறிக்காவலரிடைத்தோன்றுஞ்
சுடரிற்காய்வதுங்குளிர்துளிபொழிவதுஞ்சூரியரிடைத்தோன்று
மடைவுசேர்பெருந்தவத்தர்பாற்சாபமுமநுக்கிரகமுந்தோன்றும். (அ)

கறைகொள்கந்தரக்கடவுளைச்சேர்ந்தபின்கறைதவிர்மதியோங்கிப்
பிறைகளாயிரகோடியாய்க்கிளைத்துமேற்பிறழ்வதோபெருவானத்
துறைகொள்கங்கையின்பெருக்கமோபுரந்தரன்சுடர்ப்படைதனிலீர்ந்த
சிறைகள்குன்றெலாமுளைத்தவோமாடமேற்செழுமணிக்கொடியீட்டம். (௯)

பின்னல்சேர்நதிவேணியார்முத்தலைப்பிறங்கலிலயனுகி
முன்னெலாமிருந்துலகெலாம்படைத்தநான்முகிலெலாமதியெல்லாம்
பொன்னெலாநவமணியெலாமணங்கமழ்பூவெலாமுயர்வானின்
மின்னெலாங்கொடுசமைத்ததாமிந்நகர்மின்னனூர்வடிவெல்லாம். ௰

வேறு.

விளர்தருமதியின்பாலோவெள்ளிவள்ளத்தின்பாலோ
கிளர்வதென்றுணராப்பிள்ளைக்கிளைகண்முகப்பவேகித்
தளர்வதுகண்மேடைத்தளந்தொறுந்தேய்ந்ததிங்கள்
வளர்வதுதவளமாடம்வடிம்புதோய்சுதையாலன்றே. (௰௧)

பயிலுமேனிலைகடோறும்பர்தடிக்தாடுவாரை
மயிலெனக்குயில்பின்காட்டமழலைவாயிசையாலஞ்சிக்
குயிலெனமயில்பின்காட்டக்குழைகளாலளககொத்தால்.
வெயிலொடுபுயலுங்காட்டிமீட்டுமீட்டழையாநிற்பார். (௰௨)

பச்சையாற்பவளக்கொத்தாற்பதுமராகத்தான்முத்தால்
வச்சிரவயிரேயத்தான்மற்றுளமணிகளாலு
மச்சினில்வார்த்தாலென்னவணிகிளர்மாடவீதி
❋ நச்சரவுச்சியாட்குநவமணிமாலைமானும். (௰௩)

வேறு.

தெளிக்குமணிவளையார்ப்பச்சிலம்பலம்பவாலுயர்ந்த
பளிக்குமண்மேடையின்மேற்பந்தாடல்பயில்வாரை
டளிக்குலஞ்சேர்பூந்தடத்திலன்னமெனப்பொன்னூட்டிக்
களிக்கும்வரநதிக்கரையிற்கனவியன்னஞ்சூழுமால். (௰௪)

வண்டாடுஞ்சோலைகளுமயிலாடுஞ்சாலைகளும்
விண்டாடுமேடைகளுங்கண்டுகண்டுமேதினிமான்
பண்டாடுங்கரங்களன்றிப்பயில்கோடிகரமெடுத்துக்
கொண்டாடுவதுபோலுமணிமாடக்கொடியெல்லாம். (௰௫)

குவவுதமணியச்சிகரிக்கோலவடவரைகாட்ட
விவருமணிமேனிலைகளெழுபுவனமுறைகாட்ட
நவமணிகளழுதியதுநவக்கிரகநிலைகாட்ட
நாவல்கணிதநூலோர்க்குநான்மயக்கங்காட்டுமால். (௰௬)

---

❋ நச்சரவுச்சியாள் - பூதேவி.

ஒண்மணிமண்டபந்தோறுமுயர்கொடிகள்வானளவித்
திண்மையுறநின்றுடல்செங்கதிரோன்றேர்க்குதகளும்
வெண்மதியிற்படர்மாசும்விண்மீதுபடராமே
மண்மகள்செங்கரநுஞசுகொண்டுதுடைப்பதுமானும். [௰எ]

அரும்படிகநிலத்துறுமணங்காளையாடவர்கள
விரும்படிகளெனப்பரவியுனமுடிமேலலத்தகங்கள்
வரும்படிகண்டலாவிளைப்பார்வருகாலைமருமாலைச்
சுரும்படிகளடிசசுவடுதோனருமனமறைத்திடுமால். ௰அ

வேறு.

பொதிர்படக்ககனத்தாவும்பொலன்மணிமாடகோடிக்
கதிர்கள்கண்வழுக்கிநதிங்கள்கனககோபுரத்தின்மோதிப்
பிதிர்படுமதனுளன்றேபிறையதாயக்குறையாயெங்கும்
விதிர்படுநாளாயக்கோளாய்மீனகளாய்ப்பரம்பும்வானம். ௰௯

விண்டருங்கொடிஞ்சித்திண்டேர்விழாவருவசநதவீதி
யெண்டரும்புயதெம்மாலையென்றுமேநின்றுபோற்றுந
தொண்டர்தங்குழாங்கள்போலுஞ்சுதைநெடுமாடமெல்லா
மண்டர்தங்குழாங்களபோலுமம்பொனடரங்கமெல்லாம். ௨௰

வேறு.

தாயினமிக்கவன்றொடொழமுச்சகங்
கோயின்மிக்குவருபெருங்கொள்கையாற
சேயினமிக்குலவுண்டுமிழுசிதரன
வாயினமிககதுகோபுரவாயிலே. ௨௧

வேறு.

வாடைவந்துலவியபடிகமாமணி
மேடையிலுடுக்குழாத்துலவும்வெண்பிறை
யோடைநீர்ப்பெருநதடமதனிலோதிமப்
பேடைதன்பார்பபொடும்பெயர்தலபோலுமால். ௨௨

எகமாமரகதத்தியற்றுமாளிகை
மாகமார்சூளிகைதொடுத்துமாடெல்லாம்
பாகமேற்பதிந்தொளிர்பதுமராகங்கண்
மேகமேறபரந்தொளிர்மின்கண்மானுமே. ௨௩

சேடகமுயர்நிலைதீட்டுஞ்சித்திர
நாடகப்பத்திசேர்நடத்தைநாடொறும்
பாடகக்கால்களாற்பயின்றதாலன்றே
வாடலிலுயர்ந்தனரமரர்மாதரே. ௨௪

பளிக்குமாளிகையின்மேற்பவளத்துளிகள்
குளிக்குநீர்க்குளங்கண்மேற்குமுதம்பூத்தநாங்
களிக்கருமுகிலினஞ்சூழ்ந்துலாவுதல்
வளிப்புறுசிறையளிக்கணங்களோய்க்குமால். (௨௫)

இந்திரநீலத்தினியன்றமாடமேற்
சந்திரகாந்தத்திறசமைத்ததுவிக
ளந்தரமதிக்குநீரளிந்தலவேனிலுங்
காதரமபொழிந்துளிக்காலங்காட்டுமே. (௨௬)

வேறு.

சார்தலைக்குமடவார்கள்வீதிதொறுஞ்சவைதொறுஞ்சென்
மாதலைக்குங்குமச்சேறுமனுறாலும்வழுக்கெடுக்குந
தேசதலைக்குளுழவோர்கருநதெய்வரிசிலைபோற்றுது
காநதலைகரும்பிநிவோர்க்குமகைகூடபுங் * கதிர்ச்சாலி. (௨௭

வேறு.

காமர்பொனமாளிகைக்கவினிரண்டுபான
மாமணிவயிரததான்முகப்புவாயநிட
லேமமால்வரையிருபாலும்பௌவநாட்
சோமனுமிரவியுஞ்சுடர்தனமானுமே. [௨௮

திங்களைமுகமெனச்செய்துநான்முகன
பங்கயமுகிழினைபதித்ததாலனறே
கஙகையாகுவிமுலைநாளும்வெய்யவ
னங்கதிர்பரபினுமலாநதிடாததே. (௨௯]

துன்னியகொழுநர்பாற்சுரதநாரியர்
முனனியபுலவியின்மொழியைமேடைமேற்
பனனியபசுங்கிளியயிலுமபானமைவான
கன்னியைப்பயிற்றுவதாமதுலரோ. (௩௰)

வேறு.

சிறுகாலையட்டில்புகலருத்தியுறசசமைததலசுவைதிருத்தியூட்டன்
மறுகாலையென்றுதவிருநதழைத்தன்மகப்பெறுதனமடநாணச்சம்
பெறுகாலையினபுறுதனமுன்னுறங்கப்பின்னுறங்கல் ‡ பின்னெழாத
துறுகாலைதொழுதெழுதல்பன்னிரண்டுமநகர்க்கறபுடையோர்செய்கை. [௩௧]

ஓதுமறையாற்பிரமமுத்தழலாற்றெய்வமுயர்பலியாற்பூதம்
பேதமானுடம்திதிபூசையாறறருப்பணத்தாறபிதிர்க்களயாக
மேதகுமைவகைவேள்வியிவ்வகைசெய்தறுதொழிலும்விதியாலாற்றிப்
போதநெறிக்கொருதுணையாய்மழைக்கொருவித்தாயுறைவர்புரிநூற்செல்வர். (௩௨

---

* கதிர்ச்சாலிசூல் பதுபின்னையதறகு-அருந்ததி எனப்பொருள்படும்.
‡ பின்னெழாதல்-கணவன்றுயில்நீங்கெழுமுன்னெழுதல்.

மூலமறைமறுவோதிமுறைபெறுசைவாகமத்தான்முதல்வர்பூசை
காலமுறவித்தியநைமித்தியகாமியங்களிறுக்குத்திறுற்றி
யாலமமுதன்டபிரானடியர்குழாத்திருந்தமுதமருத்திராதன்
சீலமலதணராதேயுணர்ந்திருப்பர்மூப்பொழுதஞ்சிவனூற்செல்வர். ௧௩

காலதொறுமுறைமையொடுறுலாய்ந்தகுடிமுதலாங்காப்புபோற்றி
மேலுறுபாவலர்க்கும்வேதியர்க்குமீய்ந்துபலவேள்விவேட்டுச்
சாலதனிற்சிவபெருமானமர்களொடுந்தமர்களொடுந்தகவாயுண்டு
மாலதொறுமொறருய்ந்துயிலிடத்தும்பூராகாப்பர்மனுநூற்செல்வர். ௧௪

புங்கமாமறையோதிவாணிகந்தொட்டேறுதொழிலாற்பொருள்களாக்கிப்
பிங்கலற்கும் ○ கருகூலம்போலிருப்பொருகூலம்பிரியாச்செல்வர்
கங்கைமரபினிலுதித்துக்கலைபயினறுபொருள்வளர்த்துக்கலிகளாய
வெங்களைகட்டுயர்தருமவேளாண்மைபுரிந்திருப்பாமேழிச்செல்வர். ௧௫

வேறு.

மருவுறுநன்னெறிநிலத்துவாய்மையெனும்விதைதெளித்துப்
பெருகுகுணநீராய்ந்துபபிறங்குசினக்களைகடிந்து
தருமமெனுமபயிரவளாந்துசசகலபோகமும்விளைக்கும்
பொருவருஞ்சீரத்திருநகரம்புடார்சஞனபுண்ணியபுரமே. ௧௬

மாமணிமண்டபமாடமாளிகைகளுறுப்பாகக்
கோமதியமுகமாகக்கொங்கைகோபுரமாகக
காமருதேரலகுலாக்கடிமதிளமேகலையாகப
பூமகளாராசிருக்கும்பொன்னகரமிந்நகரம். ௧௭

இல்லறமுந்துறவறமுமிடைவிடார்வெறுக்கைவிடார்
பல்பயிர்க்கும்யோகியர்க்கும்பதந்தொறுங்கொணமுப்பொழியு
நல்லவரும்விளையாட்டுநயந்தவருஞ்சூதெறிவா
ரல்லவருமெல்லவருமாதரிப்பாரிரவலரை. ௧௮

வேறு.

பன்னகர்பதியாமென்கோபாதலத்தரசின்வாழ்வாற்
பொன்னகரொன்கோபுத்தேட்பொலிவினுன்முனிவோர்சித்தர்
கின்னரர்பதியாமெனகோவாங்கவாகிளைக்குழாத்தா
லிந்நகர்க்கிணையாவோருரிசைக்கலாந்தகைமைத்தாமோ. ௧௯

பன்னகசயனருட்டிற்பங்கயனுலகிற்றேவர்
மன்னகர்சுவர்க்கந்தனில்வளமிகுநகையாரு
நன்னகரெனவேயிந்நகர்ப்பெயரிடுவாரானு
லிந்நகர்ப்பெருஞ்சீர்கூறவெம்மனோர்க்கெளியதாமே. ௨௰

---

○ கருகூலம்-பொக்கிஷம்-அது.இக்காலத்தில்-கருவேலமெனமருவிவழங்குகின்றது

இர்தமாநகரையாளுமிறையவனிமையடமீன்ற
செந்துவர்க்கனிவாய்ச்செல்விசெண்பகவல்லிபாக
னநதமோடாதியில்லானுயினுமெவர்க்குந்தாயாய்த்
தந்தையாய்த்தலைவனுவான்சரிதையைப்பரவல்செய்வாம். ௪௩

௩-வது திருநகரச்சருக்கமுற்றிற்று-
ஆகத் திருவிருத்தம்—௭௬-

---

## ௪- வது புராணவரலாற்றுச்சருக்கம்

விரைசெய்தாமரையியன்கலைமானுடனமேவி
முருகுயிர்த்துநால்வாயுறவாரணமுழங்கி
யரசமைந்தபூந்தணபெகமண்டலமசைத்துப்
புரையிலாவனந்திசைமுகக்கடவுளைப்பொருவும். ௧

துளவணிந்துவேயிசைதந்துசுரபயுடைப்பாலுங்
களவுசெயதுகாறறளையுண்டுகாவிளங்கனருல்
விளைவெறிந்துநீளகுருந்தமேலிவர்ந்துவிண்ணெடுபோ
ரளவுசெய்தலாலாழிமால்பொருவுமவ்வனமே. ௨

வேள்விபற்பலபுரிந்துவான்றருநிழனமேவித
தாழ்விலாமுகிலூர்ந்துநீள்வச்சிரந்தரிந்து
வாழ்வுசேரரமகளிராடலினகமலர்ந்து
சூழ்குலாவனம்பொன்னகர்க்கிறையெனத்தோன்றும். ௩

துன்னுதாதணிந்தெழிலிநீர்மஞ்சனஞ்சொரிந்து
வன்னிபாதிரிமாதவிகூவிளம்வகுளம்
பன்னுகூதமேற்றளிர்மலரருச்சனைபயினறு
கன்னிநீள்வனஞ்சிவபிரானடியவர்கடுக்கும். ௪

முறைபழுத்தமெய்யம்மனத்துடைமுனிவரர்வேண்ட
மறைபழுத்தவாய்த்திசைமுகன்குசையினல்வகுத்த
நிறைபழுத்ததோர்நேமியினகத்ததாய்நிரம்பி
நறைபழுத்ததுங்கைசேர்நைமிசாரணியம். ௫

வாவிதாமரைவாண்முகமலர்ந்துநன்மருங்கிற்
காவிசாத்தியுற்பலமெனுங்கண்மலர்முகிழ்த்து
மேவிமாதவர்நிகர்ப்பதுமின்னனூர்குழல்போ
ஞுவிமாமணங்கமழ்வதுநைமிசாரணியம். ௬

தேனுர்தும்பியுமெடுத்தபண்ணிசைசெவிமடுத்து
மானும்வெங்கையுமொருதலைத்துயில்வதுமயில்கள்
கானநாடகம்பயிற்றக்கானமாமழைகண்
ஞானயோகிகள்பயில்வதுநைமிசாரணியம். ௭



ஆலமுண்டவர்க்கன்பராயறிஞராயழியாக்
காலமூன்றையுமுணர்ந்தவரிருப்பதுங்கருதுஞ்
சீலமூன்றினமற்றெனிந்துமெய்த்தவங்கள்செய்வார்க்கு
ஞாலமூன்றின்மேற்கதிதருநைமிசாரணியம. (அ)

வேறு.

அவ்வனஞ்செய்யதாகவருந்தவவுழவர்யாரு
மெய்வரும்விதியேர்ப்பூட்டிச்சமிதைவித்தெறிந்துவேழக்
கைவருபருமைநெய்யாம்புனல்சொரிந்தனேககாலஞ்
சைவவைதிகவேள்வியாண்மைச்சத்திரமகங்கள்செய்தார். (௯)

பண்ணியுதவங்கடானம்பரிவினுற்புரிவார்க்கறிக்
கண்ணினுற்கண்டுளார்க்குங்கதியெனும்விதியையோர்ந்து
நண்ணியகலைகள்யாவுநவின்றருள்சூதனன்றோர்
புண்ணியவேள்விச்சாலைபுகுந்தனன்முனிவோர்சூழ. (௰)

பொருந்தவச்சூதர்சூழாப்புலன்மகத்தேர்நடாவி
யிருந்தவச்சூதர்போலுமிருடியர்வருடியேதகி
வருந்தவச்சூதன்றன்னைமாதவவியாதனெனனும்
பெருந்தவச்சூதஞ்சேர்ந்தபேரிசைகருயிலைச்சூழ்ந்தார். (௰க)

ஆசனத்திருத்திவாழ்த்தியருக்கியமுதலநல்கிப்
பூசனைபுரிந்தியாங்கள்புரிமகந்தொடுத்தகாலை
வாசனைமுகூர்த்தமன்றேவந்தனைபெரியோயென்று
தேசனைவினவிக்கேட்பார்சிறைதருபுராணமெல்லாம். (௰உ)

பண்ணிபல்பலபுராணமபகர்ந்தபின்பதினெனன
வெண்ணியசிவபுராணமீனாதிலிலக்கமாக
நண்ணியகாந்தந்தன்னினனகர்த்திருக்குற்றலப்
புண்ணியபுராணமெங்கள்புந்தியினுவட்டாதென்றும். (௰௩)

அன்னதைச்சுருக்கமாகவறைந்தனையடுநோய்தீர்ப்பார்
முன்னுமந்திரத்தையோதிமூலம்வித்தறியார்போலப்
பன்னரும்பலநூல்கேட்டுந்தவிர்ந்திலபதமேற்றுக
நன்னகர்ப்புராணமின்னுநகெமக்கருள்வாயென்றார். (௰௪)

மோனநீதுரைப்பச்சூதன்மொழிகுவானமுக்கணுர்க்குத்
தானமெயனந்தமாகுமவைகளிற்றவபூவினபத
தேனமர்திருக்குற்றலஞ்சிவரகசியமாமீது
ஞானபக்குவத்தார்க்கன்றியாவர்க்குநவிலொணுதால். (௰௫)

தன்மகன்முதலோராறுதலையர்நூற்குரியரோனு
முன்னவர்களியாரிமூவைர்துதிறத்தார்க்கோர்தார்
சொன்னகாலிருவருள்ளூர்தூயவர்நால்வர்தம்பி
[illegible]ன்னமெயனையரானீர்பால்பிரித்தறிந்தவாற்றால் (௰௬)

அதிகாரக்தேவராலுமறிவதற்கரிதாமுண்மை
மதிவலிகலத்திருலேவினவுதல்வல்லரானீர் -
புதிமுதலுரைத்தமூன்றிற்பரமெனும்பொருளைச்சேரும்
விதிவலியுடையீர்நீரேயென்றுமேல்வியாதுசொல்வான். ௰எ]

வேறு.

சீர்பெருகுகாந்தமெனுஞ்சிவபுராணச்செழுஞ்சங்கிதைகளாதிற்
கார்பெருகுகுழலுமையாட்கெம்பிரானுரைததருள்சங்கரசங்கீதை
யேர்பெருகுதிருமடிமேலிருந்தருளிக்குமாரதேசிகனெங்கோமா
னேர்பெருகவுணர்ந்துகும்பசம்பவனுக்குபதேசமிகழ்த்தினால். (௰அ)

மாதவரிலுயர்மலையமாமுனிவனதையுணர்ந்துவகைமைசாலப்
பூதலத்திலுணர்த்தியதாலகத்தியசங்கிதையெனவும்புகலவர்மேலோ
ரீதலதுசனற்குமாரசங்கிதையுந்தருபொருளாமெழிறசெவ்வான
நீதிலெழுமதிபோலுங்குற்றாலமகிமையெனவியாதுபோற்றி. [௰௯]

விரிகூடக்கம்பகும்பக்களிறுபிளிறிடவுரித்துவிரித்துவேங்கை
யுரிகூடவுடுத்தருளிநடித்தருளுஞ்சிவபெருமானுலகமீன்றாள்
புரிகூடுநதிருமணத்தின்பொருட்டாகக்குறுமுனிகருப்புகன்றகாதை
திரிகூடத்தலமகிமைதிரிகூடவரைமுதலாச்செப்புகின்றான். [௨௰]

௪-வது-புராணவரலாற்றுச்சருக்கமுற்றிற்று.
ஆகத்திருவிருத்தம்--௱அ௰.

## ரு--வது. திரிகூடமலைச்சருக்கம்.

தேயாழிசைக்கின்னரர்கானமுங்
காதல்விஞ்சையர்பண்ணிசைகானமுஞ்
சீதமால்வரைத்திங்குளிர்க்கானமும்
வேதகானமுமிக்கறுதிக்கெலாம். [௧)

முழை கடோறுமுனிவர்குழாங்களே
யுழைகடோறுமுயர்மகச்சாலையே
கழைகளேவுங்கதிர்மணிமுத்தமே
மழைகளேவுமருவியைமானுமே. ௨)

பந்திபாய்முகில்பாய்மதமாவெனத்
தந்திபாயுமத்தந்திரையைவெற்பென
மந்திபாயுமம்மந்திகள்பாய்தல்போ
லுந்திபாயுமுயர்வரைச்சார்பெலாம். (௩)

கானயாறுங்கடிமலர்ச்சோலைவாய்த்
தேனயாறுகதிசைபொருகைமலைத்
தானயாறுந்தழைவனச்சோலையும்
வானயாறும்மழையுமாறுமே. [௪)

செருவிலார்த்தெழுதேனபொரத்தேனிழு
லருவியார்த்திடவாரதஙிமமைவன
மிருவியாரகரும்புனததிருமென்னிலாக்
குருவியார்ப்பகீருரலபரநதாரகுமே. ௫

குழுதமொததவிதழ்க்குறககோதைமார்
கழுகநெறறிகதிபடாமுனறிலைாய
விழுதினைக்குவிலையெனநோககுநே
ரழுதினைசசுரமாதரளபபரால். ௬

வேறு.

சீர்மலிபடிகப்பாறைபத்தியாச்செல்வானமீனை
நீர்தருகயலபோறகொததுநிறைதருமடபபுளளீட்ட
மூரமணிச்சுடிகைபபாநதளுறகையெனறுதிபூதிக
காமலிகுளிாகருததீபபோறகாயவனஙிழககூனமநதி. ௭

நகிலெழும்புகையார்க்கெனனநனிசெழுபொருபபின்மாத
ர்கிலெழும்புகையுமவேடரடுபுனததகளூச்சாநத
மகிலெழும்புகையுமவேதவேளவியினபுகையும்விண்மேன்
முகிலெழும்புகைபோனமொயபபமுகிழபபாவானவருநாட்டம். ௮

ஆழ்புனலருவியார்ப்புமாநதனனரைநதநாறு
வேள்வியிருாபபுமேலைவினனவராாபபுமாதர்
வாழுபுனக்கவண்கல்லாாபபுமணிவரையாாபபுமாங்கே
யூழ்வலிகடக்கினரூபோதுருமொலிகடககுமாதோ. ௯

மழைதருமுததும்வாளமதிதருமுததுநீணட
புழைதருபணைககைநீலப்பொருபபினமாமருபபினமுத்தும்
கழைதருமுததுமேனககளிறுகோடுருததமுததும்
விழைதரவொளிருஞ்சாரனமீனெருளிரவாளமேமக்கும். ௰

வேறு.

சோலைகாட்டுநதுதையிருளாலிரு
வேலைகாட்டலிலாமையினமெயத்தவர்
காலைகாட்டுவவாவிசசமலங்கள்
மாலைகாட்டுமலர்தருசாவியே. ௰௧

மாகமேனகைமங்கையுருபபூசி
மோகநாடகம்பாாப்பதினமொய்த்தெழார்
தோகைமாமயிலாடலைச்சோலைவாய்
மேகமேனிறுபார்ப்பர்வினோருரெல்லாம். ௰௨

மலைகடாவுமருவிகள்வானதித்
தலைகடாவுந்தலைமதிமானின்மேற்
கலைகடாவுங்ககனத்துமேடைமே
னிலைகடாவுநிரைவரையாடரோ. ௰௩

கோலமாங்குயில்காவினிற்கூவுத
லாலமுண்டவனிங்குளனாதலாற்
றூலம்வானநடவப்பெறீரென
மாலயன்றனைக்கூவுதன் மானுமே. ௰௪

அருவியாடிக்கரைபுகுவார்க்கண்டர்
தருவிமானமொப்பாமலர்ச்சண்பக
மருவிமாருதத்தாலுகுமாமலா
பொருவில்வானவர்பூமழைபோலுமால். ௰௫

சாலமாநறவம்பணைசாதியே
சாலமாநறவ்ம்பணைசாதியே
யேலமாரமிலவங்காறுமே
யேலமாரமிலவங்காறுமே. ௰௬

கானத்தும்பிகடாங்கவிப்பாலெழு
கானத்தும்பிகடாங்கவிப்பாலெழுந்
தானத்தும்பர்களிற்றொருநதாக்குகைத்
தானத்தும்பர்களிற்றொருநதாக்குமே. ௰௭

கனமுழக்குவகானமடங்கலுங்
கனமுழக்குவகானமடங்கலும்
வனமடுத்துறைமாகயமென்றுமே
வனமடுத்துறைமாகயமென்றுமே. ௰௮

வண்டினங்கண்மலர்வனசத்தின்மேல்
வண்டினங்கண்மலர்வனமாதரார்
கண்டிளக்குமுகக்தலங்காட்டுமே
கண்டிளக்குமுகததலங்காட்டுமே. ௰௯

மாவிருப்பைமகிழ்தருவன்னியே
மாவிருப்பைமகிழ்தருவன்னியே
காவினித்தகவிற்றுவவாசகம்
காவினித்தகவிற்றுவவாசகம். ௨௰

கோடரங்குயினுடிற்குலமரக்
கோடரங்குயினுடிக்குலமயி
லாடரங்கமறையுமருவியே
யாடரங்கமறையுமருவியே. ௨௧

வானரம்பையின்மாவிற்பலவின்மேல்
வானரம்பையின்மாவிற்பலவின்மேல்
வானரம்பையின்மாமயில்யாழ்செய
வானரம்பையினமாமயிலாலுமே. ௨௨

பூண்டவாதுபுணர்முலையார்நகை
பூண்டவாதுபுணர்முலையார்படா
ராண்டசோகமமாருநீழலவா
யாண்டசோகமமாருமெய்துவார். ௨௩

வேறு.

மன்றலயர்பெருவளங்கனிவ்வகையாலவளர்ந்தோங்கி
மின்றலையசடையார்க்குமுமைக்கும்வியனுடரங்காய்த்
தனறலையில்வநதடுத்தோர்தவம்வளர்த்துச்சிவம்வளர்க்குந்
தென்றலையும்வளர்க்குமறுசெண்பகப்பூநதடங்காவே. ௨௪

மற்றரும்புகழ்கயிலைவடமலைவிட்டெம்பெருமான்
முற்றுதகளபமுலைமுதல்வியுடனுறையுமிடங்
குற்றாலத்திருநகருங்குளிர்மலர்ச்செண்பககாவுந்
தெற்றுகவுடையமலைதிரிகூடதிருமலையே. ௨௫

பூவருக்கமுதலாயபுவனமெலாம்படைத்தளிக்கு
மூவருக்குமுளைக்குமிடமாதலானமுதுமறைகண்
மாவருக்கையாய்முளைத்துமாதவஞ்செய்மகிமையினாற்
றேவருக்குந்தெரிவரிதாநதிரிகூடவரைமூலம். ௨௬

வேறு.

தெய்வமுத்திரைக்காவெனவழிபடர்செண்பகப்பொழிலென்னுங்
கைவசப்படததலைகநதுபைநதாதிறைகமழ்திருநீறுடி
மைவனத்துறைநாளினமேறபோனினமேல்வானின்மேல்வீரேனோர்மேற்
சைவமுத்திரைசாந்துமுததலைக்கிரிதண்டமிழ்த்திரிகூடம். ௨௭

ஈன்றுகாப்பதுமழிப்பதுமறைப்பதுமிதற்குமேல்விளையாட்டு
மான்றபல்வகைக்காரணகாரியமவையெலாமுறைதோன்றத்
தோன்றுகாலமுங்கணிதமுங்கடநதோர்சுடர்முளைத்திடுநாளின்
மூன்றுகாலமுநதன்னிடைமுளைத்திடமுளைத்ததுதிரிகூடம். ௨௮

தம்மையேதமக்கறியொணுதிருளெனச்சமைந்தமும்மலமோடச்
செம்மையேமுதன்முச்சுடரொழிப்பதுசெனனசஞ்சிதமேய
வும்மையேதொடுத்திம்மையேமறுமையேயுயங்குமுப்பவநோய்க்கு
மும்மையேமணிமாதிரமருந்தெனமுளைத்ததுதிரிகூடம். ௨௯

பின்னுசெஞ்சடையெம்பிரானைத்தலம்பிரியினும்பிரியாதே
அன்னுமின்றமால்வரையெனததமைப்பிரிதொறும்பிரிவாற்றுமே

ம்ன்றுமாடகவரையிரசதகிரிமந்தரமெனமூன்றும்
பொன்னின்மூவகைக்கொடுமுடியாமெனப்பொலிந்தது திரிகூடம். ௧௰

கவனகான்முககாரணப்பிரளயகற்பகாலந்தோறு
மெவனமாகவித்தலத்திடைச்சிவபிரானிருத்தலாலழியாமற்
புவனம்யாவையுமொருதலையாதரமொருதலைபுரையில்லாப்
பவனமோர்தலையாகநின்றெடுத்தருள்பழமலைத்திரிகூடம். ௧௧

யூறறிருந்ததேன்கமலமேலுவரிமேலோங்கன்மேலனம்புள்ளே
றேறறிருந்தும்செயல்செய்வான்மூவடிவெடுப்பவர்கிடமாக
மாற்றிருந்தபொனமேகலைமூனரும்வயக்குதெக்கணமேவி
வீற்றிருந்ததோர்வடநெடுஞ்சயிலமேவிரிதமிழத்திரிகூடம். ௧௨

பொன்மலைக்குமோர்மூது மலைபுதுமையாறபுதமலைகயிலாய
நன்மலைக்கொருதுணைமலையுவரிசூழ்ஞாலமேல்வளர்க்தோங்கும்
பன்மலைக்குமோர்தலைமலைஇசைதொறும்பசுந்தமிழ்மணநாறுந
தெனமலைக்கொருவடமலைசிவபிரான்றிருமலைதிரிகூடம். ௧௩

வேறு.

ஆமையெழுத்தானுலகையருள்செய்வார்க்கிடமாகி
மாமையெழுத்துடாடாமறைநான்கின்முதறகிடந்த
ஆமையெழுத்துருவாகுமுயர்சயிலமவ்வெழுததின்
சேமவெழுத்தொருமூன்றின்வடிவமேதிரிகூடம். ௧௪

ஆடலொருமூன்றாகிமூவுருவுமமைந்தார்க்குக்
கூடமொருமூன்றுயுங்கூடமேலிருக்குமறைப்
பீடமொருமூன்றும்பேரொழின்மூத்தேவியாக்கு
மாடமொருமூன்றும்வயங்கியது திரிகூடம். ௧௫

எக்குணமோவெப்பொருளோவெச்செயலோவெனமறையு
மிக்குணராவகையுணர்த்தயான்மாட்டேன்மெய்யடியா
ரக்குணமேயச்செயலேயப்பொருளேயானபிரான
முக்குணமோமுச்செயலோமுப்பொருளோதிரிகூடம். ௧௬

வேறு.

பொன்னின்மாமணியருவிப்பூமாலைகரத்தேந்தி
வன்னிசேர்காத்தார்க்குமணம்பூட்டவருமிமையக்
கன்னிபோல்வதுகருணைக்காசினியர்மடமகட்குச்
சென்னிபோல்வதுகனகதிருமவுலிபோல்வதால். ௧௭

மூர்த்தையார்நதிசூடிமுத்தலைவேலையுமேந்தி
விந்தையார்கோடீரமதிவளர்த்துவிடையேறு
மெந்தைபோல்வதுஒருகுலத்திலுலகின்றபெருமாட்டி
தந்தைபோல்வதுகருணைத்தாய்போல்வதன்னையிலுமிக்கும். ௧௮

வேறு

பூமடந்தைதனமிசைந்தபாரிடந்தவானளந்தபொன்னைமேவி
மாமணியினிறம்படைத்தவாளரம்புள்ளேறியலைவாரிமேவித்
தாமரைமாமலரிலஞ்சிதனிற்பூத்துச்செழுந்திகிரிசங்கமேந்தி
நாமமாயிரம்படைத்தமால்போலுந்திரிகூடஞானக்குன்றம். ௩௯

உந்திமிசைவந்தகட்பாணியாற்குவலயங்களுவப்பினின்று
விந்தைசேரும்புவனம்பலபடைத்துத்திசைமுகங்கண்மேவிவாணி
விந்திரற்குமிடர்நீக்கியெண்கிரியின்வாகுமிகுந்திருத்தலாலே
முந்துபதுமத்தயனைநிகர்காட்டுந்திரிகூடமுருகார்குன்றம். ௪௰

எத்தலமுமேகலிங்கமுளதாகும்பஞ்சலிங்கமிசைப்பர்மேலு
முத்தரகாசிபிறபதிட்டைகோடிலிங்கம்வடவருவியுவரிமேய்ந்து
வைத்துளிபெய்திரிகூடச்சிலையெல்லாஞ்சிவலிங்கவடிவமாகி
யத்துணையுஞ்சிவமாகிலெத்துணையென்றெடுத்துரைப்போமதன்சீரம்மா. ௪௧

திரிகூடத்திருமலையைவலஞ்செய்தார்தீராதவினைகடந்தார்
திரிகூடத்திருமலையைத்திசைநோக்கிப்பணிந்தவருஞ்சிவத்தைச்சேர்ந்தார்
திரிகூடத்திருமலையின்கீர்த்தனங்கள்கேட்டவருந்தேவரானார்
திரிகூடத்திருமலையார்திருப்பவாசஞ்சிறுமைதுதிசெய்யற்பாற்றே. ௪௨

வேறு.

என்றிவைபகருங்காலையிவ்வகைநான்கினோடு
நன்றிசேர்கதிகூடப்பற்றார்நற்கதைநவில்வாயென்ன
வொன்றியமுனிவர்கேட்பவுளமகிழ்சிறந்துசூதன்
குன்றினைவலஞ்செய்தார்சீர்முதற்கொண்டுகூறலுற்றான். ௪௩

பொதியமேலிமையநீங்கிக்குறுமுனிபோதுங்காலை
யெதிர்தொழான்றவமால்பூண்டவிந்திரத்யும்மனென்னு
மதிகுலநிருபன்றன்னைமுனிவனுமின்மதத்தினாலே
யதிர்குரன்மதமாவேழமாகெனச்சாபஞ்செய்தான். ௪௪

நின்வரவுணராவெனைநெறிகொலோசபிப்பதென்ன
மன்னவன்வணங்கிக்கூறமலையமாமுனிவன்முக்கண்
முன்னவனடியார்க்காணின்முந்துறவெழுந்துதாழ்ந்து
பொன்னடிவணங்கார்யார்க்கும்புகல்வதிச்சாபமென்றான். ௪௫

முனிவரசரணஞ்சாபமோசனம்புரிவாயெனனத்
தனிதொழுமரசைக்கும்பசம்பவனோக்கியெங்கோ
னனிவரைத்திரிகூடத்தைநண்ணிநீவலஞ்செய்காலம்
புண்டமுற்றிடுவைதென்கீழ்புறதொருதடத்திலென்றான். ௪௬

னாயிரமறைதேர்தம்பப்பண்ணவனருளாற்பின்ன
ராயிரஞ்சிக்குவேந்தாயடற்கயேந்திரப்பேர்பெற்றுப்

போயதுகுணிப்பில்காலம்புனம்பலசுழன்றுவேழ
மேயதுதவத்தாலோர்நாள்வியன்றிரிகூடச்சாரல ௪௭

உலவுதென்றிசையிற்கொண்டுவாப்பிடியெனப்போய்மேல்பாற்
குலவுவெள்ளருவிக்குன்றைக்கோட்டுமாவெனப்போராடிச்
சுலவியுத்தரபாற்சோலைமுக்கனிசுவைத்துக்கீழ்பா
னிலவைவெண்கவளமெனறுசென்றதுபனைக்கைநீட்டி. ௪௮

வேறு

சோதிமால்வரைசூழ்ந்துதென்குணதிசைச்சுனையின்
மோதுதண்புனல்பருகையிலொருகையைமுதலை
காதுவெங்கயமிழுத்திடக்கயங்கரையிழுப்ப
வாதினூசலொத்தாயிரமாண்டுபோமலைந்த. ௪௯

தாலமீதில்விண்ணுயர்புடார்ச்சுனந்தனைச்சார்ந்து
கூலமேவினறமர்செய்குஞ்சரங்குறைதிரையி
ஞாலமேயெனப்பொருவலிமுதலையாலயர்ந்து
மூலமேயெனவோலமிட்டதுதனிமுதலை. ௫௰

ஓலமென்றலுமுயர்பெரும்புடார்ச்சுனபுரத்தின்
மூலமொன்றதாய்மூவடிவெடுத்தருண்முதல்வ
னீலவிண்டுவாயுறையுநாணேமியம்படையாற்
காலவெங்கராமடர்த்துநீள்கடகரிகாத்தான. ௫௧

முத்தலைக்கிரிவலம்வரப்பெறுமுறுதவத்தான்
மைத்தலைக்கரிவடிவுபோய்வானவவடிவாய்
மெய்த்தலைப்பெருஞ்சுவர்க்காடெய்தினன்வேத
னத்தலைக்கிரிமகிமைகேட்டவனகதியறைவாம். ௫௨

வேறு.

யார்குடரண்டம்வேர்வாய்ப்பகர்தருதோற்றநான்கி
னெழுபிறப்பிற்றெய்வமீரேழுமக்களொன்பா
னீரினவிலங்குபுள்ளுப்பப்பத்துமிலைநாலைந்தாங்
கூர்வனபதினொன்றுகயோனியெண்பத்துநான்கே. ௫௩

இன்னவாமிலக்கமியோனியெய்தியவுயிர்கட்கெல்லாம்
பன்னுபுண்ணியமேபாவம்பாவபுண்ணியமுச்செய்கை
பொன்னகர்நிரையம்பூமிபுவனமாப்பொசிக்கும்போக
முன்னதுகுறைவுமேற்றமுயன்றதுபின்னுமாக. ௫௪

தாங்கரும்பாவமிககான்றருமமுஞ்சிறிதுசெய்தான்
பாங்குசெய்தருமபாவப்பயனுண்டுபாரைநீங்கி
யோங்குசீர்த்தருமபோகமுண்டனன்சுவர்க்கமேவி
யாங்கதுதொலைவின்வானோரகற்றவந்தரத்துவீழ்வான். ௫௫

விஞ்சையர்திரிகூடச்சீர்விண்ணிடைப்புரியுஞ்சான
மஞ்செவிகுளிப்பக்கேட்டானகன்றதுதடர்ந்தபாவ
மஞ்சனமறலிதூதர்வருமுனம்வர்துவாரேனோர்
தஞ்செனவிமானமேற்றித்தமனியவுலகஞ்சேர்த்தார். ௫௬

வரைத்திருநாமங்கேட்டமகிமையாற்சுவர்க்கமேவித்
திரைக்கடலமுதமாந்தித்தேவரோடிருந்தானின்னம்
பருப்பதச்சாரல்சார்ந்தார்திசைநோக்கிப்பணிந்தார்செய்கை
சருக்கமேலரிக்குநாதன்சாற்றியகதையைக்கேண்மின். ௫௭

ஒன்றெனப்பொருந்தாவேறுபிரிந்திடாவும்பவத்தி
னென்றுமுட்புகுதாநீங்காவிறையருளான்மாமூன்று
தொன்றுதொட்டமைந்தசுத்தசொரூபமேவடிவென்றோர்ந்து
மன்றலந்திரிகூடத்திலுறையுமாமறைகண்மூன்றும். ௫௮

வெதிர்தருகரனாராசிவெண்மையாற்கயிலைமாறுங்
கதிர்மதிவலத்தாற்பொன்னுண்மேருவேகடுக்குங்கண்டோர்
மதிவலியிரும்பைத்தன்பால்வலித்தலாற்காந்தவெற்பாம்
புதியசீர்த்திரிகூடத்தைநிகர்வதோர்பொருப்புமுண்டோ. ௫௯

வம்பருப்பதுமராகம்வளர்வெயில்விரித்தலாலும்
வெம்பாரமணியின்சோதிவிரிதருசெக்கராலு
மும்பரீலுகுத்தவேயின்னுளிமணிநிலவினாலு
மெம்பிரான்திரிகூடத்துக்கிராப்பகலில்லைமாதோ. ௬௰

சித்தராய்விஞ்சையோராய்த்தேவராய்த்திகழ்வோரெல்லாம்
பத்தராய்த்தருவாய்மாவாய்ப்பறவையாயுறைவர்மேன்மேன்
முத்தராய்க்கதிகட்கெல்லாமுதல்வராயமர்வராலு
லத்தனார்திரிகூடத்தினதிசயம்விரிக்கற்பாற்றோ. ௬௧

வேறு.

குவிப்பாகவுரைத்ததெனச்சூதனெடுத்துரைப்பமுனிக்குழாத்தோரெல்லாம்
புவிப்பாகமறைவேள்விதருமுன்னேயெங்களுக்குன்புராணவேள்வி
யவிப்பாகமெனவளித்தாய்திரிகூடவரைமகிமையமுதவாரி
செவிப்பாகம்பெறநுகர்ந்ததவிப்பாகுஞ்செனனவிடாய்தீர்ந்தோமென்றார். ௬௨

ஆன்றுண்மையுயிராகியுயிர்க்கெல்லாமுணர்வாகியறிவுக்கெல்லாஞ்
சான்றாகிமுப்பொருளுந்தானாகிவானாகிச்சகங்கள்யாவு
மீன்றானுக்கிடமாகுங்கயிலாயஞ்சிவலோகமிரண்டென்பார்க்கு
மூன்றாகுங்குற்றாலத்தலமகிமைமொழிகவெனமொழிவான்சூதன். ௬௩

௫-வது-திரிகூடமலைச்சருக்கமுற்றிற்று.

ஆகத்திருவிருத்தம்—உ௱௬௩.

## ௩-வது-திருக்குற்றாலத்தலமகிமைச்சருக்கம்.

கூறோறுமழுப்படையார்தலங்கண்மகிதலத்தனந்தகோடியேனுஞ்
சீரோறுமூர்த்திதலந்தீர்த்தமெனுமூவகையாற்சிறந்ததான
மீரோழுதலமாகுமெந்தையார்க்கதிகதலமிவற்றினுள்ளு
மோரோழுதலமதிகமிவையிலொருதலமதிகமுணர்த்தக்கேண்மின். ௧

வரமேவுதிருவாரூர்காளத்தியருணைதில்லைமதுரைகாஞ்சி
புரமாதிபலதலத்தும்போந்துறைதலொவ்வொருவர்பொருட்டேயாகும்
பரமானதனிமுதல்வனுழிதொறுமுலகமெல்லாம்படைத்துங்காத்துந
திரமாகவரசிருக்கும்பரமரகசியத்தானந்திருக்குற்றாலம். ௨

வேறு.

பூதலவிலாசந்தன்னிற்புதுமைசேர்தலங்கள்யாவும்
பேதமாங்கற்பந்தோறும்பிரளயத்தொடுங்கித்தோன்று
மாதலுமழிவுமில்லாவநாதியேதிருக்குற்றாலங்
காதலினறிவுமிக்கீர்காரணமுணர்த்தக்கேண்மின். ௩

பொருந்திரைக்கடல்களேழும்புடைபடுதீபந்தாவிப்
பெரும்புறக்கடலுநேமிப்பிறங்கல்கால்சாயப்பாய்ந்து
வருந்திரண்மேருவாதிவரைகளுந்திசையும்பாரு
மொருங்குறவொருக்கிமேல்கீழுலகெல்லாம்புகுந்துதாக்கி. ௪

பரந்தெழுபுவனமெல்லாம்படர்ந்தபேருகாந்தவாரி
துரந்தெழுமண்டமூலத்தங்கியின்சுடரான்மண்ட
வுரங்கெழுசண்டவாயுக்கனலெல்லாமொடுங்கிவான
நிரந்தரித்துலோகாலோகநெடுவெளியாயகாலம், ௫

ஆருநீர்கனல்காலண்டமழிக்குநாளழியாதாகிக்
கூருமால்வரையும்யாறுங்குறிக்கொண்டுதிசைகடோறு
சேருறுகுரோசமைந்தாய்நின்றதுதிருக்குற்றால்
மேருவிலேநதிக்கங்கைமிலைந்தநம்பரனேபோல. ௬

அப்பெரும்புவனமெல்லாமழியுநாளழியாதாகி
யிப்புரங்கிரியும்யாறுமிருந்தவாறெவ்வாறென்னின்
முப்புரமொடுக்குங்காலைமூவர்வீடென்னமூன்று
மொப்புறநின்றதென்றுமொருவனதருளான்மன்னோ. ௭

அரவணிசடையானெங்குமமர்கினுமருந்தேன்கங்கை
கரைபொருகிரிகூடத்துக்கலையெலாநிரம்பாநிற்பன்,
விரவுபேருலகமெல்லாம்வெயில்விரித்தெழுந்ததேனு
மிரவிதன்கிரணங்காந்தத்திசைதருபொலிவுபோல. ௮

தருமமேகருதித்தானந்தவம்பலபுரிந்தாரோனுந்
திருவளர்திருக்குற்றாலச்சிவபிரான்சன்னிதானந
தருவினர்பணிவார்க்கன்றித்தொலைத்திடவரிதுபாவம்
பருதிசன்னதியிலன்றிப்பஞ்சிலைச்சுடுமோகாநதம். ௯

வேறு.

ஆலவாய்திருக்காளத்திகாசியண்ணாமலைதிருவாரூர்
மேலமன்றகநதிருவீராமீச்சுரம்விடுபெணைக்கவராகச்
சூலபாணியார்மற்றுளதலமெலாநதுணர்ந்தபைஞ்சிலையாக
மூலமாகவேயுலகெலாநதழைத்திடமுளைத்ததுகுற்றாலம். ௰

உடையநாயகிதிருமணக்குழ்வின்மூவுலகமுமொருங்கேதி
வடதனிப்புலநதாழ்நதுதெற்குயர்நதநாள்வானவர்தொகைக்கெல்லாங்
கடமுனிப்பிரானொருவனேநிலைபெறக்காசினிப்பெரும்பார
மிடைதனக்கொருதட்டெதிர்நின்றதால்றைதிருக்குற்றாலம். ௰௧

சங்கவீதிபொற்கந்தரந்திருமுகந்தமணியப்பெருங்கோயி
றுங்கவார்குழல்சண்பகாடவிபெருஞ்சொர்க்கமேதிரிகூடம்
பொங்குமாகடலுந்திபொன்மேகலைபொருந்துசித்திரகங்கை
நங்கணுயகன்மருவுகுற்றாலமாஞலநாயகியார்க்கே. ௰௨

மேவராவகிலாண்டமுமொடுக்கிமேல்விதித்தருளொருதேவன்
மூவராகவித்தலத்திடைமுளைத்திடமூலமாகராகி
யாவராகினுமுணர்தரவரியதாலிந்நகர்ப்பெரும்பான்மை
தேவராசியமென்னவோபரமராசியமெனவுணைக்கேனோ. ௰௩

வேதமாகியகுறும்பலாநீழலின்விரிஞ்சன்மால்வடிவாகிப்
பூதநாயகனெனவரசிருப்பவன்புவனநாயகிகாண
நாதமாகியவின்முரசதிர்தரஞானசித்திரமன்றிற்
காதலாய்த்திருநடம்புரிவநுதலமகிமையாற்களித்தன்றே. ௰௪

இந்துவானிடையிழிந்துகீழ்வழிந்தெனவெழில்வளைத்திரிகூடம்
வந்துபாய்தருதிலையருவித்துறைவரதன்மஞ்சனசாலை
நந்துவீகிருழ்சினகரந்திருவுருநண்ணுபாதலமாதி
யைந்துவாய்தலுமைம்பொதிவடிவமாமாடலம்பரனூர்க்கே. ௰௫

ஆர்த்தமூலமுமீறுமில்லாதவனண்டமூலந்தேருக்
கீர்த்திமூலமேகினர்ந்தெனஈன்னகர்க்கிரித்தலையலைமோதுந்
தீர்த்தமூலமுந்தலத்தின்மூலமுமுயர்சிவலிங்கவடிவான
மூர்த்திமூலமுமுணர்வரோர்வுலகொருமூன்றையுமுணர்ந்தாரும். ௰௬

மனிதரோபெருந்தேவரோவளர்மதகங்கையோவாளுரோ
புனிதர்சண்பகச்சோலையோகற்பகப்பொதும்பரோபுவிபோற்று

மினியகுன்றமோசிவலிங்கவடிவமோவென்றபேதாபேதந்
தனையுணர்த்தவதெம்மனோர்க்கெளியதோசதுர்மறைக்கரிதாமேல். ௧௭

வேறு.

புந்தியுறநினைந்தார்க்கேயருணைகிரிதரிசனைக்கேபுலியூர்பேறு
நந் துதவழ்திருவாரூர்பிறந்தார்க்கேயிறந்தார்க்குநல்குங்காசி
யெந்தையார் திருவருளாற்பிறந்தார்க்குமிறந்தார்க்குமெதிர்கண்டார்க்குஞ்
சிந்தையுறநினைந்தார்க்குமழியாதகதிகொடுக்குந்திருக்குற்றாலம். ௧௮

பிறந்தவர்க்குமுத்திதருஞ்சிவமுரசஞ்செவிகேட்கப்பெறலாற்காட்சி
சிறந்தவர்க்குமுத்திதருமெவ்வடிவுந்தெய்வவடிவாதலாலே
யிறந்தவர்க்குமுத்திதருமிறைதிருமந்திரஞ்செவியிலிசைக்குமாற்று
லறந்தழைக்குங்குற்றாலமறிந்தினைப்பவர்க்குமுத்தியரிதோவம்மா. ௧௯

எத்தலத்திலெவர்புரிந்தபாதகமுமித்தலத்திலெய்தத்தீருங்
கைத்தலத்தில மழுவுடையார்குற்றாலந்தனிற்புரிந்தகடியபாவ
மத்தலநால்வகையிலறுமத்தலம்விட்டகன்றோலவனியாதி
முத்தலத்திற்சென்றாலுமுடியாதுமுடியாதுமுடியாதன்றே. ௨௰

வன்னிதானம்புகுமுன்மானததானந்தோயமாட்டாரோனுஞ்
சென்னிதானந்தொழுத்துத்தகழுமிருவகைத்தானந்தேவதேவன்
சன்னிதானமுமிரண்டுசெதுட்டையத்தாலகன்றேடுஞ்சகலபாவ
மென்கிதானமுநிதியும்பெற்றாலுங்குற்றாலமிகவார்மேலோர். ௨௧

உம்மையுமுயாதகங்கள்பஞ்சுபோற்பறக்குமந்தவூதையாலே
யம்மைதருமலச்சேறுகழுநீராக்கழுவும்வடவருவித்தீர்த்த
மிம்மைவினையிருளோட்டுந்திரிகூடப்பரஞ்சுடராயிறைஞ்சுவார்க்கு
மும்மையுகதீர்த்தத்தியத்திலருடருஞ்சன்னிதியழியாமுத்திகல்கும். ௨௨

மந்தமாருதமீரவானோர்சிவீசுகொடுவேலைத்தண்சாரல்
சிந்துநீர்வடவருவிசிலைபூட்டியம்பிறைக்குஞ்செழுந்தேன்பில்கும்
பைந்தளிர்ச்சண்பகச்சோலைபாரதண்டங்கொடுபுடைக்கும்படர்திக்கெல்லா
மிந்தகருறைவார்மேல்வந்தவினைதரித்துநிற்பதெந்தவாறே. ௨௩

வேதாளம்பாடவொருவெளியிலாடியபெருமான்வேதம்பாடப்
பாதாளவாய்தலுறைபணியரசங்குறுமுனியும்பணிசெய்தேத்த
மாதாளமுமைபயிற்றவரிபிரமர்முடிதாழ்ப்பவானோர்பேரி
யாதாளியுறகடக்குஞ்சிற்பொதுவுஞ்சிற்பனையுமதன்பாலன்றே. ௨௪

இந்திரனூர்க்காதாரங்கருவூர்க்குநமனூர்க்குமெட்டோத்தூரஞ்
சந்திரர்சூரியர்முகலோர்பதங்களுக்குத்துருவபதர்தனிவேற்கந்தர்
கந்தமாதனமாதிக்கணையதிக்குக்கயிலாயங்கயிலையார்க்குச்
சிந்தைசேர்சிவலோகந்தெளிந்தார்க்குப்பரமபதந்திருக்குற்றாலம், ௨௫

புவலோகத்திருப்பவர்கள்சுவலோகம்விரும்புவர்மேற்போகம்வேட்டுச்
சுவலோகத்திருப்பவர்சத்தியலோகம்விழைந்திருப்பர்தொலையாவேதன்
றவலோகத்திருப்பவர்கண்மாலுலகம்விரும்புவரித்தனைக்குமேலாஞ்
சிவலோகத்திருப்பவருந்திரிகூடத்திருக்கும்வரஞ்சிந்திப்பாரே. ௨௬

கயிலாயத்தினிலுறையுஞ்சிகண்டபரமனுயர்கயிலைநீங்கி
மயிலாயசாயன்மடமங்கைகுழல்வாய்மொழியைமணந்துமேருச்
சயிலாதிபொதியில்வரைத்தலங்களழியினுமழியாச்சங்கக்கோயி
லெயிலாகவிருப்பதனாற்பூலோககயிலாயமிதுவேயன்றோ. ௨௭

சிவமதுகங்கையுங்கடவுட்செண்பகத்தடாகமுமேற்சித்தர்வானோர்
தவமுனிவருவந்தாடும்வடவருவித்திரிகூடச்சயிலச்சார்பு
நவநிதியுந்திரைகொழித்துக்கதிகொடுக்குஞ்சித்திரமாநதியுங்காண்பான்
புவனமிசைபிறக்கவின்னந்தவம்புரிவர்போனவுலகிற்புகுந்துளோரும். ௨௮

பொங்குமாகடலருவிப்புண்ணியதீர்த்தமுங்கடவுட்பூட்டாவில்லுஞ்
சங்கவீதயுநதானுமாலயத்தொட்டிலுமாதிசத்தியான
நங்கைபீடமும்வேதக்குறும்பலவுநனகருநயப்பாலன்றோ
வெங்கணுயகர்பிரமாவாகிநெடுமாலாகியிருந்தாரென்றும். ௨௯

பிதுர்கண்டந்தீர்த்தபுரஞ்சிவத்துரோகந்தீர்த்தபெருமைமூதூர்
மதுவுண்டானுயிர்மீட்டபுரம்பவர்க்கமீட்டபுரம்வசந்தப்பேரூர்
முதுசிங்கைவந்தபுரஞ்செண்பகாரணியபுரமுத்திவேலி
ந்திமுன்றின்மாநகரநதிருநகரநன்னகரஞானப்பாக்கம். ௩௰

வேடன்வரஞ்செய்தபுரம்வேழம்பூசித்தபுரம்வேதசத்தி
பீடபுரஞ்சிவமுகுந்தபிரமபுரமுனிக்குருகும்பேரூர்தேவ
கூடபுரந்திரிகூடபுரம்புடார்ச்சுனபுரம்பொற்குறும்பலாவி
சேடபுரமெனவிருபத்தொருநாமம்பெற்றபதிதிருக்குற்றாலம். ௩௧

வற்றாதவடவருவிபடிந்துசங்கவீதிதனில்வலங்கொண்டேகிப்
பற்றாதபிறைமவுலிப்பரமனையுநதேவியையும்பணிந்துபோற்றிக்
கற்றார்களுடன்கூடிக்கண்ணுதல்சீர்பாடியொருகடிகைப்போது
குற்றாலத்திருந்தவர்கள்கயிலாயத்திருப்பர்கற்பகோடிகாலம். ௩௨

யாவராகிலுங்கொலைசெய்பழையராகிலும்வேதப்பலவினீழன்
மூவராய்முளைத்தபிரான்குற்றாலமென்றொருக்கான்மொழிவராகி
லேவராகிலும்புவனவேந்தராயுலகாள்வரிருகாற்சொல்வார்
தேவராய்வீற்றிருப்பர்முக்காலுமெடுத்துரைக்கிற்சிவமேயாவர். ௩௩

குற்றாலமென்றொருக்காநினைப்பவர்க்குப்பாவமொருகோடிதீருங்
குற்றாலமென்றொருக்காலுரைப்பவர்க்குப்புண்ணியங்கள்கோடிசேருங்
குற்றாலந்தனிலிருந்துசெய்யுமொருதவமனந்தகோடியாகுங்
குற்றாலங்கண்டுதொழக்கூடினர்க்கேபரமபதங்கூடுமாதோ. ௩௪

வேறு.

முத்தராய்விடுதலாலேமுக்கணூர்திருக்குற்றாலம்
பத்தராய்மேவுவார்க்குப்பரிசனவேதியாகு
மித்தராதலைத்திற்காண்போரியாவருமுயர்சங்கற்ப
சித்தராய்விடுதலாலேதெரிசனவேதியாமால். ௧௫

ஓரிடைப்பன்னிராண்டூணுறக்கமற்றிருந்தான்பேறு
சீருடைத்திரிகூடத்திற்சிவநிசியொன்றேநல்கும்
வாரிசூழ்நிலத்திற்கோடிவளர்சிவநிசியாலெய்தும்
பேரியற்பேறுமீங்கோர்பின்னுவாத்திங்கணல்கும். ௧௬

ஆதலர்சாலைசோலையாவின்வாயுறைகண்ணூடி
யாதுவார்க்குணவுதண்ணீருறுபந்தர்மடந்தடாகங்
கோதிலாவுரிஞ்சிசுண்ணங்கொலையுயிர்விடுத்தலேறு
மாதலைக்கெண்ணெய்கண்ணேய்மருந்துநன்மகப்பால்சோறு. ௧௭

அறுசமையத்தோர்க்குண்டியழிந்தோரைநிறுத்தலட்டூண்
பிறரறங்காத்தலையம்பெண்போகமகப்பேறுய்த்த
லறியநீன்விலங்கூண்வண்ணூவிதன்சிறைச்சோறுநீ
மறுதலத்தறமெண்ணான்குமனையறத்திவ்வூர்நல்கும். ௧௮

சிலபலதலத்தின்மாதப்பட்டினிவிரதஞ்செய்வோர்
பலனெலாந்திரிகூடத்திற்பகலுணவொழித்தார்க்கெய்துஞ்
சலமறப்பிறவூர்மேவிச்சாந்திராயணஞ்செய்தோர்க
ணலமொருநிசியூண்விட்டுநன்னகருறைந்தார்க்கெய்தும். ௧௯

ஒருபொழுதருந்தியோராண்டொருங்குநோற்றிருந்தான்பேறு
மிருபொழுதருந்தியோர்நாளித்தலத்திருந்தாற்கெய்தும்
பருவமொன்றயலூர்நோற்கும்பலபலவிரதப்பேறு
தருமொருசோமவாரந்தன்னிலித்தலத்தின்மாதோ. ௨௰

காமர்பூங்கொடியார்மோகங்கடிந்துடைகாவிசாத்தி
மாமனத்துறவுபூண்டுமறுதலத்திருந்தான்பேறு
தேமலர்ச்சயனமேவித்தெரிவையருடனேயிவ்வூர்ப்
பூமனைவாழ்க்கையெய்தும்புண்ணியற்கெய்துமாதோ. ௨௧

ஐவகைக்கனலினாப்பணைம்புலனடக்கியோரான்
டிவ்வகைத்தவங்களாற்றியொருதலத்திருந்தான்பேறு
கைவகைமழுவலாளன்கருணையஞ்செழுத்தையுன்னித்
தெய்வமாப்பலவினீழற்சிறுபொழுதிருந்தார்க்கெய்தும். ௨௨

அடைத்ரவரியகாதுமருவரைப்புறமுநாடும்
புடைபட்டப்பல்யாண்டோடிப்பூவலம்வருவார்பேறு
சடையிசைமதியஞ்சூடுஞ்சண்பகவனத்திலெம்மை
யுடையவன்சங்கவீதியொருவலம்வருவார்க்கெய்தும். ௨௩

பூதானம்பரிதேர்யானைபொன்வெள்ளிவிலைவுகன்னி
காதானந்தயிலமெள்ளுக்கலைபணியடிமையில்லங்
கோதானமன்னதானங்கூறுமெண்ணிருதானத்தி
னேதானபலனுமன்னமிட்டுண்பார்க்கருளுமிவ்வூர். ௪௪

சொரிதழலங்கிட்டோமஞ்சோதிசேர்சோதிட்டோமம்
புரிதருமிராசசூயம்பொங்கழற்சோமயாகம்
பரிமகமுதலவேள்விபலதலத்தியற்றும்பேறு
பெருகுமித்தலத்துமாதுர்பிதுர்யாகஞ்செய்வோர்க்கெய்தும். ௪௫

எண்பலவுலங்கடோறுமிலைதின்றுங்கனிகாய்தின்று
முண்பனவொழிந்துந்தீமேலூசிமேலொருகான்மேலா
வண்பலகாலமெல்லாம்வருந்தினர்தவஞ்செய்பேறு
செண்பகவனத்திலோர்நாட்செயுந்தலவாசநல்கும். ௪௬

பத்தராய்ப்பணிவார்க்கேனும்பலதவம்புரிவார்க்கேனு
முத்தரவயனமெல்லாமொருதலந்தருபேறிவ்வூர்ச்
சித்திரைவிழுவேநல்குந்தெக்கணயனப்பேறெல்லா
மத்தர்தந்திருக்குற்றாலத்தைப்பசிவிழுவேநல்கும். ௪௭

அத்தனங்கிருந்துநீங்காதகிலமுமியற்றலாலே
யெத்தலம்வதிந்தார்பேறுமெத்தவம்புரிந்தார்பேறு
முத்தரகங்கையாதியுயர்நதிபடிந்தார்பேறுஞ்
சித்திரநிகழ்சைவத்தெய்வமாத்தலமேநல்கும். ௪௮

திருவளர்திருச்குற்றாலந்திரிகூடமென்னுநாம
மருவியங்கிரிக்குண்டாகியருட்பெருந்தலத்துக்காகி
மருவுபேருலகமீன்றவல்லிபாலெம்மையாளு
மொருவனுக்குரியதென்றுணர்த்துதற்கெளியதாமே. ௪௯

வேறு.

என்னலுமிந்நகர்க்கிசையுநாமங்கண்
முன்னர்மூவேழெனமுறையிற்கூறினை
யன்னவைவிரித்துரைத்தருளுவாயெனச்
சொன்னமாமுனிவர்க்குச்சூதன்சொல்லுவான். ௫௰

தொன்மையாந்தீவினைத்தொடர்ச்சிகுவ்வதாந்
தன்மையாய்ப்போழ்தெரிதழலுத்தாலமாய்
நன்மையாரியந்தமிழ்நாமம்பெற்றது
சென்மநோயறுப்பதுதிருக்குற்றாலமே. ௫௧

கடாக்கயம்பூசைசெய்கடவுள்வாழ்பதி
நடாத்துசீர்நற்கதியெவர்க்குநல்கலால்
விடாப்பெருநன்னகர்நாமமேவுமாற்
புடார்ச்சனபுரத்தியல்புகலக்கேண்மினே. ௫௨

வேறு.

பராசரனருளாற்கந்திபரிமளகந்தியாகித்
தராதலம்புரக்குநீதிச்சந்தனுராசன்வேட்ப
நராதிபனரசுக்கேற்பநன்மகவீன்றாளன்றே
னராகமுற்றொருங்குவேட்டானம்பியம்பாலிதம்மை. ௫௩

பேட்டனநடையார்மக்கட்பெறுதன்முன்றலைவன்வீந்தான்
வீட்டுமனரசுவேண்டான்வியாதனைவரித்தாள்கந்தி
கோட்டமின்முனிபாலன்னார்குணமுறுப்புணர்ச்சியாலே
நாட்டமிலரசைப்பாண்டுவேந்தனைநல்கினாரோ. ௫௪

நோக்கிலான்மனைவிதாருத்தழுவிநூற்றுவரைத்தந்தா
ளாக்கமாம்பாண்டுபாரியைவருக்கைவரீன்றாள்
மாக்குலத்துணைவராயுமகிதலம்புரக்குமாசை
தாக்கிநூற்றுவரோடைவர்தங்களிற்பகைவரானார். ௫௫

வசுமகனாகிநந்தன்மனைபுகூஉப்புள்ளனுஞ்சோகும்
விசைபெறுசகடுமாய்த்துவெறிமருதிடந்துவேழ
மசைவுறமல்லர்வீழக்கஞ்சனையடர்த்தகண்ண
னிசைவினாற்பாண்டுமைந்தரிகலினுமினையாரென்று. ௫௬

நூற்றுவர்சூதால்வென்றுறுவலருங்கானிலேவச்
சாற்றுபன்னீராண்டைவர்தணந்துபின்வளநாடெய்தப்
போற்றலன் ௦ புயங்ககேதுப்பொருந்திலனுதலாலே
யாற்றுதல்சமரொன்றெண்ணியண்ணல்பாசுபதமுன்னி. ௫௭

செவ்வனத்திசைநாலங்கிசேணெழுசுடரொன்றாக
வைவகைக்கனலினாப்பணடியொன்றின்விரலிலொன்றாற்
குவ்விடையூன்றியோர்தாள்குறங்கிடைச்சேர்த்திப்பார்த்த
னவ்விழிதுண்டந்தாக்கியதிலெழுதீபநோக்கி. ௫௮

பூதகமம்பொறியிலாகப்பொறிபுலன்கரணத்தாகச்
சேதனத்தவையாய்மாரன்றேவர்கோனிடருமாற்றி
யாதவம்பனிகார்நீந்திச்சிதலரித்தாகம்புற்றாய்ப்
பாதவமுனைப்பமுக்கட்பரமனைப்பணிந்துநின்றான். ௫௯

மிக்கவன்றவஞ்சோதிப்பான்வேட்டுவக்கோலமாகித்
திக்கெல்லாமன்னன்கோலத்தொடருமோர்தேவதேவர்
மைக்குழலன்னம்பின்னேதொடரமற்றொருகோலத்தைப்
புக்குறத்தொடர்வார்போலப்புகுந்தனர்பொருவில்லேந்தி. ௬௰

---

௦ புயங்ககேது-நாகக்கொடியையுடையசுயோதனன்.

வரிசிலைப்பரமவேடன்வல் ஞ்சிப்புகல்போற்பன்றி
குரிசிலையடுங்காலெம்மான்கொலைசெய்தனரான்பார்த்த
னொருசிலையுயிர்பெற்றென்னவுருத்தனனிருவர்தாமும்
பொருசிலைகுனித்துக்கார்போற்பொழிந்தனரம்புமாரி. ௬௧

அல்லினார்களத்துவேடனருந்தவவேடன்வின்னாண்
கல்லினான்மல்லினாற்கைகலந்தனர்வீழ்ந்தார்மேல்கீழ்
புல்லினாரணங்குபார்த்தன்புறங்கண்டுநகைத்தாளன்னோன்
வில்லினாற்புடைப்பநாதன்விண்ணிடைமறைந்தானன்றே. ௬௨

தேவியுந்தானுமாகச்சேணிடைமறைந்ததேவைப்
பாவியேனுணர்ந்தேனல்லேன்பழுதுகொல்விளைத்தேனென்னக்
கூவியேதொழுதான்முக்கட்குழகனேமழுவலானே
யாவியேயுமையோர்பாகாவபயமென்றழைத்துங்காணான் ௬௨

தீர்த்தனையருச்சித்தேத்தித்திருவடிகாண்பேனென்ன
வார்த்தமாந்தேவுமேவுமவ்வுளிச்சென்றான்கொன்றை
சார்த்தியமவுலியானைச்சம்புடத்துடனுங்காணான்
வேர்த்துடல்சோர்ந்தானாவிவிடுப்பனென்றெடுக்குமெல்லை. ௬௪

சேணுயர்விடைமேல்வந்துசம்புடந்திரிகூடத்திற்
காணுககடவுட்பஞ்சதெரிசனத்தென்றுகாட்டித்
தாணுநாமகர்தாம்பாசுபதங்கொடுத்தருளிப்போந்தார்
கோணிலாமனத்தன்போற்றிக்குறும்பலாச்சாரல்சார்ந்தான். ௬௫

கோதிலாத்திருக்குற்றாலங்குறுகினன்பணிந்தான்சங்க
வீதிவாய்ச்சென்றான்முன்செய்வியன்குருத்துரோகந்தீரச்
சோதிவெண்கதிர்பூசித்தசோமசேகரனைக்கண்டா
னோதுபங்குனியாந்திங்களுத்திரத்தருச்சித்தானே. ௬௬

மேற்றிசைமுகமாமீசன்விநாயகன்சிகரங்குன்றந்
தேற்றுதேனாறுடைந்துதெரிசனம்பரிவாற்பெற்றுத்
தோற்றியவைந்தோடாறுச்சோதிசம்புடமுங்கண்டா
னாற்றுறவெடுத்தானாகமாவிகண்டெடுத்தாலென்ன. ௬௭

ஆதிநாட்சம்புடங்கண்டருச்சுனனெடுத்தவாற்றாற்
பூதிசாதனத்தோர்போற்றம்புடார்ச்சுனபுரமாமிவ்வூர்
மீதளநாமச்செய்கைவிளம்புறுசருக்கந்தோறுங்
காதைகள்விரிக்குந்தெய்வக்காரணவகையிற்காண்மின். ௬௮

பொருவருதிரிகூடத்துப்புடார்ச்சுனபுரம்போலெங்கு
மொருதலம்புவனத்தில்லையும்பர்வானகத்துமாங்கே
பெருகுமித்தலத்தைநீங்கிப்பிறதலம்புகுவாரில்லின்
றிருவிளக்கிருக்கவூரிற்சென்றுதீக்குழல்வார்மன்றே. ௬௯

பாயிரமறைகளாலும்பகரரிதானசங்கக்
கோயிலுந்தலமுந்தெய்வக்குழாங்களின்பெருக்குமானோர்
வாயினாலுரைக்கற்பாற்றோமகிதலந்தாங்குஞ்சேட
னாயிரநாவினாலுமசைக்கினுமசையாதென்றான். ௭௰

வேறு.

தில்லையிலுஞ்சேதுவிலுங்காசியிலும்வாசிபெறுந்திருக்குற்றாலஞ்
சொல்லையிலுநாவூறுங்கேட்கையிலுஞ்செவிதிறக்குந்துறக்கம்போலு
மெல்லையினில்வளர்தீர்த்தமகிமைகூறெனமுனிவரிளம்பூங்கன்னற்
கொல்லையினின்மேய்ந்தசெழுங்கன்றுகள்போற்சிந்தையவர்கொண்டார்மன்றே.

கனிமூலசாகமெனுமமுதருகர்மாதவத்தோர்கருதிக்கேட்ப
முனிமூலநிமூலமுரைப்பதரிதுரைத்தாலுமுக்கண்ஞானத்
தனிமூலப்பொருளிருக்குஞ்சாரல்சூழ்திரிகூடச்சயிலக்கங்கை
நனிமூலமுரைப்பதரிதவனருளாலுரைப்பனெனநவில்வான்சூதன். ௭௨

௬-வது திருக்குற்றாலத்தலமகிமைச்சருக்கமுற்றிற்று.

ஆகத் திருவிருத்தம்—௬௱௰௫.

## ௭-வது வடவருவிச்சருக்கம்.

பரையிடத்திலிருந்துபுடார்ச்சுனபுரத்தினுலகமெலாம்படைக்குங்கால
முறையிடத்துமுணர்விடத்துங்கடந்தானையுருத்திரமாகணத்தோரெல்லாந்
தரையிடத்திலுவந்தாட்டப்புனல்வேண்டிப்பரவுதலுந்தனிமுக்கோட்டு
வரையிடத்திலவனருளால்வருமூலதீர்த்தம்வடவருவித்தீர்த்தம். ௧

கடலேழுநதியேழுந்தோன்றுமுன்வரையிலெழுகடலாய்த்தோன்றத்
தடமேவுநதிமகிமைபாடியுருத்திரகணத்துத்தலைவராதி
யுடன்மேவுநந்திகணத்தவராதிச்சிவகணத்தாருவப்பினாடி
யடலேறுந்திரிகூடப்பெருமானையுவந்தாட்டியருள்பெற்றாரால். ௨

குடிலைதாமேவிவருமாயைகாரணமாகக்குளிர்வானதி
நெடியபேருலகனைத்தும்படைப்பதற்குக்கமண்டலநீர்நிகராய்முக்க
ணடிகளாடலுக்குரிமையாதலாற்றிரிகூடவசலக்கங்கை
சடிலமேற்கங்கையினூறுமடங்கதிகமெனத்தக்கதாமால். ௩

பவமதுகங்கையகலாச்சகரருய்யப்பகிரதனாற்பண்டுதோன்றுந்
தவமதுகங்கையுஞ்சுருதிவிரிகூடத்திரிகூடச்சயிலமேவி
நவமதுகங்கையிற்சொரிந்துநாதனைப்பூசனைபுரிந்துநவைகடர்ந்த
சிவமதுகங்கையுநதனக்கோர்துறையாகவுடையதுசித்திரப்பூங்கங்கை. ௪

மவுனநெறித்தாபதர்கண்மாறாதவம்வேள்விவளர்ப்பதாலே
கவனநெறித்தானவர்நற்பிரளையத்தாலழியாமற்கற்பந்தோறுஞ்
சிவனயன்மாலானபிரான்றிருவருளால்வரைகாத்துத்தேவியாலே
புவனதிரிபுரையாவாரினிதுறைசண்பகத்தடமோர்புறத்ததாமால். ௫

கங்கைநருமதையமுனைசிந்துகோதாவிரிகாவேரியாதி
மங்கலமாநதிகளெல்லாம்வற்றியகாலங்களினும்வற்றுதாகிச்
சங்கமறுகுடையபிரானதிருவருளாற்புதுவாரிசயிலமீதிற்
பொங்கியெழுமாதலினாற்பொன்றுமாகடற்றுறையும்பொருந்துமோர்பால். ௬

தடமாகுநதியாகுங்கடலாகும்வரையருவிதானேயாகு
மிடமாகுஞ்சேய்த்தாகுமெத்தலத்தும்வளர்தீர்த்தமிமையமீன்ற
மடமாதினிடத்தார்க்குவலமாகியணித்தாகிவரோனாட்டுங்
கடமார்மஞ்சனம்போலாந்திரிகூடவடவருவிக்கடவுட்டீர்த்தம். ௭

கூவறடமொருகோடிகொடுத்தபலன்கொடுக்குமொருகுவளைவாவி
வாவிசுனையொருகோடிவழங்குபலனொருநதியேவழங்காநிற்கு
நாவுநதியொருகோடிதருபலனோர்வரையருவிதானேநல்கு
மேவருவியொருகோடியுதவுபலன்வடவருவியிளைக்குமாதோ. ௮

திரிகூடந்தொறும்பாயுநதிக்குயர்நதமுத்தரவாகினியேயென்று
விரிகூடவிரித்துமறைச்சுருதிமிருதிகள்யாவும்விளம்புமாறு
லரிகூடமயன்கூடஞ்சிவகூடமெனமுனிவரமரரார்க்குந்
திரிகூடவரைபாயும்வடவருவிமகிமைதுதிசெய்யற்பாறதே. ௯

பாவமொடுபுண்ணியத்தின்வகைபிரிக்கமாட்டாவாம்பலவாந்தீர்த்தம்
பூவையுங்கிள்ளையும்பாலின்புனல்பிரிக்கமாட்டாமைபோலமேலாந்
தூவியனம்பிரிப்பதுபோற்சுகிர்தமெனும்பால்பிரித்துத்தலங்கக்காட்டித்
தீவினையைக்கழுநீராப்பிரித்தெறியுந்திரிகூடத்தெய்வக்கங்கை. ௰

மேலேறிச்சுவர்க்கபதம்புகுவார்க்கும்பிரமபதமேவுவார்க்கு
மாலேறுவைகுந்தம்பரமபதஞ்சேர்வார்க்கும்வரம்பில்காலஞ்
சாலேறிச்செலவரியபதந்தோறுஞ்செலுத்துதலாறகதகட்கெல்லா
நூலேணிநிறுத்தியதாந்திரிகூடவடவருவிநுவலுங்காலை. ௰௧

சத்தநரகினுந்தொலையார்புவிமீதிற்பிறந்துபாதகங்கடீர்ப்ப
ரித்தரணிதனிற்பிறந்தார்பாவமெலாங்கங்கைதனிலெய்தித்தீர்ப்ப
ருத்தரவாகினியனபாதகமுமிதுதீர்க்கவுரியதாலூற்
சித்திரகங்காநதியையொத்ததொருநதியுளதோசகங்கண்மூன்றில். ௰௨

வேறு.

மொழிபடர்கலைநூல்வல்லீர்முழுத்தபாதகங்களெல்லாங்
கழிபடர்கழுநீராகத்தொலைத்திடுந்திரிகூடத்திற்
செழிபடர்நதிக்குநாமநதெய்வமாக்கதைகள்கூறி
லொழிபடாவனந்தமாகுமவையிலொன்றுணர்த்தக்கேண்மின். ௰௩

அருவியந்திரிகூடத்திலந்நதிபடிந்தபாவ
மொருவினைவருமைசேரயுமொழிந்தனன்மறையோன்வாழ்வும்
பெருகொளிவடிவும்பெற்றான்பெற்றவாச்சரியத்தாலே
திருநதிதனக்குநாமஞ்சித்திரநதியாயிற்றால். ௨௧

வேறு.

கங்கைபிரயாகைவடசிந்துகோதாவிரிகாவேரிவாணி
துங்கநருமதையமுனைகண்ணைகவுதமைசரயுச்சோணையாதி
யெங்குமுள்ளநதிகளும்புண்ணியநதிசித்திரநதியென்பிதன்பால்வந்து
தங்கியுவந்தாடுமொருபாகமெதிமாகமந்தன்னின்மாதோ. ௨௨

முற்காட்டும்பலதலத்துமுன்றனைகோடியதீர்த்தமூழ்கும்பேறுங்
கற்காட்டியெறிதிரையின்கவண்காட்டிப்பாவமெலாங்காகம்போலப்
பிற்காட்டியிரிந்தோடப்பிறவியெனும்பகையோடப்பெரிதாந்தெய்வ
விற்காட்டுந்திரிகூடவடவருவிநல்லதுமெனவிளம்பும்வேதம். ௨௩

பூநாறுங்கற்பகத்தின்போதாடிச்சண்பகத்தின்பூந்தாதாடி
வானாறுதலைமடுத்துமதிருடுந்திரிகூடவரையெம்மானைக்
கானாறுமலர்சொரிந்துகங்கைபூசித்தமதுகங்கையானார்
தேனாறுதனிற்படிந்தார்சென்றொருகாலமும்படியார்செனனவாரி. ௨௪

வேறு.

வாவிகட்குதிகங்கடல்சூடந்தைவண்புலியூர்வாவி
யோவிலாநதியிற்சங்கையுறுதிரிவேணிசங்கம
தாவுமுந்நீரிற்சேதுதடவரையருவிக்கெல்லாந்
தீவமாந்திருக்குற்றாலந்திகழ்வடவருவித்தீர்த்தம். ௨௫

ஓர்நதியிடத்திலேந்துமொடுக்கிமூச்சடக்கியென்றும்
வார்புனலிடையேநின்றுமாதவம்புரிவார்பேறு
கூர்பனிச்சிசிரகாலிற்குலவுசித்திரப்பூங்கங்கை
நீர்படிந்தொருநாட்செய்யுநித்தியகருமமாக்கும். ௨௬

வேறு.

மாகமாமதிதோறும்பிரயாகைமாதீர்த்தம்
பாகமாமதியினராய்ப்பல்யாண்டுபடிந்தபல
னாகமாமதிச்சடையார்வடவருவிநயந்தொருநாட்
சோகமாமதிநீங்கத்தோய்ந்தாரைத்தோய்ந்திடுமால். ௨௭

தாமாகமூழ்கினர்க்குந்தாமொருவர்பொருட்டாலே
யாமாறுமூழ்கினர்க்குமாகுசமுடம்பமுக்குப்
போமாறுமூழ்கினர்க்கும்புனல்மூழ்கிவீழ்ந்தவர்க்குந்
தாமாரிசித்திரப்பூங்கங்கைபரகதிதருமால். ௨௮

அனைத்தாகும்பிறநதிகளாடினார்க்களவளவி
லெனைத்தானும்பலனுதவுமெதிர்ந்தார்க்கும்பணிந்தார்க்கு
நினைத்தார்க்கும்படிந்தார்க்குநீரிலொருதனியாக
கனைத்தார்க்குங்கதிகொடுக்குநனைகர்ச்சித்திரநதியே. ௰௧

ஆலைநறுங்கழைதூர்த்தொட்டயில்வதெனக்காலைமுதல்
ட்வலைமரபினிற்கதிகள்வியந்துதவும்பலநதிகள்
காலையினுமாலையினுங்கடும்பகலும்வடவருவி
பாலையடிகட்டிதருஞ்சுவைபோலப்பலனருமே. ௰௨

வான்றடரூர்திரிகூடவரைச்சாரல்வடவருவி
தோன்றியொருநாண்மூழ்கத்தொல்வினைகள்கழிந்தோடு
மேன்றநாளிரண்டாடிலிவ்வினையவ்வினைதேயு
மூன்றுநாண்மூழ்கினவர்கருக்குழியின்மூழ்காரே. ௰௩

அரிதானவடவருவியாடுவார்வினைகழுவி
யிருந்தானதம்மையறிந்தேற்றதலைவனையறிவா
ரொருதானமாநதியிலுயர்மறையோர்க்குதவுமது
தருதானப்பெருக்கமதாய்ச்சநதானம்பெருக்கிடுமால். ௰௪

மித்திரரும்வளநாடுமெய்யுணர்வுமனைவாழ்வும்
புத்திரரும்பேராசும்பொருள்பலவும்புரிந்தருளுஞ்
சத்துருவின்வலிதுலைக்குஞ்சகலபாவமுந்தீர்க்குஞ்
சித்திரமாநதிப்புனலிற்சிறுகாலைபடிந்தார்க்கே. ௰௫

ஏலவேவிரும்பினவர்க்கறம்பொருளின்பமும்வீடுஞ்
சாலவேகொடுத்தருளியெழுபிறப்புந்தவிர்ப்பதனுன்
ஞாலமேலுவர்தாடுநதவத்தோர்க்குநான்குவகைப்
பாலுமாம்வடவருவிமருந்துமாம்பவப்பிணிக்கே. ௰௬

வேறு.

அயனநாள்விழுவிழாநாளட்டமிபதினொன்கன்னல்
வியனமர்திருவாராட்டுமேதகுமாதநாட்கள்
பயனமர்முப்பானமாகம்பகர்வடவருவியாடி
நயனமூன்றுடையார்சேவைநண்ணினார்பிறவிநண்ணார். ௰௭

முன்னுவாப்பின்னுவாநாண்மொழிந்தசங்கிராந்திதிங்கண்
மன்னுறுபின்னுவாநாண்மதிகதிர்பாநதன்சேர்நா
ளினைவையொன்றிலொன்றுசதமடங்கேற்றமாகு
மந்நதிபடிந்தார்க்கேற்றமாயிரமடங்குமேன்மேல். ௰௮

பிறந்தநாண்மூழ்கினார்க்குப்பிறப்பரிதாகும்யாண்டு
சிறந்தநாண்மூழ்கினார்க்குச்சிறப்பெதிரொடுப்பர்தேவ
ரிறந்தநாளதிற்குமூழ்கிலிறந்தவர்மூழ்கார்கும்பி
மறந்தநாளவனைக்காலன்மறக்குநாண்மறக்குநாளே. ௰௯

திருவளர்திருக்குற்றாலச்சிவபுரஞ்சேரும்போது
மருவிநீர்படியும்போதும்மலைப்பரவும்போது
மொருவரையொருவருன்னிலிருவருக்கிபெற்றுய்வார்
கருவளைப்பிறவிகாண்ணாவர்தமைக்கண்டோரும். ௪௰

வேறு.

அர்த்தமுவாச்சங்கிரமம்விதிபாதம்வைதிருதியைம்பானென்று
பந்தமனுப்பதிருன்குயுகாஎன்குமாலையநாள்பத்தோடைந்து
தொந்தமாமட்டலக்கள்பன்னிரண்டாய்ப்பருவநாட்டொன்றூற்றூறு
முந்துபுனற்றுறைபடிந்துதருப்பிப்பார்பிதுர்க்கடன்கண்முழுதுந்தீர்ப்பார். ௪௧

தாம்பெற்றூர்தத்துமகார்தந்துணைவர்பெறும்பாலர்தலையைபால
ராம்பற்றூல்வளர்த்தமகாரவனருளாலரிவைபிறர்க்கருளும்பால
ரோம்புற்றபரிசதனுதுயர்ந்தவரென்றிருநால்வரோதுங்காலை
யெம்புற்றதுயர்தீரவிறந்தார்க்குத்திலநீராவிறைக்குநீரார். ௪௨

வேறு.

சேணில்வைத்தமதிச்சடையார்சித்திரகங்கையின்மூழ்கிப்
பேணிவைத்தன்னத்தொருநாட்பிதுர்ப்பலிவைத்திடுவாரே
லேணிவைத்தார்அவர்க்கபதத்தெள்ளுடனீரிறைப்பார்கள்
காணிவைத்தாரவர்களுக்கேகயிலாயஞ்சிவலோகம். ௪௩

அங்கிலேயேபிதுர்ப்பலிகளமைத்திடுதற்கமையாதேற்
கன்னிநீர்வடவருவிகலந்தாடித்தருப்பணஞ்செய்
தின்னியன்மாமறைவாணர்க்கியன்றபொருள்வழங்கினூர்
பன்னருந்தென்புலத்தார்க்குப்பரகதியைவழங்கினூர். ௪௪

பிள்ளையுஞ்சுற்றமுநீங்கிப்பிறநாட்டிலிறந்தார்க்கும்
விள்ளுமிருநால்வர்களிலொருவர்விளைந்தேகியந்தத்
தெள்ளருவித்தடத்தொருநாட்சென்றுதருப்பிக்கிலவ
ரெள்ளினுக்காயிரம்வருடமிருப்பர்சுவர்க்காதிகளில். ௪௫

புத்திரரில்லாதிறந்தோர்துன்மரணம்புக்கிறந்தோர்
சத்தநரகிடையழுந்தித்தவிக்குநாளெவரேனுஞ்
சித்திரமாநதிக்கரையைத்திலாக்கரத்திலவருடம்பி
னத்தியளித்தாரவர்க்கேயரசளித்தார்வானுலகம். ௪௬

வேறு.

மூத்தவையார்வரம்பழித்தோர்முதகுரவர்க்கிடர்புரிந்தோர்முக்கண்ணனை
நத்தனைநான்முகத்தோனையிகழ்ந்தோர்பல்லுயிர்செகுத்தோர்நன்றிகொன்றோர்
கத்தனைவிட்டமர்க்களத்திலோடினோர்நம்பினர்க்குக்கபடஞ்செய்தோ
ரெத்துணைப்பாதகரேனும்வடவருவிபடிந்தவர்வீடெய்துவாரே. ௪௭

அந்தணர்கண்முனிவர்கடன்கழிப்பர்பிரமச்சரியமரிதிருந்திச்
செந்தழலினவிசொரிந்தமகமியற்றித்தேவர்கடன்கழிப்பர்மேன்மைச்
சந்ததியையினிதீன்றுதங்கள்பிதர்க்கடன்கழிப்பர்தரைமேலிந்தத்
தொந்தமாங்கடன்மூன்றும்வட வருவியாடினவர்தவிப்பர்மாதோ. ௪௮

அறியாமலிளமையிற்செய்பாவ மெல்லாமன்பகலிலாடத்தீருஞ்
சிறுகாலைபடிந்திடிற்போங் காளையராய்மனதறியச்செய்தபாவம்
வறிதானபுன்மாலைபடிந்தார்க்குமுதுமையிற்செய்மாபாவம்போம்
பிறியார்முப்பொழுதாடில்வடவருவியெழுபிறப்பும்பெயர்க்குமாதோ. ௪௯

கள்ளாமைம்பொறிகளடக்கலொருநெறிநடத்தல்கரணங்காத்த
லெள்ளாமலீகைநிடந்தன்னுயிர்போன்மன்னுயிர்கட்கிரங்கன்ஞான
முள்ளார்வம்பொறைசமிதமின்சொலுடன்வாய்மையெனவுயரீராறுந்
தள்ளாதமனத்தீர்த்தமதுபடியார்புனல்படியிற்றவமேநேர்வார். ௫௰

வளங்கொண்மானததானமொழிந்தபிறநதியாடுமாந்தர்க்கெல்லாந்
துளங்குமவர்புறத்தழுக்குத்தொலைவதன்றிப்பெரும்பாவந்தொலையாதாகும்
களங்கமுறுமலமகற்றிப்பாவமெலாங்கழுநீராய்க்கழுவுமாற்ற
லுளம்பெறுநாளப்பலனும்வடவருவிப்புனல்படிந்தார்க்குளதாமன்றே. ௫௧

இத்தலத்துநதிமகிமையெங்குமேகண்ணுகியெங்குமான
நித்தனதிந்தியமனுக்குங்குறமுனிக் கும்வாசகிக்குநெடியமாலாஞ்
சுத்தனுக்குநவின்றபடிவியாதனெனக்கொருதொகையாச்சொல்லயானு
முத்தகமாவுமக்குரைத்தேன்விரித்துரைக்கவயனாலுமுடியாதென்றான். ௫௨

தேனுறுசித்திரமாநதிமகிமைத்தேனுறுசெவிகாலாகப்
பானுறுமனத்தடத்துப்பாய்ந்துதவப்பயிர்தழைத்தபடிவர்பின்னும்
வானுறுதிரிகூடவரையாறுதனிற்போந்துமழுவலாளைப்
பூநாறுமதுச்சொரிந்துபோற்றுமாறுணர்த்துகெனப்புகல்வான்சூதன். ௫௩

எ-வது - வடவருவிச்சருக்கமுற்றிற்று.

ஆகத்திருவிருத்தம் - ௧௬௮.

---

## அ-வது-சிவமதுகங்கைச்சருக்கம்

இரவிதன்குலச்சகரனோர்பரிமகமியற்றப்
புரவியைத்திசைவிடுத்தலுமதனைவான்புரப்போன்
கரவினுய்த்தனன்கபிலன்வாழ்பிலத்ததுகாணான்
றரையிற்றேடுபுமகன்மகனஞ்சுமான்சலித்தான். ௧

அதனைச்சாகரராறுபதினாயிரர்தருவி
விதனத்தாற்புவிசூழ்விரத்தொட்டனர்மிசைத்தார்
பதனத்தோர்புடைகண்டனர்முனிவன்மேற்பாய்ந்தா
ரிதனைக்கண்டிலான்விழித்தலுஞ்சாம்பராயிறந்தார். ௨

சகரன்சாகரந்தொட்டவரிறத்தலுந்தகவோன்
மகமுடித்தனனஞ்சுமான்மகன்றருமகவாம்
பகிரதன்றவமியற்றினன்விரிஞ்சனைப்பணிந்து
நிகரில்சாபத்தின்மாய்ந்தவர்நரகினைநீப்ப. ௩

பங்கயாசனன்மொழிப்படிகங்கையைப்பரவிச்
சங்கையாத்தவம்புரிந்தனன்கங்கையைத்தரிப்பான்
மங்கைபாகனைவணங்கிநோற்றன்னவன்வரத்தாற்
கங்கைபாற்றவம்புரிந்தனனளப்பருங்காலம். ௪

புரியுங்காலையில்வரநதியதிர்த்துவான்பொதிர்த்து
விரியுமெண்டிசைநடுக்குறவண்டமும்வெடிப்பக்
கிரிவிலானையுமதித்திலன்குதித்தனள்கிளர்பார்
தரிபடாதெனவமரருமுனிவருஞ்சலிப்ப. ௫

மாகமண்டலத்துடுக்குலங்கயலெனமறுக
மேகமண்டலம்பாசியாமிதப்பவிண்சுதிர்கள்
யோகமண்டலத்திருவகைக்கமலங்களுற்ற
நாகமண்டலச்சடையில்விண்ணடுக்குறப்பாய்ந்தாள். ௬

அடையவாயிரம்பருவமாயிரமுகத்தடியி
யுடையநாயகன்சடையிசைப்பாய்தலுமுலறிப்
புடைபிதுங்குருதிரவிமுன்புறப்பனிபோன்றாள்
விடையினர்புகழ்பாடினராடினர்விண்ணோர். ௭

வானெலாமுடைத்தெழுசுரநதிப்புனல்வாதன்
கானமார்சடைக்காட்டிடைச்சுலவுறலாற்கலங்கி
மீனலோசனைபாகனையிறைஞ்சினன்வேந்தன்
ஞானநாதர்தாள்வீழ்ந்தனள்கங்கையுநடுங்கி. ௮

இனிகொள்கங்கையையமைத்தனனரசனுக்கிரங்கி
யொளிர்பனிக்கிரிவிடுத்ததோர்துளியெழுவகையாய்
விளிகொள்சீதையுஞ்சுசட்டுவுஞ்சிந்துவுமேல்பா
னளினிபாவனிகலாதினிகேட்டிசைநடப்ப. ௯

பெருகுகங்கைதென்பாலதாய்ப்பகிரதன்பின்போய்த்
திருதசன்றுவின்வாய்ப்பெய்துசெவிவழிவிடுப்ப
மருவுசானுவிசுடலைபாய்தலுமவன்மரபோர்
நரகொழிந்துபொன்மானமேற்சுவர்க்கநாடடைந்தார். ௰

வேறு.

கதியின்மேற்சகரர்தமைவிடுத்தாநிகண்ணுதலார்சடையிலேமேவி
மதிகுலாஞ்சடையாயென்மாய்ந்தவருக்காட்டுகெனவணங்காதர்
சதிசெய்பாதகந்தேய்க்குந்தருமமுருவளர்க்குமர்த்தத்தருமபாவத்
ததிகமாஞ்சிவதருமஞ்சிவத்துரோகஞ்சௌனவருளிப்பின்னும். ௧௧

ஒத்திடுமென்பத்தியினாலெய்துவதுசிவதருமமுனக்குங்காலை
அத்தியம்பத்திமைபூசைபுரியாமைபுரிந்தவரைத்துதித்திடாமை
பத்திபுரிந்தமைமறத்தல்சிவநிந்தையெனப்புகலப்படுவதாறும்
வித்தெனவும்வேரெனவும்விளைதல்சிவத்துரோகத்தின்விளைவுமாதோ. ௧௨

அவையாறிற்சிவநிந்தையதிகமதையெளிதெனநீயடைந்தாயீது
தவமாகப்பலகோடியுகங்கள்புரியினுமுனக்குத்தவிராதென்று
ரிவைதீரவருள்புரியவேண்டுமெனவிறைஞ்சுதலுமிறைவர்நோக்கிச்
சிவபூசையாயிரம்யாண்டியற்றியிருந்தனையாகிற்றீருமென்றார். ௧௩

உன்னுடையசன்னிதியைப்பிரியிலெனக்கினியொருநாளுகமாமென்று
பின்னுமவள்வணங்குதலும்பெரியபிரான்சிறிதிரங்கிப்பேதாய்பல்யாண்
டிந்நிலத்திற்றீர்பரியபாவமொருதினம்வசித்தார்க்கெளிதாத்தீர்க்கு
மன்னுமொருதலமுளதுமதுரகசியம்பிறர்க்குவழங்கேமென்றார். ௧௪

அண்ணலேயருளுகெனவணங்கும்வராநதிக்கிரங்கியமலர்நோக்கித்,
தண்ணருவித்திரிகூடம்யாமிருக்குஞ்சயிலமந்தச்சயிலமீது
நண்ணுமோரிலிங்கமதையருச்சித்தாற்பாவமொருநாளிற்றீரும்
பெண்ணணங்கேமதுவினாற்பூசைசெயிலெமையணுகப்பெறுவாயென்றார். ௧௫

என்றுதிருவாய்மலர்ந்துவிடைகொடுப்பக்கயிலைகடந்திமையநீங்கிக்
குன்றுதனைச்சிலைவளைத்தார்திரிகூடத்தருவிசொரிகுவட்டினேகித்
துன்றுசிவலிங்கமதைமதுச்சொரிந்துபூசைசெய்துதுதிக்குங்காலை
யொன்றுநதித்திருமடந்தைவிழிகளிப்பமழவிடைமேலுதித்தாரண்ணல். ௧௬

பாதகமாமிருள்விடியவுதையகிரிமேலுதிக்கும்பானுவேபோல்
வேதநாயகன்விடைமேற்றோன்றுதலுமனங்களிப்பவிழிநீர்போர்ப்ப
வாதிநாயகசரணமமலநாயகசரணமருளானந்தச்
சோதிநாயகசரணஞ்சரணமெனக்கங்கைமங்கைதொழுதுவீழ்ந்தாள். ௧௭

சரணமெனவிறைஞ்சுதலுமன்பர்தமக்கன்புடையதம்பிரானார்
விரணமறவினைநீக்கிவராநதிக்குவிதிகாணுவேணியீய்ந்தார்
பரமர்தமைக்கங்கைமங்கைமதுவினாற்பூசைபுரிபரிவினாலே
யரணமாமத்துறையுமாதிசிவமதுகங்கையாயதென்றான். ௧௮

நான்முகத்துமுனிவர்சூதனைவாழ்த்தியெமதுவினைக்கடுங்கோடைக்கு
வான்முகத்துமுகில்போலவந்தருளியதுகங்கைமகிமையென்னும்
பான்முகத்துமாரிபெய்தாய்நன்னகராஞ்சருக்கரைப்பூம்பந்தர்மீது
தேன்முகத்துமழைபோலுஞ்சிவபிரான்மகிமையினைச்செப்பாயென்றார். ௧௯

ஆர்த்தமால்வரைத்தலத்திலூர்த்தமால்வரைநதிகட்கதிகமான
தீர்த்தமான்மியம்பிறவிதீர்த்தமான்மியங்கருணைத்திருக்குற்றாலன்
கூர்த்தமாகதித்தானமிவைமூன்றுமுடையானைக்கூறென்பார்க்கு
மூர்த்திமான்மியம்பெருகமொழிகின்றான்புராணமெல்லாமொழிந்தாவான். ௨௰

௮ - வது - சிவமதுகங்கைச்சருக்கமுற்றிற்று.

ஆகத்திருவிருத்தம்—௧௮௮.

## ௯-வது-மூர்த்திவிசேடச்சருக்கம்.

ஒளியாகவெளியாகவுருவாகவருவாகவொன்றிறனுந்
தெளியாதபெருமானைத்தெளிவார்கடெளிவானைத்திரிகூடத்தி
லளியானையனைத்துலகுக்கரியானென்றுவாத்தமறையடியார்க்கென்று
மெளியானென்றெடுத்தியம்புமாதலால்யானுமெடுத்தியம்புவேனால். ௧

கைத்தலத்துமழுவேந்திக்கயிலைமுதற்றலத்துறையுங்கடவுளோரின்
முத்தலைவேற்பிணிதுறையுமூர்த்தியேயுயர்கருணைமூலமூர்த்தி
யெத்தலத்தும்பரமனுளனெனவறிகவென்னவுரைப்பதேவனென்பீரோ
வத்தலத்தினிறைந்திருப்பனெத்தலத்துமோரோர்கூறமையாநிற்பன். ௨

கடலேழும்புறக்கடலுந்திரைபெருகியுவட்டெடுக்குங்கற்பாந்தத்தி
லடலாழிவரைசாய்ந்துமேருவரைநிலைகலங்கியசலமெல்லாந்
தடுமாறியடுக்கழிந்துபுவனசராசரமொடுங்கித்தரங்கவாரி
நடராசமண்டியபின்படருழிக்கனலெழுந்துசுவற்றிற்றன்றே. ௩

அண்டமூலத்தெழுந்துபுவனமெலாஞ்சுட்டசனலடங்கமேலே
சண்டவாயுப்பரந்துதாவியறவொருக்கியபின்றரிப்பாய்நின்ற
விண்டலமும்விண்டலமேற்கடவுளருமேலுளதத்துவமுமாங்கே
பண்டையுகந்தனிற்றோன்றுமுறையாகவொடுங்கவொருபரனேநின்றான். ௪

பின்றுயிலளவிறந்தகாலமெலாம்பிரிந்திடவும்பிரியாவண்ண
மொன்றுமெவ்வுயிர்க்குமுணர்வாகிக்கருணைக்குறிக்கொண்டுக்கந்தோற்ற
மின்றுகினின்றவனேயிறையாகவெழுந்தருளியிருந்தானென்றும்
பொன்றுதசிவபுரம்போனின்றபுடார்ச்சனபுரத்துப்பொருந்துமாதோ. ௫

ஒருவடிவுர்தனக்கெனவொன்றிலனுகிக்கருணைதிருவுருவாக்கொண்டு
திருமுகங்களாயிரமுங்கண்களாயிரமுமெனத்திகழுஞ்சோதி
யிருமைபெறுமுலகனைத்துமொடுக்குமுறைதோற்றுவிக்குமியற்கைபேணி
யருணாற்றிகழ்க்கமலமலர்மேலந்தணனுருவமாகினனே. ௬

இசைமுகமுமொருநான்குமவுலிகளுமிருநான்குசெம்பொற்றோளும்
விசையநெடுந்தண்டமும்பொற்கமண்டலமுமுப்புரிநூல்விளங்குமார்பு
மிசையமலர்ப்பதுமபீடத்திருந்துநாமகளாரிடத்தின்மேவி
யசைவிலாப்புவனமெல்லாம்வான்வளிதீர்பாராலருளிச்செய்தான். ௭

வானமுகிலோராழுஞ்சூரியருஞ்சந்திரரும்வளர்கோளோமு
மீனினமும்விண்ணவரும்விண்ணவர்வேந்தனுந்திசைக்குவேந்தாயாரு
மேனையாங்கடவுளருமிருபொழுதுமுக்காலுமிருதுவாறு
நான்மறையாறங்கமுதற்பலகலையும்படைத்தருளினயப்பான்மன்னோ. ௮

ஓமவேள்வியும்வேள்வித்திரவியமுமுயர்காயத்திரியுங்கலைத்
தாமரைவாண்முகம்புயமார்பூருவின்றசாதியொருநான்குமின்று
காமவாரிதிபலவுந்தடம்பலவும்வரைபலவுநதிகள்யாவுந்
தேமலர்ப்பூஞ்சோலைகளுந்திகிரிநெடுங்கானகமுந்திருட்டித்தானே. ௯

பிணிமருவுபரசமயச்சூறையிற்பட்டுலகமெலாம்பிறழாவண்ணம்
மணிபெருகுஞ்சிவசமயநெறிதருசெண்பகக்காவுமருளிச்செய்து
பணிவிடையானவர்புரியமறைபரவநான்முகத்தேம்பகவனூகிக்
குணில்பொருமும்முரசதிருத்திரிகூடக்கோயில்குடிகொண்டானன்றே. ௰

பார்பூத்தவயன்வடிவாற்படைத்துருவுருவெல்லாமுபரிப்பான்மேனி
கார்பூத்தவாய்ப்பவளக்கனிபூத்தக்கண்கரங்கால்கமலம்பூத்து
வார்பூத்தசெங்கைமடமயிலிரண்டுமார்புபுயமேற்பூத்துக்
கூர்பூத்தவளையாழிப்படைபூத்தநெடியவருணைக்குன்றமானான். ௰௧

கமலலோசனனாகிக்காத்தனன்முன்படைத்தவெல்லாங்காத்துமுக்க
ணமலநாயகனுக்குறுமுனிக்காயமர்தருமலையுறைவாமாதி
விமலையாம்பலாமருவியிச்சைஞானக்கிரியைமெய்யாடு
நிமலனையத்தலத்துருவாய்முத்தொழிலுநியமித்தானே. ௰௨

மூப்பாலாய்முப்பொருளாய்ச்சிறப்பொருளாய்த்திரிகூடமுதல்வனானை
யொப்பாருமில்லானுக்கொப்பாமற்றொருபொருளையுரைக்கற்பாற்றோ
வப்பாலனவ்வடிவனக்குணத்தனென்றவனையறிதற்கின்ன
மெய்ப்பாலுமிருவருக்கும்பேறிலானான்மறைக்குமெழுத்திலைமாதோ. ௰௩

ஆரிடமானிடந்தேவமசுரமிராக்கதம்பதிட்டையைந்துகூற்ற
லெரிணங்குதன்மாந்தமியம்புசயம்புவுமனந்தமிவற்றின்மேலும்
பாருணைப்பாகலிங்கஞ்சைவலிங்கமதனைபாரபரமற்றெல்லாஞ்
சீரிணங்குகுற்றாலஞ்சிவலிங்கம்பரமரகசியமேயாமால். ௰௪

இமையபேர்துக்கொன்றையிலோர்கோடிப்போதுகூவிளத்திலிலிங்கமாதி
யமைப்போதுநாலுணர்ந்துதேல்சொல்லாமித்தலத்தைதயகலாவண்ணந்
தமைப்பேணியிருந்தருளவேண்டுமெனவரம்வேண்டத்தந்தோமென்று
நமைப்பேணிநாதனருள்புரிந்ததற்குவேதமொருநான்குஞ்சாட்சி. ௰௫

பற்றாகப்பதஞ்சலிவெம்புலிபரவத்திருச்சிற்றம்பலமார்தில்லைப்
பொற்றாடம்புரிவார்திருவேடுபிடித்தெழுதப்புராணமோர்ந்து
கற்றார்கல்லாருமுருகுகவ்வாதவூர்க்கருணைவள்ளல்
குற்றாலத்திற்குறியாயிருந்துமென்னுரைத்ததிற்குறிப்பாலன்றோ. ௰௬

அன்னவகையாலகிலதலங்களுக்குங்குற்றாலமாதியாகு
முன்னமுறைத்திரிகூடமூர்த்தியேமூர்த்திகளின்மூலமூர்த்தி
யின்னவனைப்பூசிக்கும்பூசையேயனைவருக்குமேற்கும்பூசை
மன்னுபுனன்மூட்டில்விடக்கொப்பெல்லாந்தழைத்தோங்குமகிமைபோல. ௰௭

சாலைதொடூஉமெரிவளர்க்கப்புகவேண்டார்தவம்புரிந்துதவிக்கவேண்டாஞ்
சோலைசூழ்செண்பகஞ்சூழ்சுருதிமறைகூறம்பலவிற்சோதிநாத
மூலயத்தைநோக்கிவரினடிக்கடியார்பரிமகப்பேறனையுமாங்கண்
மாலயனுக்கரியானைவந்தடைவாரவர்பேறுமதிக்கொணுதால். ௧௮

மணிசெய்பூண்செழுஞ்சாந்துமலர்மாலையாடைகளால்வாதன்மேனிக்
கணிசெய்வார்தம்மணிக்கணிசெய்வார்வானுலகிலமரர்மாதர்
கணிசெய்வான்பொழில்சூழுந்திரிகூடப்பரனூர்க்குக்கல்லாற்பொன்னூற்
பணிசெய்வார்தமக்கேவற்பணிசெய்வாரையமாதும்பதுமமாதும். ௧௯

காமாரிதனக்கொருபூவலஞ்செய்வரேற்கற்பகப்பூவனத்தில்வாழ்வார்
பூமாரிசொரிவார்மற்சொரிவார்கள்வானோர்கள்பொற்பூமாரி
ஏகாமாரிபாணமாரிதகமாரிநெய்மாரிகோதுதீர்ந்த
தூமாரிசொரிவார்கள்கடல்கள்சூழுலகாண்டுசிவலோகமசேர்வார். ௨௰

குளிர்மாலைமதியணித்திரிகூடப்பரனூர்க்குக்குளகமாதி
கவிமாலைபுனைந்தார்கள்கற்பகமாலையைப்புனைந்துகற்பமவாழ்வார்
தவிராமுக்கனியாதுந்தக்கவிளநீராலுஞ்சாந்தத்தாலு
மயிட்டசமாட்டுமவர்க்கவிடேகஞ்சூட்டுவர்மேலயனுமாலும் ௨௧

மோனைவாகனமியற்றித்திருவிழாப்பொலிவுமுதன்முயன்றோர்வெள்ளை
யானைவாகனத்தார்க்குமன்னவாகனத்தார்க்குமதிகராவார்
தானைகேதனங்குடைமேற்கட்டிபரிவட்டமணித்தசும்புமோலி
யேனையாபரணமுதலியற்றுவார்த்திசைக்கிறையாய்நிறைபாற்சேர்வார். ௨௨

கொடியார்மணிமாடமுயர்கூடத்திரிகூடக்கோயிலார்க்குக்
கடிமாலைமலர்தொடுப்பார்கமழ்திருமஞ்சனமெடுப்பார்களபஞ்சேர்ப்பார்
படிதூபம்விளக்கிடுவார்பரிகலங்கள்விளக்கிடுவார்பணிவார்தெய்வ
வடிவாகிச்சிவபுரத்துத்தொண்டர்குழாத்தண்டர்தொழாவணங்கவாழ்வார். ௨௩

வேறு.

பானுவாரத்திற்பானுவுத்திடத்
தேனுலாம்புனற்சித்திரகங்கைதோய்ந்
தானுலாவுமம்மானைவலஞ்செய்வார்
வானுளார்தொழுமால்பதஞ்சேருவார். ௨௪

திங்கள்வாரங்கதிர்படுசெவ்விவாய்ச்
சங்கவீதிச்சயம்புவுக்கோர்மல
ரங்கையாலணிவாரணிவிப்பவ
ரெங்கணுதர்சிவபுரமெய்துவார். ௨௫

சேயின்வாரத்திலிங்கரன்செங்கைவேற்
சேயர்தாதைக்குச்செண்பகப்போங்கர்வாய்ச்
சேயபாதத்திற்சேய்மலர்சாத்துவார்
சேயராயிருப்பார்சிவலோகத்தில். ௨௬

அத்தமார்புரவாரத்திலம்பிகை
யத்தமார்செண்பகாடவியண்ணலை
யத்தமார்தும்பைப்போதுகொண்டர்ச்சிக்கு
மத்தர்தாரகைவானுலகாளுவார். ௨௭

அம்பொன்வாரத்தருவிபடிந்தெழீஇப்
பைம்பொன்வாசத்தலரிப்பைம்போதுதூஉய்
நம்பன்வார்கழல்போற்றினர்நண்ணுவார்
செம்பொன்மார்பகத்தார்திருவைகுந்தம். ௨௮

திருந்துநன்னகர்த்தேவுக்குவெள்ளிநாட்
கரும்பின்கட்டிபருப்புக்கலந்திடும்
விரும்புதோய்லவையமுதுசெய்விப்பவ
ரரும்புபூவினயன்பதமேவுவார். ௨௯

காரிவாரத்திற்சித்திரகங்கையாம்
வாரிதோய்ந்துபிரான்மலைவீதியைச்
சீரிலோர்வலமாகினுஞ்செய்குவார்
காரிபாகர்கயிலையைநண்ணுவார். ௩௰

ஆறுசெங்கலணியிரற்போன்றகன்
வீறுகாசளவாகினுநீள்விடை
யேறுநன்னகர்க்கோன்பணிக்கீய்குவார்
வீறுவெள்ளிக்கயிலையின்மேவுவார். ௩௧

நீவுசார்ந்தமோர்நெல்லளவாகினு
மாவின்பாலொருகையளவாகினும்
பூவொன்றாகினுநன்னகர்ப்பொன்னகர்த்
தேவின்பாலணிப்பார்சிவலோகரே. ௩௨

வேறு.

சிறுகாலைபணிவார்கள்சாலோகத்துறைவர்திரிகூடத்தேவை
யுறுகாலைபணிவார்கள்சாமீபத்திருப்பர்கதிருச்சமாகப்
பெறுகாலைபணிவார்கள்சாரூபம்பெறுவர்கதிர்பிறங்கல்சாயு
நறுமாலைபணிவார்கள்பரமசாயுச்சியமேநண்ணுவாரே. ௩௩

திருநாளுஞ்சிவவிரதந்தருநாளும்வருடவழிச்சிலவிசேடம்
வருநாளுந்திரிகூடப்பெருமானைபடிபரவவருவோர்யார்க்கு
மொருகாலைக்கன்னமிட்டார்தருமமெல்லாங்கன்னமிட்டாரொருநாட்கூட
விருநாளைக்கன்னமிட்டாரிருவரையுங்கன்னமிட்டாரிடத்திற்சேர்வார். ௩௪

தருமமேநிறைவேறுந்திரிகூடம்பணிவார்க்குத்தானங்கள்வேண்டும்
பொருளெல்லாநிறைவேறுங்குற்றாலத்தலமகிமைபுகழ்கின்றோர்க்கு
மருவுவலம்புரிவீதிவலம்புரிவார்க்கின்பமென்றும்வளருமென்மே
லருள்குலாங்குறும்பலவரடியிணைகள்பணிவார்க்கேயழியாவீடே. ௩௫

வில்வந்தான் றுளசிதான் கொன்றைதான் றிரிகூட விமலர்க்கீய்வார்
செல்வந்தான் பாக்கியந்தான் செப்பவெளிதோர்வதற்குத் திறமிலாதார்
புல்லென்றாலும் வனத்தேதாரிலையென்றாலுங் கிடைத்தபூவென்றாலு
மல்லென்றாலும் பகலென்றாலுமெந்தையார்க்களிக்கிலமராவார். ௩௬

நஞ்சமுதமாகர்ந்தார்க்குப் பாலமுதமாகரவொருநாட் செய்வாரோ
துஞ்சமுதார் தங்கள்ருழாத்துடனமுதமாகர்ந்திருப்பருழிசால
மஞ்சமுநுகயிர்முடித்தாரடியவர்களடியவர்கட்கடிசிலீய்வார்
கஞ்சமுதவயனுகியரியாகிப் பெரியசிவகணத்தராவார். ௩௭

நேசிப்பார்க்கினியபிரான் குற்றாலச்சிவசரிதைநிகழ்புராணம்
வாசிப்பார் புகழெடுத்துவாசிப்பார் சிவபுரத்துவாழ்வோரெல்லாம்
பேசிப்பார் வாறுலகம்புகழ்மகிமைத்திரிகூடப்பெருமான்றன்னைப்
பூசிப்பார் தேவரெனப்பூசிப்பார் தமைத்தேவர் பூசிப்பாரால். ௩௮

கண்டத்தேகறைபூண்டாரடியவரைக்காப்பதொருகடன் பூண்டார்க்கு
மிண்டர்க்கேயானாலும் விசையம்வருமவர்க்குறுகண் விளைப்பாராகி
லண்டர்க்கேயானாலுமவசெயமாமதுவினவினமலமூர்த்தி
தொண்டர்க்காந்துணையவருக்குத்துணையாவார் துன்னூர்க்குத்துன்னூராவார். ௩௯

உலையெடுத்துத்தொண்டர் தமக்கமுதெடுப்பார் பெருமையெவ்வாறுரைப்போமுண்
ட, விலையெடுத்தார் சென்றுசென்றுதலையெடுத்தார் விஞ்சையராயிமையோராகிச்
சிலையெடுத்தார் படவரவம்பெடுத்துத்தெளித்தாலுஞ்சென்மநோய்போங்
கலையெடுத்ததமிழ்முனிக்காமானெடுத்தார் தமைப்பணிவார்கதியென்சொல்கேன்.

நெடிதானவுலகனைத்துமீன்றருமளந்தாருநொடிக்காணுக
கொடியாடுமொருபாகன் குற்றாலப்பரன்மகிமைகூறம்பரற்றோ
பொடியாடுந்திருமேனித்தொண்டர் குழாங்களைப்புகழப்புகுவோமானு
லடியாருக்கடியவருமநவருப்பராரியயன்மாலரசும்வாழ்வும். ௪௧

என்றுகலைபயில்குறுதனியம்புதலுந்திசைநோக்கியிறைஞ்சியேத்தி
நன்றுநன்றுதிரிகூடக்கடவுள்போலருட்கடவுண்ஞாலந்தோன்று
மன்றுமிலையின்றுமிலையென்றுமிலையதிசெயமென்றோடிப்பாடிப்
பின்றுசடைமாமுனிவருடலெடுத்தவுறுதியின்றுபெற்றோமென்றார். ௪௨

வேறு.

முனிவரர் பரவிப்பின்னுமூர்த்திபாலார்த்தமான
புனிதமார் பனைபீடத்தின்மகிமையைப்புகலென்றேத்தப்
பணிவரையிருந்துதென்பாற்படருநாட்கும்பயோனிக்
கினிதருபாமகிமைதமுறையினிலியம்புஞ்சூதன். ௪௩

௧ - வது - மூர்த்திவிசேடச்சருக்கமுற்றிற்று.

ஆகத்திருவிருத்தம் - ௪௩.

## ௰-வது-பராசத்திபீடச்சருக்கம்.



ஆதியுநடுவுமீறுமளவையுமில்லாவொன்றின்
சோதிபாற்குடிலையெய்தக்குடிலையினாதந்தோன்றி
நாதமேல்விந்துதோன்றவிந்துவிலுதித்துநாதன்
கோதிலாத்திரிகூடத்திற்றணங்குறிகடந்துநின்றான். ௧

அனாதாநாதந்தன்னிலாகியவிந்துசத்தி
தன்னிடையுதித்துப்போகநதமைத்தெழுதானமாகி
நிமலப்பலாயாஞ்சததிநிகிலகாரணத்திருவே
நனைகர்ப்பரன்பான்மேவுமகிமையைநவிலற்பாற்றே. ௨

சிவபெருங்கோணநானகுசிற்பனைகோணமைந்தா
நவபெருங்கோணதனுள்ளேநண்ணுமீரிருபானமுகக்கோ
ணிவர்தருவட்டமேன்மேலெட்டிதழ்மோணகோண
மூவரிமூவட்டமூன்றுசதுரமுமுளந்தாராபீடம். ௩

அப்பெரும்பீடமன்றேயருட்பராசத்திபீட
மொப்பரும்பரமயோகத்துறைதலால்யோகபீட
தப்பிலாவகிலமூலாதரித்தலாற்றாரணிபீ —
மிப்பெரும்பீடத்துள்ளாளிறையவர்பாலெம்பிராட்டி. ௪

நங்கைபாலாதியிச்சைஞானக்கிரியையென்னப்
புங்கவனருளானுங்குசத்திகள்பொலிந்துதோன்ற
வங்கவர்தம்மாலெம்மானியற்றுவனதிகாரங்க
ளிங்கவருருவமெம்மாலியம்பரிதியன்றசொல்வாம் ௫

நதிமதிபுனையுமோலிநாட்டங்கண்மூன்றுவாசச்
சததளமபயந்தானைச்செப்பவடந்தரிக்குநாற்கை
மதிமுகமைந்தான்குமரியின்மூன்றொன்றுநான்காம்
பதிவெண்மைபச்சைசெம்மைபால்பொன்மையவர்மேனி. ௬

இனியசத்திகளோரைந்தாலைந்தொழிலியற்றுமெங்கோ
னனிதமில்பரையேயாதிசத்தியாயருளாற்றோன்றி
மனிதயாண்டொன்றுசென்றால்வருதினமொன்றாந்தெய்வப்
புனிதயாண்டிலாஞ்ஞூறுபொருந்துவள்கருப்பமாக. ௭

ஒருபெருகருப்பந்தன்னிலுயர்ந்தகற்பகப்பூங்கொம்பு
ஏருமிருந்திபோற்பொன்னைச்சதுர்முகத்தவனைத்தந்தாள்
கருதுமோர்கருப்பந்தன்னிற்கமழ் ○ வல்லிசாதமொன்று
மரகதமிரண்டுன்றென்னமாலுடனுமையையீன்றாள். ௮

○ வல்லிசாதம்-கற்பகதருவிற்படர்கொடி.

முற்றரும்புணரியீன்றமுத்துநற்பவளம்போல
மற்றொருகருப்பத்தன்னில்வாணியையரனையீன்றாள்
வெற்றிநான்முகற்குவாணியிண்டுவக்கலர்மேற்செல்வி
யுற்றசீர்த்தாரமாக்கியுமைமணம்புணர்ந்தானெம்மான். ௯

நிமலனுமபிரமசாரிநின்மலையென்னுஞானக்
குமரிபாலகிலர்தோன்றக்குற்றாலங்கோவிதாரஞ்
சமருகமென்னுநாமந்தருவரையாத்திரீழ
லமர்தலாற்றிருக்குற்றாலமானதுமூலட்டானம். ௰

மூவிண்மூலையாதிசத்திமூவரைப்பயந்தாலுந்
திசைமூவிசேடத்தாலுந்திரிகூடமென்னுநாம
நிகழ்வதுதலத்துக்கந்தநிமலைசன்னிதிக்கேகன்று
சகமெலாந்தொழநின்றுநிந்தானுமாலயப்பூந்தொட்டில். ௰௧

பூவணிமருமத்தானும்பொன்னணிமருமத்தானு
நாவணியொருகொம்பானுநனிமுகத்தொருகொம்பானுந்
தேவர்தஞ்சிறையைமீட்டசெவ்வேளுஞ்சிலைக்கைவேளு
மேவரும்விரவுந்தானமிவள்பெருஞ்சன்னிதானம். ௰௨

வேறு.

பராநுபவஞ்சிவாநுபவமெனுநாழிக்கிருநாழிப்படிநெல்லாலே
தராதலந்தொட்டகிலாண்டம்வளர்த்தருளியறம்வளர்க்குந்தாயாயென்று
பிராமயசிற்பரனிடத்துச்சிற்பரையாய்த்திரைகடலம்பானிங்கிநீங்காப்
புராதனியைத்திரிகூடத்திரிபுரையையவ்வெவர்க்கும்புகல்வேறுண்டோ. ௰௩

செங்கதிரும்வெண்கதிருமவலம்புரியும்பொலம்புரியுஞ்சத்திரிகூடத்து
நங்கைபராபீடமதன்மேடமதிதனிவானினறுநெய்யாட்டி
மங்கலைபோற்பதம்பணிவார்மால்பதமேவுவரிடபமதியின்வாசப்
பொங்கலர்செண்பகப்போதாலருச்சிப்பாரசிவபதத்திற்பொருந்துவாரே. ௰௪

வெள்ளிநிலாக்கொழுந்தோட்டிஞ்செழுந்தோட்டுமல்லிகையான்மிதுனத்திங்க
ளள்ளியன்னிவியன்பதத்திலருச்சிப்பாரயன்பதத்திலனுகிவாழ்வார்
தெள்ளியகற்கடகமதிகருப்புரசந்தனங்கோடுசிற்பரைபீடத்தி
லொள்ளியமந்திரபதத்தாலணிபவரிந்திரபதத்திலுறைவாரன்றே. ௰௫

அவளவனுமதுவுமெனவனைத்துயிருமனைத்துலகுமருளிச்செய்தா
ளவளவளாந்திரிகூடப்பரைபீடத்தலரியிலுலியாளிமாதந்
தவளமலர்கனகமலர்சாத்துமவர்வாணிதிருவருளிற்சார்வார்,
பவளமலர்சாத்துமவர்பரையருளிற்பயின்றுசிவபதத்திற்சேர்வார். ௰௬

மதிசென்னிமதிகுலவுதிரிகூடவரைக்கவுரிபீடத்
யுயர்கிருதமுடனமுதமைப்பார்பரிதிவளருலகிற்சேர்வா
லாமதியிற்சந்தனுநித்தயிலமாட்டினூர்கள் [சே.]
ள்கெழில்படைத்துப் பொழில்படைப்பான்பெரும்பதத்திற்சேர்குவா

பெருகியநெய்த்தீபமிட்டுவிருச்சிகத்திங்களிற்காண்பார்பிறவிகாணு
ரொருதனுவிற்பருப்பமுதமூட்டினர்வானாட்டமுதமுண்டுவாழ்வார்
மருவமர்செண்பகச்சோலைச்சிற்பரைபீடத்தினிதாமகரமாதந்
திருமலியுங்கருப்பூரதீபமிட்டாரமரகுலதீபமாவார். ௰௮

வடவருவித்திரிகூடச்சாரல்வளர்பரைபீடம்வணங்கியேத்திக்
கடமதியி ◦ லரிசனபானிதஞ்சாத்திற்சுடர்மதியின்கதியிற்சேர்வா
ரடல்பெருகுங்கயன்மதியிலைவகையத்திரவியங்களமைத்துவாசக்
குடநறுநீராட்டினவரழிவிலாப்பரமபதங்கூடுவாரே. ௰௯

துய்யமலர்க்கரங்குவிப்பார்கையினாற்செய்தவினைதொலையுநாவாற்
செய்யபுகழ்வாழ்த்தினர்க்குவாக்கினாற்புரிபாவஞ்சிதையுங்கண்ணா
லுய்யவெதிர்காண்பார்க்குவிழியினால்விளைந்தவினையொழியுஞானத்
தையல்பரைபீடம்வலம்புரிந்தாரைப்பிரிந்தோடுஞ்சகலபாவம். ௨௰

சென்றுபணிவார்புகழ்வார்திரிகூடச்சிற்பரையைத்தியானஞ்செய்வார்
வென்றிமனமுதலாகமுப்பொறியாற்செயும்பாவம்விரைவினீங்கு
மன்றுடையார்குற்றாலம்பரவியருட்பரைபீடம்வணங்கியேத்தி
நின்றுதொழுமட்டுமென்றோபழவினைகளவரிடத்துநிற்பதெல்லாம். ௨௧

உயர்காயத்திரிசெவிக்கிற்கற்பமாயிரம்பிரமனுருவாய்வாழ்வார்
பயனாமெட்டெழுத்துரைக்கிலரியுருவாயிரங்கற்பம்படைத்துவாழ்வார்
புயலார்ந்ததிரிகூடப்பரைபீடத்தஞ்செழுத்தைப்புகல்வார்வெள்ளிக்
கயிலாயத்தொருபதினாயிரங்கற்பமிருப்பர்நுதற்கண்ணராக. ௨௨

இவ்வண்ணம்பலவுளவாந்திரிகூடப்பரைமகிமையென்றுவாக்கான்
மைவண்ணக்கந்தரத்தார்மழைவண்ணச்சதுரகவிமலையச்சாரன்
மெய்வண்ணமுனிக்குரைத்தபடிசூதனுரைத்தருளிமேலோர்வேண்ட
வுய்வண்ணமறைவடிவாங்குறும்பலாமகிமையினையுரைப்பதானான். ௨௩

௰-வது-பராசத்திபீடச்சருக்கமுற்றிற்று.

ஆகத்திருவிருத்தம்—௩௱௫௪.

## ௰௧-வது-குறும்பலாச்சருக்கம்.

நங்கிதுவென்னக்காட்டுமியல்பினுக்கெட்டாதாகி
யாங்கனநினைவுவாக்குக்கரியதாம்பெரியசோதி
பாங்கருநூருவாக்கொண்டுபரையருளிச்சைஞான
மோங்குசீர்க்கிரியைமூன்றுலகெலாமருளிச்செய்தான். ௧

அந்திவானனையமேனியரையிருள்புரையுங்கண்டத்
தெந்தையார்வதனமைந்திலாகமமெழுநான்கேய்ந்த

◦ அரிசனபானிதம்-மஞ்சட்காப்பு.

பைந்துகிர்க்கனிகாய்வள்ளம்பாக்குதேன்வழிந்தாலென்னத்
தந்ததோர்வதனநான்குஞ்சதுர்மறைவிரித்தவன்றே. உ

மூலமாமறைகளுன்காய்முன்னவனருளாற்பின்னு
மேலவாமங்கமாறும்மிருதிகள்பலவாய்ப்பேத
நூல்களாய்ப்புராணமாகிநுவன்றபல்கலையாயென்றுங்
காலமுங்கணக்குங்காட்டிக்கருக்கெல்லாங்கதியாய்நிற்கும். ௩

நாரணர்புவனங்காப்புநான்முகன்படைப்புமெள்ளை
யாரணனரசும்வானோர்வாழ்க்கையுமந்தணாளர்
காரணமகமுமேலைக்கடவுளர்தவமுமாதி
யாரணங்கடப்பாலன்றோவகிலமுநடப்பதம்மா. ௪

ஆவாவர்குலமாசாரமநாசாரங்குணங்கள்குற்றந்
தவர்படுதுன்பமின்பஞ்சத்தியமசத்தியங்கள்
பவனமேயவர்க்கம்பாவம்புண்ணியம்பகுத்தியார்க்குங்
கவர்படக்காட்டலாலேகண்களேபொருவும்வேதம். ௫

அன்னதுமழுக்கள்வாழ்வுபகலிடத்தழிவும்வேதாத்
தன்னதுநிசிக்காலத்திற்சகமெலாமழிவுநோக்கிப்
பன்னருங்காலமெல்லாமழிவிலாப்பான்மைமேன்மை
யுன்னுதன்கருத்தாலுன்னியுபநிடப்பொருளாலோர்ந்து. ௬

கண்ணுறைகவின்சேர்நெற்றிக்கடவுளாலன்றியீது
விண்ணவர்முதலோர்தம்மால்விலக்குதற்கரிதாமந்த
வண்ணல்பேரருளைவேண்டினறஞ்செயற்பாலதாகு
மண்ணினிலறமுந்தானந்தவமிருவகையாமன்றே. ௭

தானமேதவமேயார்க்குந்தருமமேயெனினுமேலை
வானமேயாதியாயபோகமேவளர்க்குந்தான
மோனமேல்விரதம்பூண்டுமுற்றுமேபற்றிலார்க்குத்
தீனமேதவிர்த்துவீடுசேர்ப்பதுதவமேயாமால். ௮

என்றுபநிடதவேதமியல்பினுணர்த்துநாளு
நன்றுமெய்த்தவமேதானநன்னகர்த்தலமேயென்று
நின்றதீபனசமாகநெடிதுநாட்பரனைத்தேடிக்
குன்றுசூழுலகமெல்லாங்குலமறைதன்னைத்தேட. ௯

சீலமந்திரவிசாலச்செண்பகாரணியமேவிக்
கோலமந்திரங்களெண்ணில்கோடிக்குமேலாய்நின்ற
மூலமந்திரத்தைநோக்கிமூலமீறில்லாமூர்த்தி
நூலமந்திரத்தையேத்துச்சூக்குமமந்திரத்தையுன்னி. ௰

பூங்கிளிமழலைபாகன்புடார்ச்சனபுரத்திற்சென்று
மோங்கெழுமறைகடாமேயுலப்பிலாத்தவங்கள்செய்து

அப்பலவின்வடிவுசதுர்வேதவடிவாதலினுலகன்பாலாக
வெப்பலதேவருமிருக்குமியல்பினுலொருகுடநீரிதன்பால்வார்க்கிற்
செப்பரியதேவருக்குமூவருக்குமபிடேகஞ்செய்ததாகுங்
கொப்பலருநீழலிடையுருச்செயுமத்திரங்களொன்றுங்கொடியாமால். ௨௰

ஓகரியதிரிகூடச்சாரலுறைகுறும்பலவினுந்திபூத்த
மாதவனுமம்புகழ்வார்வைகுந்தபதத்திலென்றும்வளமையாழ்வார்
வேதபாராயணஞ்செய்வேதியர்களரன்கயிலைவெற்பிற்சேர்வார்
யாதுமோர்மகம்புரிவாரிந்திரன்போற்சதமகப்பேறெய்துவாரே. ௨௧

ஒருமதிவெள்ளடைபாகுதானமிடிலிருமதிவாழுலகிற்சேர்வார்
வருமதிதோறுங்கொடுப்பார்மகிமையுரைப்பரிதுமறையவருக்கிலைகீழ
லிருபடிநெல்விளையுநிலமீவார்களெழுபடிக்குமிறையவராவார்
கருதுபிதிர்ப்பலியிடுவார்தலைமுறைகளெழுமேழுங்கதியிற்சேர்ப்பார். ௨௨

நெல்லிடுவார்பொன்னிடுவாருறிடுவார்மறைத்தருவின்னிழலிலாவின்
புல்லிடுவார்தமக்கமரர்விருந்திடுவார்திருக்கோயிலைப்பொருந்தவோர்செங்
கல்லிடுவாருலகாளவார்கருங்கலிடுவார்கடவுட்கயிலைசேர்வார்
சொல்லிடுவாரஞ்செழுத்தைத்துதித்திடுவாரிமையவருந்துதிப்பவாழ்வார். ௨௩

அந்தமாதியுங்கடந்தார்குறும்பலாமகிமையிவையனைத்துமேனாள்
விந்தமால்வரைகடந்தமுனிக்கருளிச்செய்தபடிவிளம்பிச்சூதன்
முந்தமானதத்தானந்தத்தானந்தோயார்க்கெழுந்தந்தோயு
மந்தமாருதத்தானமகிமைமுனிவோர்கேட்பவழங்காநின்றான். ௨௪

௰௧-வது—குறும்பலாச்சருக்கமுற்றிற்று.
ஆகத் திருவிருத்தம்—௪௱௭௮.

---

## ௰௨-வது மந்தமாருதச்சருக்கம்.

கல்வியாதனுஞ்சனகரும்புகழ்வதாநவில்வோர்
தொல்வியாதியும்பாவமுந்தொலைப்பதுசுருதிக்
கல்வியாவையுமுணர்வையுங்கொடுப்பதுகருதிற்
செல்வம்வீடுபேறளிப்பதுசெண்பகாரணியம். ௧

ஐந்துநூற்றுவரந்தணருமகச்சாலை
சிந்தையாய்முதுதவம்புரிதேவரச்சிரமங்
கொந்துபூங்குழற்பணையுடன்பரனுறைகோயில்
சந்தனடவியேயிருஞ்சண்பகாரணியம். ௨

பிரசமாமலர்ச்செண்பகப்பெரிதும்பரிற்பிறந்து
திரவுபூஞ்சினைதொட்டிலாட்டயர்ந்துதேனருவிப்
பரமவாரியிற்படிந்துநீள்பணிலமாக்கோயிற்
குரவன்முன்றில்வாய்த்தவழ்வதோர்தென்றலங்குழவி. ௩

அன்னதென்றலின் மகிமையாலருந்தவருறைய
நன்னகர்ப்புடார்ச்சுனபுரமெல்லாற்றிசையுண்
மன்னியின்னுயிர்விடுத்ததோர்பாதகமறையோன்
✠ கின்னநீங்கிமேற்கதிபெறும்மகிமையைக்கிளப்பாம். ௪

வேறு.

விண்டலைத்தெங்கின்பாளைமிடறுடைத்தெழுந்துவாளை
கொண்டலைக்கிழியப்பாயக்குழவியைத்தருவுந்தாய்போற்
கண்டலைக்கமுகைமாவைக்கதலியைக்கடந்துதேமாந்
தண்டலைச்சென்னிசாடுதரங்கநீர்ப்பொன்னிநாடு. ௫

பாரிடைநீதிநீராப்பல்குடிபயிர்களாக
நேரியர்செங்கோல்வேலிகோலியநெடுஞ்சோணாட்டுப்
பேரியலந்தணாளர்பெருங்குலத்தலைமைபூண்டோ
னரியமறைநூலாதியருங்கலைபயின்றநாவான். ௬

அருமகம்புரியுங்காட்சியத்திரிகோத்திரத்தான்
பெருமகத்துவஞ்சேர்கல்வியத்திரியெனும்பேராளன்
வருமகத்துணையர்ங்கற்பின்மடக்கொடிவயிறுவாய்ப்ப
வொருமகனுத்திரோயனுதித்தனனுருவின்மிக்கான். ௭

சீர்பயில்குடிக்கோர்செல்வத்திருமகனுதலாலே
பார்பயின்றறியான்மூன்றுபருவமுமருமைத்தாயர்
தார்பயின்முடிமேற்கைமேற்றந்தையார்மடிமேற்கோல
மார்பின்மேல்வளர்ந்தான்றருப்புல்லுநீஇவளர்வதேபோல். ௮

நூலமேற்பயிலுந்தோறுந்தன்குலத்தருமமஞ்சி
யோலமிட்டரற்றல்போலவொலிமணித்தண்டையார்ப்ப
ஞாலமேற்கிடந்தபாவநடைகற்பநடைகற்றன்வேள்
கோலுமைம்படைநாண்பூணக்குலவுமைம்படைநாண்பூண்டான். ௯

ஒருபிறப்பினியில்லாதவுயர்பிறப்பினில்வந்தானை
யிருபிறப்பாளரெல்லாமிலங்குமுப்புரிசேர்முந்நூல்
பெருகுநான்மறையினுலேபிராயமோரைந்திற்சாத்திப்
பருவமாறகன்றவேழிற்பல்கலைபயிலச்செய்தார்! ௰

ஒருபதோடிரண்டாம்யாண்டுமோதினனுதங்கநாலு
சுருதிநூல்பயிலுந்தோறுஞ்சொற்பயில்கிள்ளைபோல்வான்
றருபுனல்படியுந்தோறுந்தாவுநீர்க்காண்டம்போல்வா
னருநெறி ० நியாசந்தோறுமவிநயப்பாவைபோல்வான். ௰௧

---

✠ கின்னம்—உபத்திரவம்.

● நியாசம்—கிரியைசெய்தல்

உருங்கலைபயிலுங்காலையறம்பொருளின்பம்வீடா
மிருங்கலைநான்கின்முன்னையிரண்டுபின்னொன்றுமோரா
னொருங்குசேரின்பந்தேனுமொழி ✠ பெருந்திணையேயன்றி
விரும்புமைந்திணையுந்தேரான்விதிவழிமதிபோமன்றே. ௰௨

புருவமுமுகமுங்கண்ணும்புயங்களுமுந்நான்மார்பு
முருவமுங்கண்டமாதருள்ளமுங்கலையுஞ்சோரப்
பருவமும்பதினாறாகிப்படைமதன்வடிவமானு
னுருவமொன்றெய்தானாகிலவனிவனென்னலாமால். ௰௩

தன்னுடைக்கொழுநன்மேனிதானெநீர்நோக்குந்தோறு
மின்னிடைமிரதியார்க்குவேறுபாடறியவேண்டிற்
சன்னலஞ்சிலையில்லாமற்காமனைப்பொருவானின்றோ
னன்னவெஞ்சிலையினாலேயனங்கனும்பொருவான்மன்றோ. ௰௪

அளப்பரும்வழிவின்மிக்கானுதலாலணங்கனாரும்
விளக்கில்வீழ்பதங்கம்போலவிருப்புடனவனைச்சூழ்வார்
துளக்கறும்விகாரத்தாலேயவனுமத்தோகைமார்பா
லுளத்தினிற்காதல்கூரவொட்டில்வீழ்பதங்கம்போல்வான். ௰௫

கிளர்பொருள்கல்விசெல்வங்கிளைகளும்படைத்துநீங்கா
விளமையும்பெற்றனன்வாழ்வோர்க்கிவைகளிலொன்றேபோதும்
விளைபொருளோர்நான்கார்ட்டரிடைவீழ்ப்பதானான்
வளர்குடிப்பிறந்தாரோடும்வாழ்வுண்டோமதியற்றோர்க்கே. ௰௬

பேய்மொழிகேட்கும்யாமம்பிறன்கடைதிரிவானின்ற
தாய்மொழிகேளான்மற்றுந்தந்தைதன்மொழியுங்கேளா
னேயுமேற்குலத்தேவந்துமிழிகுலவிடர்பாற்கூடி
யாயசூகரத்தைச்சேர்ந்தவானிளங்கன்றுபோன்றான். ௰௭

வேறு.

மாவேட்டிலெழுதாதமறைசொல்வார்தலைநீங்கி
மாவேட்டிலெழுதாதமலர்கொய்வான்மாதருக்காத்
தீவேட்டமுறைபுரியுஞ்சிலதருப்பையேந்துதல்போய்த்
தீவேட்டமுறைபுரியுஞ்சிலையேந்தித்திரிகின்றான். ௰௮

பெருக்காயத்திரிகுலத்துப்பிறந்துமேபிறமாதர்
செருக்காயத்திரிகுலத்தார்பிறரோடுஞ்சென்றுழல்வா
னிருக்காயத்திரிவாளையிகழுவானினமயில்போ
லுருக்காயத்திரிமயக்காலுயர்தாயத்திரிமறந்தான். ௰௯

---

✠ பெருந்திணை-ஒவ்வாக்காமம்-அது-மடன்மாவேறுதன்முதலியநான்காலுணர்க்கப்பட்டு-யௌவனநீங்கியவழியுங்காமப்பற்றறாதவருந்தல்.

அஞ்சமகமஞ்சமகமாயினுயர்குலத்த
விஞ்சரறுதொழிலுமறுதொழிலாக்ககவிட்டான்
பஞ்சணையிற்கலவிகலம்பாராட்டிச்செவிக்கோதும்
அஞ்சியர்கள்சதுர்மறையேவழங்குசதுர்மறையானன். உ௦

சந்தியானதுமறந்துதரித்தாலும்பொதுச்சேரிச்
சந்தியானதுமறந்துதரித்திடான்சந்திதொறு
முந்தியேதொடுமிடங்கண்முறைமறந்துபொதுமாதர்
முந்தியேதொடுமிடங்கண்முறைமறவாதொழுகினன். உக

பிரமமானமணமும்பிரசாபத்யமணமும்
விரவுபிரமச்சரியம்விட்டமையால்விட்டொழிந்தான்
சரதமாமிழந்ததனாற்றெய்வமணச்சடங்கொழிந்தா
னருமறையினெறிதவறியாரிடமும்விடுத்தனனால். உஉ

பாசுரத்திலெழுதரியபாவையரைவழிச்செலவின்
மாசுரத்தில்விழித்துயிலிற்பைசாசமணம்புரிந்தான்
பூசுரர்க்குமுறையல்லாப்போரோறுபொய்த்தழுவி
யாசுரத்தற்கோவசியரணங்காரைமணஞ்செய்தான். உங

மரபுதனிலேழமையோன்மடமகளைவலிதாக
விரவுதனிற்கொண்டேகியிராக்கதமாமணம்புணர்ந்தா
னரவணையவல்குலார்மூவகையாரல்லாமற்
கரவுதனிற்சிலமாதர்கந்தருவம்போற்புணர்வான். உச

கோமளஞ்சேரிவ்வகையாற்குலவுமணமடவாரை
மாமனையிற் ௦ சாரிகைபோன்மாறுதசிறைப்படுத்திக்
காமவெரிமூட்டுகின்றக்கலகவிழிக்கணிகையரைப்
பூவுலர்மேலன்னமெனப்பொன்றூவிநிறைவித்தான். உரு

வேறு.

பூவியலன்னம்போல்வார்புலவியேநிலமதாகத்
தூவியபொருள்கள்யாவுந்தூமுழுலவித்ததாகக்
காவியங்கண்ணார்மோகக்கலப்பையேகருவியாக
மேவியசரதபோகவிரகவேளாண்மைசெய்தான். உசு

அந்தியும்பகலுமாயவரும்பொழுதிரண்டுமூன்று
சந்தியுமறந்தானகாமொழுக்கமுந்தவறிலாத
மந்திரவிளக்கமெல்லாம்வரவரமாதர்மோக
முந்தியகுறைக்காற்றூலவிந்தனவொவ்வொன்றாக. உஎ

அடிமுறைகடந்துசெல்லவறிவுகண்ணிலனாய்மோகச்
செடிவழிகழன்றுகாமத்திரள்புலிதுடரவோடிக்

௦ சாரிகை-பூவைப்பட்சி

கொடியிடைக்கணிகைமாதர்கொங்கைவெற்பிடறிவீழ்ந்து
கடிதடவரவிதாவிக்கலவியங்கயத்தாழ்ந்தான். ௨௮

கொம்பெலாமன்னோன்காமக்கொடிகதளிர்தளிர்த்துச்சாதி
பம்பியவரம்புதோறும்பழிமொழிக்காடுபல்கி
யம்பலஞ்சந்திதோறுமம்பலாயரும்பியெங்கும்
வம்பலர்பெருகப்பூத்துவடுக்களாய்ப்பரந்தவன்றே. ௨௯

ஆனவைசெவியிற்கேளாவவன்குலத்தறிஞனவான்
ஞானநூலவனுக்கோதிநன்னெறியுணர்த்தச்சென்றான்
றான்முன்னம்பயிற்றுங்கல்விதன்னையுமயர்த்தோரான்
மேனெறிசெறிவிலானைவேறிடத்திருத்திச்சொல்வான். ௩௰

வேறு.

எறும்புகடையானைதலையெண்பத்துநான்கிலக்கயோனிபேதம்
பிறந்துழலுமுயிர்க்கெல்லாமனிதராய்ப்பிறப்பரிதுபிறந்தாரேனும்
பறம்பர்சோனகர்சீனர்கானவர்துளையர்பழையராதி
யறைந்தகீழ்க்குலநீங்கிமேற்குலத்திலவதரிப்பதரிதுமைந்கா ௩௧

தாழ்குலத்தோர்கோடிசென்மந்தவம்புரியவேண்டுமுயர்சுத்தராகக்
கேழுழவர்கோடிதவஞ்செயவேண்டும்வணிகர்சென்மங்கிடைக்கவேண்டிற்
சூழ்வணிகர்கோடிசென்மந்தவம்புரியினரசரெனத்தோன்றுவிற்பர்
வாழரசர்கோடிசென்மதவஞ்செயினுங்கிடையாதுமறையோர்சென்மம். ௩௨

அந்தணராய்ப்பிறந்திடினுங்குருடுசெவிடூமைமுடமகன்றுமேனி
சந்த[illegible]டன்பிறப்பதரிதுபிறக்கினும்பாக்[illegible]மா[illegible]
கந்த[illegible]வளம்புனைமா[illegible]ர்[illegible]ட்டி[illegible]வர[illegible]துக[illegible]ட[illegible]பார்மேன்
முக[illegible]நாய்த்துயா[illegible]றறமே[illegible]யத்து[illegible]தவம்[illegible]முயன்றுயமுன்னர். ௩௩

ஓதுபிரமச்சரியமொழிந்தவானப்பிரத்தமுயர்சன்னியாச
நீதிநிலைபெறு ㅇ காருகத்தியமாமாச்சிரமநெறிகளுணைவிற்
கோதிலாமூவர்நெறிப்படர்பயிர்க்குக்கொளுகொம்பாங்கொள்கையாலே
மேதினியில்யாவருக்கும்வியன்காருகத்தியமேவிசேடமாமால். ௩௪

மூலமாகவைகறைப்போதெழுந்துசவுசாதிமுதன்முடித்துவாசப்
புனலாடிச்செபதவங்கண்முயன்றுகடவுட்பூசைமுயன்றுமுப்பா
லனலோம்பியைவகைவேள்வியுமியற்றிக்கிளைஞருடனடுத்தோர்தம்மைத்
தினமோம்பிறகர்ந்தகலைபயின்றிருத்தலிலறத்தோர்செய்கையாமால். ௩௫

பூமரமாயூர்வனவாய்மிருகமாய்ப்புட்குலமாய்மனிதராகிப்
பாமரமாய்ப்பண்டிதராயொழுகத்தாதுயர்கதேணிப்படிப்போலேறித்
தேமறையோனுயினைமேற்சுவர்க்கபகத்துனைதயதஞ்செலுத்தற்பாலாய்
காமமெனுமாதரத்தேதாவியினிக்கீழ்வீழல்கடனோலையா. ௩௬

---

ㅇ காருகத்தியம்-இல்லறவியல்பு.

விதியான விறைநீருக்குடைகுளமிக்கானகுலநெறிக்கோர்தின
மதியானமதிவிழுங்குங்கோளராவுரவத்துறுவளர்க்குங்கானங்
கொதியானநரகிழுக்குங்கொடும்பாசமுயிருருக்கிக்குடிக்குங்கூளி
க்கதியானவழியடைக்குங்கற்பெருங்கபாடமன்றேகடியகாமம். ௬௭

சுகுடஞ்சேர்பரிமகதூதியற்றிவானரசுகன்னற்சுவைபோற்பெற்றன்
சகுடம்போலவன்மனதிற்சகிகாமம்பிடித்தலைப்பத்தலைகீழாக
மகுடம்போய்வானகம்போய்வையகம்போயரசுபோய்மலைப்பாம்பாக
நகுடன்போய்வீழ்ந்தகதையறியாயோசிறியாயோநளினத்தாரோய். ௬௮

வேறு.

மனைவளர்குலஞ்சேர்கற்பின்மங்கையர்வருந்தநீபோய்ப்
புனையிழைப்பரத்தைமார்க்குப்புதுநலம்பெருகநல்கல்
சினைதருபருவப்பைங்கூழ்சென்னலின்பொதிகள்வாடக்
கனைகுரலெழிலிவீண்போய்க்கானலிற்பொழிவதென்றன். ௬௯

கொழுந்துவிட்டறிவுதோன்றக்கொளுத்தியகுரவன்வாய்மை
கழுந்தனையானுக்கேதோகடத்திலைக்கவிழ்த்துவீழ்த்த
வுழுந்தெனத்தகையவாகவுகுத்துமேனுரைப்பதானு
னெழுஞ்சுடர்விளக்கிட்டாலுமிருளன்றேகுருடர்க்கம்மா. ௭௦

மணிநகையாரோதெய்வம்வாக்குபதேசங்கொங்கைத்
துணைகுருபீடம்பாதத்துணைவருடுவதேபூசை
யணைவதுமுத்தியாசானிஃதொழுமறியாய்போலுங்
கணிகையர்முகத்திற்கூறுங்காமநூலகமங்கொன்றன். ௭௧

மருண்மொழிபொருளாக்கூறும்வஞ்சகமறையோன்றன்னை
யருண்மொழிக்குரவன்சீறியகன்றனனதலாலே
திருவொடுகிளையும்வாழ்வுஞ்சிதைந்தனன்சிறிதுநாளிற்
குருமொழியிகழ்ந்தமூடர்குவலயத்தெவ்வாறுய்வார். ௭௨

தனமெலாங்கணிகைமாதர்தனவிலைக்காற்றவாகி
மனையுளபொருள்போய்ப்பார்ப்பான்மற்றுளபொருளுந்தேடிற்றுக்
கனதைபோய்மெலிவாயூரிற்கடப்படுங்கடப்படாதே
யினையதோர்வறுமைபூண்டானினியதோகொடியகாமம். ௭௩

கானகவேட்டமாடிக்கடுங்கொலைகளவுசெய்து
தானமுமழிந்துமானந்தவறினுந்தவறுன்காமச்
சூனமங்கையர்பாலூனுந்தவசமங்கையர்பாற்கள்ளு
மீனமங்கையர்பாலூனும்போக்குமின்சுவைதானென். ௭௪

நாரியர்மயக்கில்வீழ்ந்துநாற்குலாடைவிட்டவனர்
சேரியிற்புகுந்தருள்தெய்வக்கெறிந்தனராந்தளை
சூரினிற்புகுந்தாவன்னமொழிந்தனர்பழித்துநீக்கி
வாரியின்முழுகிச்சிந்திபுரிந்துவாலாரமைதீர்கதார். ௭௫

கீழ்குலத்தாழ்ந்தாள்வேறுகிளைவேறுதாரம்வேறாய்
வாழ்வுபோய்க்குலினந்தீன 0 மைமைமருவகையின்மாய்ந்தார்
சூழ்தருநரம்புதண்டஞ்சுரைமூன்றுமிசையில்யாழாம்
வீழ்படில்வேடர்கண்ணிவிறகுவெம்பலியோடன்றே. ௪௬

அங்கணைத்துக்கபால்போலருங்குலப்பெருமைவிட்டுத்
தங்கணக்கிளைகைவிட்டுத்தாரமோரேர்கைவிட்டுக்
கங்கணக்கையார்மோகக்கைவிடானறிஞோர்விட்ட
கொங்கணஞ்சிலநாள்வைகிக்காழகங்குறுகப்புக்கான். ௪௭

வேறு.

நீர்நாடுநீங்கியுமேநீங்காதுபின்றொடரும்
போர்நாடுகாமவெள்ளநீந்தவொருபுணையின்றிச்
சீர்நாடுமாதர்தனக்குடங்தேடித்திரிவாற்கு
வார்நாடுந்தடைதீர்ந்தமலைநாடுவாய்த்ததுவே, ௪௮

மலைநாட்டில்வருதூர்த்தமறையோனைமடக்கொடிமார்
முலையானைமதமூட்டிமுரிபுருவச்சிலைகுனித்துக்
கலையாளிதேர்நிரைத்துக்கட்டெழிலினுற்பகைத்த
சிலைமாரன்பொரவிடுத்தசேனையெனப்புடைவளைந்தார். ௪௯

காவிநெடுங்கணவலையான்மடுப்பவருங்காரிகைமா
ராவிமருண்டருமறையோனழகுவலைப்புகுந்தவலை
தூவியனம்போற்றுடர்ந்தார்தூர்த்தமாமறையோனும்
பூவையர்தம்பிடிச்சூழல்புகுந்தமதக்களிறானான். ௫௰

ஆம்பதிதன்குலம்வாழ்வும்பறிகொடுத்துமவர்மோகம்
போம்பரிசிலுவந்துவிடான்பொய்களவாற்பொருள்கவர்ந்து
காம்புறழுந்தோளியராங்கணிகையர்பாற்கருத்தழிவான்
வேம்பரிசிலுடல்கரிந்தும்விளக்குவிடாப்பதங்கம்போல் ௫௧

சிலமாதர்செங்கையொடுஞ்சிலமாதர்கொங்கையொடும்
பலமாதர்புலவியொடும்பலமாதர்கலவியொடும்
நலமேறியுவட்டெடுப்பநாளுபோகம்பொசித்துத்
தொலையாக்கனிபழுத்துச்சொரிசோலைக்குருகானான். ௫௨

வேறு.

மானமின்றியவல்லியர்மாமுலை
யானைவாய்க்கரும்பாகியுங்கண்வலை
மீனமாகியுமல்குல்வியாழத்தின்
பீனவாய்ப்பெருந்தேரையுமாகினான். ௫௩

---

0 மைமை—சாதுப்பதில்லாமை

நையலாரிடைத்தாகம்விளைந்தும்
பொய்யெலாநிறைபோகம்விளைந்தது
மையன்மோகம்விளைந்ததுமற்றவன்
மெய்யெலாம்வினையாகவிளைந்ததே. ௫௪

நாணிலார்நயனப்பெருந்தும்பியே
ஆணமாமுடலெங்குந்துளைத்ததோ
காணலாமதன்பூங்கணைக்காயமோ
பூணலாப்பிணிபூண்டுபுண்ணாயினன். ௫௫

வின்றுலாவுயர்விண்ணவராயினும்
பெண்கள்காமம்பிடித்தவருய்வரோ
புண்களாகிப்புரந்தான்மெய்யெலாங்
கண்களானதுகாமத்திறலன்றே. ௫௬

மருவிருக்குமலர்க்குழல்சோரவே
யுருகிநித்தமுடன்புணர்மாதரார்
பெருவருத்தமுற்றான்பிணிகாண்டலு
மருகிருக்கவருவருப்பாயினர். ௫௭

வேறு.

முன்பெலாங்கனிகூரமோகமனுபவித்து
வன்பிணியாலுழல்காலமறுகினிடைத்தள்ளினு
ரென்பெலாங்கரைந்துருகுமிற்பிறந்தாரல்லாம
லன்பிலாப்பொதுமாதராபத்துக்காவாரோ. ௫௮

தலைகாடுபுறந்தள்ளச்சாரன்மலைகாடேகி
மலைகாடுபுறந்தள்ளப்பாண்டிவளநாடணைந்தான்
கலைகாடுங்குலநெறிபோய்க்கைப்பொருள்போய்நோய்பூண்டும்
புலைகாமமெனுந்தேக்கிலையிற்புனல்போல்வான். ௫௯

வடையரப்பசியடுக்கவுறுப்பெல்லாநோய்பிடுங்க
வாடைதுணிபோர்த்தவுடலீப்பிடுங்கவருந்தவான்
பேடைமயிலார்விரகப்பிணிக்குடைந்துபுறங்கடைபோய்
வாடையேற்றயர்வானேல்யாரைவிடுவான்மதனன். ௬௰

சரதநெறிமணவேட்கைத்தன்மனையார்மனங்கொதிப்ப
விரகொடும்போய்ப்பிறர்மனையின்மிதித்தகால்விரலழுகி
மரபழியமுன்றொட்டமணிக்கரங்களுடனழுகிப்
பரமனையார்தமைத்தழுவும்படிவமெலாம்புண்ணானான். ௬௧

தலைமைமாற்குலமறுகுசார்கிளைஞரொழாமுக்கால்
விலைமாதர்மறுகணையான்மேனியுருவழிந்தமையால்
வலையர்சேரியிலுமன்னார்சேரியின்மறுவும்
புலையர்சேரியின்குந்திப்புறங்கடையிலுறங்குவான். ௬௨

அம்மையிலேபலிக்குமென்பர்செய்தவினையாங்கொருசார்
செம்மையிலாமறையோன்செய்தீவினையெல்லாமிவனுக்
கிம்மையிலேபலித்ததனாலிவையறிந்துவிலகாதார்
வெம்மையுறுகொடும்பிணிக்குநரகினுக்கும்விருந்தாவார். ௬௩

வருநாளின்முகம்பார்த்தோர்மறுநாட்கண்பாராரா
யொருநாளிலுறைபதிமற்றொருநாளிலுறையாமற்
பெருநாடுபலகழித்துப்பிறநாடுசேர்வதற்குத்
தருநாடுமிருள்வனத்துவினைதள்ளத்தனிப்போனான். ௬௪

ஆகத்திலெழும்புபசிக்கருந்துவதொன்றில்லாமற்
றாகத்தாலுலர்ந்துதண்ணீருங்கிடையாமற்
சோகத்தாலயர்ந்துகொடும்பாலையிடைச்சுழல்கின்றான்.
பாதகத்தாறபத்துணைஞர்படும்பாடிதுவன்றோ. ௬௫

கூண்டுவருநெறிதவறிக்கொடுஞ்சுரம்புக்கயர்காலைப்
பூண்டகுலநெறிதவறிப்புலைபுகுந்தமறையோனைத்
தீண்டலுறும்வாலாமைதீரவோசெழுங்கதிரோன்
காண்டலுறுமாபாவங்கழியவோகடல்குளித்தான! ௬௬

உழிக்கொண்டபுள்ளொளிப்பவுயர்வனமுங்கண்முகிழ்ப்ப
விழிக்கொண்டசுரமடைந்தாயினியெங்கேபோவதெனப
பழிக்கொண்டமறையோன்செய்பாவமெல்லாங்கூடியொரு
வுழிக்கொண்டுவளைந்ததுபோல்வந்துவளைந்ததுகங்குல். ௬௭

அன்றுமோருணவில்லாமலதற்குமுனையிரண்டுநாளா
லொன்றுமேபலியுமின்றிவெம்பசியுடற்றவோய்ந்து
கன்றினன்சைவமல்லாக்கடும்பரசமையப்போலச்
சென்றுசேர்நெறியொன்றில்லாக்கானிடைத்திகைத்துநின்றான். ௬௮

வேறு.

வாட்டாரைவிழியார்க்குவருந்துவான்வனைதநிலையா
வாட்டானைபுலியார்க்கவருந்திறன்மாதர்முலைக்
கோட்டானைத்துணைமேவிக்குளறுகுரல்கேட்டுவெயயான்
கோட்டானைத்துணைமேவிக்குமுறுகுரல்கேட்டயர்ந்தான். ௬௯

கானக்கள்ளிகள்பாலுமிடுஞ்சோறுமிதழ்க்கனிவாய்ப்
பானக்கள்ளுடனேநதப்பரிவாயுண்டுறைகுவான
கானக்கள்ளிகள்பாலும்பெறுஞ்சோறுங்கடிமலர்வா
யூனக்கள்ளுடனேநதவுண்ணான்மற்றுறங்கானால். ௭௰

வீங்கிவளர்ந்ததுதிமிரம்விருத்திராசுரனேய்ப்ப
வோங்குமுழக்கன்றுவிக்கிரனொத்ததுவானே

மாங்கசுரன்போயொளிப்பவந்தரகாதன்கரத்தில்
வாங்குமொருவச்சிரம்போல்வானிலெழுந்ததுபரிதி. எக

வேறு.

வடிந்திடத்திமிரவெள்ளம்வளர்ந்திடப்பரிதிகானிற்
படிந்திடுமாத்திரோயன்படருறுவினையோநோயோ
முடிந்தநாளதுவோவென்றுமுடிவிலாப்பிறப்போவெல்லாம்
விடிந்ததுவிடிந்ததென்னவிடிந்ததகக்குற்கானம். எஉ

விடிந்ததென்றெழுந்துபோவன்மெய்களர்சயர்ந்துசோர்வ
னடர்ந்தகல்விடறிவீழ்வனடியிடச்சவியிலாதே
முடங்குவன்மரங்கடோறுமுட்டுவனெட்டியேகி
நடந்தனன்றிருக்குற்றாலநகர்க்குயோசனைக்குஞாங்கர். எ௩

வேறு.

கடிக்கொண்டபூங்கோதைக்கணிகையர்க்கேகாதலனாய்க்
குடிப்பண்பின்மடவாளைக்கொடுஞ்சிறைசெய்பாதகத்தான்
மிடிக்கொண்டுவெறுந்தனியாய்வெயிற்கானறபால்வீழ்ந்து
பொடிக்கொண்டதழல்வீழும்புழுப்போலத்துடிக்கின்றான். எச

உண்ணாதுபசிதுரப்பவுடலெல்லாம்பிணியுலைப்பப்
புண்ணாகமெய்யயர்காற்போற்றவொருதுணையின்றி
யெண்ணாதடலவெண்ணியிளைத்திருமிவாய்குளறிக்
கண்ணாருமொளியிருண்டுகாதிலோசையுமடங்கி. எரு

தருணநிலைதடுமாறிச்சாக்கிரஞ்சொற்பனஞ்சுழுத்திக்
கருவிகரணங்களெலாங்கைகடந்துமெய்யயர்ந்து
துரியவவத்தையில்வீழ்ந்துதுரியாதீதங்கடந்தே
யுரியதொருருக்குமத்தாயுயிரொடுங்குமந்நேரம். எசு

அறநெறிமுற்றவப்பயனேனுவத்திரிகோத்திரமறையோ
ருறுகதிமெய்த்தவப்பயனேவுயிர்விடும்வேதியனுடலிற்
குறுமுனிக்கன்புடையபிரான்றிரிகூடக்குலவரைவாய்ச்
செறிமலர்ச்செண்பகச்சோலைத்தென்றற்கால்பாய்ந்ததுவே. எஎ

மால்பாய்ந்தமறையவன்மேற்றிரிகூடவரைவசந்தக்
கால்பாய்ந்ததென்கேனோகவுணியன்வாய்க்கவுரிமுலைப்
பால்பாய்ந்ததென்கேனோபவக்கடலிற்குகப்பெருமான்
வேல்பாய்ந்ததென்கேனோயாதெனயான்விளம்புகேன். எஅ

இந்தவகையிறந்தானையியமபடரொதிர்முடுகி
வந்துநெடுவலைவீசிவளைந்துபெரும்பாசத்தாற்
பந்தமுறக்கட்டியொருபட்டமரந்தனிர்த்ததெனச்
சிந்துதிரமெழப்புடைத்துத்தென்புலத்துக்கொடுசெல்வார். எகூ

செல்லுகின்றவேலைதனிற்சிவபிரான்கணநாதர்
நில்லுமெனத்தூதர்தமைநிராகரித்துமறையோனை
வல்லுநிரக்கறைதடைத்தவன்பாசமறுத்துநயஞ்
சொல்லுவனபலசொல்லிச்சூட்டுவனபலசூட்டி. அ௰

அரமகளிர்கவரியிடவந்தரபல்லியங்கறங்க
வரியிசைக்கின்னரர்பாடவானவர்பூமழைபொழியத்
புரிசடைப்பண்ணவர்புகழப்புட்பகத்தின்மீதேற்றிக்
கரியுரிவைதரித்தபிரான்கயிலைதனிற்கொடுபோனார். அக

வேறு.

செம்மானமிசையிழிந்துசென்றுமறையோன்கயிலைச்சிகரமேவிப்
பெம்மானையடியின்மிசைமுடிபணிந்தானந்தவெள்ளப்பெருக்கிலாடிக்
கைம்மானுஞ்சுடர்மழுவுங்கறைமிடறும்புரிசடையுங்கண்கண்மூன்று
மெய்ம்மானுந்திருவடிவுங்கண்டிருகண்களிப்பவுடல்விதிர்ப்பநின்றான். அஉ

சென்றுதொழுமந்தணனையருளோக்கிற்கயிலைவளர்சிவபிரானார்
நன்றுநீயுயிர்விழ்க்கானமதுசெண்பகாடவிசேர்நறும்பூந்தென்ற
லொன்றியுனகாகமிசைத்தவராலாற்பாவமெல்லாமொழித்தோங்கண்டா
யென்றுமழியாமலினியெமதுகணத்தவர்பதத்திலிருப்பாயென்றார். அ௩

வேறு.

அன்றுநாதன்றிருவருள்செய்ததான்
மன்றன்மாலயன்வாழ்வுமுவர்ப்புறச்
சென்றுசெல்வச்சிவகணத்தாருட
னென்றுநீங்கலாப்பேரின்பமெய்தினான். அ௪

[0] யாமியந்தனிலெய்தியதூதவர்
சாமியந்தகன்றாளிணைபோற்றியே
காமியந்தனன்கண்ணுதல்பாலுற்றான்
பூமியந்தரம்போற்றிடப்போயென்றார். அ௫

வெய்யவாறுடைவீணனைத்தென்புல
மெய்தவாறுகொண்டேகலுமேதடை
செய்தவாறுஞ்சிவபெருமான்றொண்டர்
வைதவாறும்வளர்செவிசாற்றினார். அ௬

செறிவுசேர்மனத்தென்புலக்கோமகன்
குறிகொள்சித்திரகுத்தனைக்கூவியே
வெறிகொள்விப்பிரன்மேற்கணக்காலுள
பொறிகள்யாவும்புகலுதியென்றனன். அ௭

---

[0] யாமியம் - தென்றிசை.

சாத்திரம்பலதான்கற்றுமத்திரி
கோத்திரத்திலுதித்துங்குலநெறி
நேத்திரத்தொழினீக்கிவசியர்க்குஞ்
சூத்திரர்க்குங்கடைஞரிற்சூன்றினான். அஅ

கற்புமங்கையர்கட்டழித்தான்பொரு
ளற்புமாந்தரடைக்கலம்வெஃகினான்
பொற்புமாதர்புறங்கடைநின்றுளா
னறபுமாந்தர்க்குநண்ணியதீமையான். அகூ

சாலைசத்திரந்தன்மமலைத்துளா
லாலயத்தின்களவுகையாட்சியான்
மாலைகாலையுஞ்சந்திமறந்துளான்
வேலைதோறுமதுறுகர்வேட்கையான் கூ௦

குருவுந்தெய்வமுநிந்தைசெய்கோளினான்
கருதுநோன்புடைக்கன்னியர்காமுகன்
றருமயோகர்தவங்களழித்துளான்
பொருவின்மோகப்புலைச்சியர்போகத்தான். கூக

அந்தணர்க்கோருங்கலைமூவகைச்
செந்தழற்குத்தெறும்புனல்சிந்தைசெய்
மந்திரத்தின்மறவிபிறவொலா
நிந்தைசெய்யுநிரக்கரகுக்கியான். கூஉ

பிறந்தநாட்பிதிர்நாள்வருடாதியிற்
சிறந்தநாட்சிவராத்திரியாதியா
வறைந்தநாள்விரதாதிமுச்சந்தியு
மறஞ்செய்வாள்விழியாமைமறந்திரான். கூங

அலைவிலாதகுடிகளலைத்துளான்
மலர்செய்காவின்மரங்கள்குறைத்துளான்
புலைசெய்பான்மையும்பொய்களவாதியுங்
கொலைசெய்பான்மையுங்கூறத்தகாதவால். கூச

இரும்புபோலுமிதையத்தன்கள்வெறிச்
சுரும்புபோல்புவன்கோபச்சுடரன்று
னொருங்குயாவத்துடன்பிறந்தானற
மிருந்தவூரிலிருந்தறியானென்றூர். கூரு

கரணவீரர்கணக்கிவைகூறது
நரகவீரனைநல்வழிசேர்த்திடும்
வரவியாதெனமாமனத்தெண்ணினான்
றிரமதாகவிச்செய்யுஞ்செங்கோலினான். கூசு

ஆரவமாலையவிர்சடையாரிடைப்
பரமாசியம்யாதுபயந்ததோ
பிரமன்மாலறியாதபிரானுடன்
விளைவில்விண்ணப்பஞ்செய்திடவேண்டுமால். க௭

செப்புமேலவைச்சிவபெருமான்முறை
தப்புமேல்வைத்தகல்வதுதாக்கெனு
வெப்புமேல்வைத்தவெம்பகடேறினான்
கப்புமேல்வைத்தசூலமுங்கைக்கொண்டான். க௮

பாசந்தண்டமெழுக்கரபத்திரம்
வீசுங்கைவலையெஃகம்விறன்மழு
மூசுசம்பமுசலங்கணையம்வாட்
பூசல்வீரர்கொடுபுறஞ்சுற்றினார். க௯

காலனும்பெருங்காலமிருத்துவுந்
தூலவுக்கிரன்றன்முகனாதியா
நீலமேனிநிரைத்தெழுதூதரு
மோலமென்னவொருபுடைசுற்றினார். ௨௰

விளங்கும்வைவைச்சுதபுரமேவினார்
துளங்கியோர்புடைசூழ்ந்தனர்சூழ்திரை
யளந்துபோற்றினர்தானவராதியோர்
வளர்ந்துகிங்கரர்மல்லர்களாடினார். ௨௰௧

பெருவியாதிமுயல்வலிபீனிசங்
குருமகோதரங்குட்டங்களாதியா
மருவுசேற்றும்வாதபித்தங்களும்
பொருவுசேனைகளாய்ப்புடைசூழ்ந்தவே. ௨௰௨

வெட்டுவார்துணிப்பார்மிகுபாவரைக்
கட்டுவாரடிப்பார்நரகாதிபர்
இட்டுவார்பணிகேட்பவராய்நமன்
மட்டுவார்கழல்வந்துவணங்கினார். ௨௰௩

ஆயசேனைக்கடலிடையீயக்கலார்
தூயசாமரைத்தெண்டிரைதுள்ளுறப்
பாயுமோதையிற்பல்லியமார்த்தெழ
மேயவூர்தியன்வங்கத்துமேயினான். ௨௰௪

சொர்ந்துவைவைச்சுதபுரநீங்குபு
வந்துசேர்ந்தனன்வைதரணித்துறை
யுந்துதாரையைநோக்கினனொண்கயல்
பந்திசேர்தருபல்லிநோக்கல்போல். ௨௰௫

பாங்குசேர்பரிவாரத்தொகையெலா
நீங்குகென்னநிறுத்திவெங்காலனை
யாங்குகூவியமைச்சனோடேகியே
வீங்குசோதிக்கயிலையைமேவினான். ௯௬

நீலமால்வரைநின்றிழிகொண்டல்போற்
கோலமேதியிழிந்துசெங்கோற்கிறை
காலனோடுகயிலையஞ்சாரல்வாய்ச்
சூலமேந்தித்தொழுதெழீஇப்போயினான். ௯௭

வேறு.

சென்றுவெள்ளியந்திருமலைத்தென்றிசைகாத்திடும்வடமேருக்
குன்றுபோலுயர்கோபுரவாய்தலிற்குறுகிவிண்ணவரொல்லா
நின்றுபோற்றுபொற்படியிசைத்தென்புலந்ருபன்வெம்மனக்கோட்ட
மன்றிநின்றுதன்வரவினையருங்கடைகாவலர்க்கறிவித்தான். ௯௮

கடைகளேழினொருவர்பாலொருவராய்க்கழறிமற்றவர்பூதப்
படைகள்காவலர்க்குணர்த்திடவன்னவர்பணவரவணிகோலச்
சடைகுலாமுடிச்சூடாமழுநந்திநந்தலைவனுக்கமைந்தோத
வுடையநாயகன்சன்னிதானத்தவனுணர்த்தலுங்கொணர்கென்றான். ௯௯

நந்திநாயகனருண்முறைசிவகணநாதர்கள்புகுந்துய்ப்பப்
பந்தியாம்பலதிருக்கடைகடந்துமேற்படர்ந்துதென்றிசைவேந்தன்
புந்தியார்ப்புறக்கண்டனன்சிவபிரான்பொன்னணிதிருக்கோயின்
முந்தியாரணர்நாரணர்பெறவொணுமுறைமைபெற்றனனென்றான். ௧00

வேறு.

கின்னரர்கின்னரமிழற்றத்தந்திரர்தந்திரிமீட்டிக்கீதம்பாடப்
பன்னகர்கிங்கிரர்கருடர்சித்தர்வித்தியாதரர்தம்பணிசெய்தேத்தப்
பொன்னகரிந்திரன்பரவவானவர்பொன்மாரிபுட்பமாரிதூவப்
பின்னகபந்திகளசையவரம்பையர்கண்மணிக்கவரிபிடிப்பமாதோ. ௧0௧

புவலோகர்வலம்புரியப்பாதாளலோகர்மணிப்பொற்பூணேந்தத்
தவலோகர்சனலோகர்சத்தியலோகரும்பணிந்துதவப்பேறெய்திப்
பவலோகங்கடந்தேறமாலோகத்தவர்பரமபதமேயான
சிவலோகந்தனைவேண்டியடிபரவச்சிவகணங்கள்சேவைசெய்ய. ௧0௨

அணுமாதிசித்திகள்குற்றேவல்செயவீசானனடைப்பைதாங்க
மணிவாரியோரேழுந்திறையளப்பப்பகல்வேந்தர்மாருத்தீபம்
பணிமாறமதிபடிமக்கலமேந்தமறைதெளிப்பப்பவனன்றூர்ப்பத்
தணியாததழற்கடவுள்பரவியாலத்திசுற்றத்தருமம்வாழ்த்த. ௧0௩

அறுசமையமைம்பூதநான்மறைமுக்காலமிரண்டறங்கள்யாவு
மெறும்வலிகள்வேண்டிபொருகோடிவரமந்திரங்களெண்ணில்கோடி

மறுவறநின்றிருகோடிபுகழ்த்தேத்தவரிபிரமர்மருடகோடி
செறிகமலத்தாள்வருடப்பதிறெருமுக்கோடியமரர்தேவர்போற்ற. கயஎ

கங்கைசரசோதிசிந்துயமுனைகோதாவிரிநன்மதைகாவேரி
மங்கலமாநதிபலசாமரையிரட்டவிமையவரையிறைவாய்த்த
நங்கையொருபாலிருப்பப்பொருப்பெறிந்தவேற்குமரனடுவண்மேவ
வெங்கயனையமர்சாய்த்தவிசையமதக்களிறொருபால்விளையாட்டெய்த. கயஅ

மாணிக்கமரகதங்கோமேதகமுத்துப்பவளம்வயிரநீல
நீணித்தமணிபுருடராகவயிடூரியங்களிழைத்ததுணி
ரூணிப்பொனமேருவெனவுயர்மணிமண்டபத்தரியாசனத்தின்மீது
வேணிச்செவ்வான்படரமதுதலமுமொருபவளவெற்புமான. ாயகூ

ஒருமருங்குமிருசருமத்துகிலுடையுமொன்றுகண்ணுமுயர்நோக்குந்தன்
கருணைபொழிதிருமுகமுமைமருதுபருடவிமுடிமேற்கங்கையாறும்
பருதியெழுவெயிலெறிக்குமவுலியும்வெண்ணிலவெறிக்கும்பணிலத்தோடும்
பொருமுரககுண்டலமுமண்டலமும்விண்டலமும்பொலிந்துளானை. ாயஎ

கரதலமுமான்மழுவுமபையவரதமுஞ்சுருதிகனிந்தவாயு
மரவணியுமுரககண்கங்கணமுங்காண்டொறுமற்புதமேற்கொண்டான்
திருவடியுங்குழைகழலுமிடம்வலங்காண்டொறும்பயமுந்திடமும்பூத்தான்
பிரமன்மால்சிரமாலையுயல்வருதிண்புயனோக்கிப்பிரமைபூண்டான. ாயஅ

முதிரவர்னவர்கணமாம்பரவையிடைமுழுமணியாசனமென்றோங்கு
முலைதயவரைதனிலனந்தகோடிகதிரொருருக்கொண்டுநித்தாலென்ன
வதியுமுயர்பரஞ்சுடரைக்காண்டொறுங்கண்வழுக்கியன்பின்வழிக்கொண்டேகித்
துதிபரவியெழிற்கடலினருட்டுறைவீழெழிலியெனத்தொழுதுவீழ்ந்தான். ாயக

ஆதியாய்சரணமநுபூதியாய்சரணமகிலாண்டமீன்றாள்
பாதியாய்சரணமறைவேதியாய்சரணமருட்பரமானந்தச்
சோதியாய்சரணமெனவீழ்ந்தானையெழுகவெனச்சுருதிநாதன்
மேதியான்முகநோக்கிவந்தகாரணம்யாதுவிளம்பாயென்றான். ாஉய

என்றுமுதல்வன்றிருவாய்மலர்ந்தருளப்பெற்றேனென்றிருகைகூப்பிச்
சென்றுதுணையடிவணங்கிவணங்குதொறுமுடல்விதிர்ப்பச்சிலிர்ப்பரோம
நின்றுசெழுநதிலொதுக்கிவாய்புதைத்துநடுநடுங்கிவிமலமூர்த்தி
யொன்றுளதென்னேறுவிண்ணப்பமெனவுரைத்தருளாலுணர்த்தினின்றான். ாஉக

பாரின்மேன்மறைக்குலமாம்பயிர்க்குமுதகளையாகப்படர்ந்தானந்த
வூரின்மேலுதிக்குமுனம்பாதகத்தினுடனுதித்தானொழுக்கந்தீர்ந்தா
னீரின்மேற்குளித்தறியானமாதர்முலைத்தடங்குளிப்பானீசமாதர்
காரின்மேவியுந்தீண்டியவர்மனைபுக்கனருந்திக்கள்ளுண்பானும். ாஉஉ

ஞானமறியான்மூன்றுசந்தியறியானலதுசாமவேத
கானமறியானேழுமக்கனலுமறியான்மனுநூற்கல்விகேள்வி
மானமறியான்செபமுமந்திரசித்தியுமறியான்மவுனயோக
ஞானமறியானிவனேநாங்களறியாப்பதத்துநண்ணுவானே. ஈ௨௩

கோடுபொருமுலையார்கள்காமத்தாற்புலைபுரிந்தகொடியோன்றன்னை
வாடுபெருந்துயர்நீக்கிக்கயிலைதனிற்சிவகணத்தார்வரித்தாரன்றே
ராடுவதுதிருக்கூத்தாயதுதானேயலங்காரமாகுமாலல்
வீடுபெறுசுவர்க்கமென்றுநரகமென்றும்மங்களுடன்விகற்பிப்பானேன். ஈ௨௪

கைப்பொழுதுபாவமெலாமினிப்பொழுதுகடந்தானைக்காட்டும்போது
தப்பொழுக்கணாதார்தன்னிருவொலிற்பாவந்தருமமேது
பொய்ப்பொழுதுகழிப்பாலாயத்துநால்மெலிய திணிப்போதுமெந்தா
யெப்பொழுதுங்கயிலையினுமடியவர்க்கேபணிவிடைசெய்திருப்பேனென்றான்.

தக்கவேதியன்றவமுஞ்செய்தூர்மறையவன்பாதகமும்பூசை
புக்கமறைப்பாலகன்வாளுளழிவுமுப்புராரட்பொலிவுமாற்று
மிக்கதிருச்செயல்களினும்வித்முறையைநிலைநிறுத்தும்விளையாட்டாலே
மூக்கணுயசர்தருமன்முகநோக்கிக்கருணையுடன்மொழிவதானூர். ஈ௨௬

மூந்தக்கால்சிவதலத்துத்திரிகூடமான்மியங்கண்மொழியுநாளிற்.
சந்தக்காவெடுவேலிச்சண்பகக்காமகிமைசொன்னோந்தனிந்தக்காலே
மந்தக்கான்மகிமைசொல்லவைத்திருந்தோமினியதனைவழங்குவோம்யா
மந்தக்கான்மகிமையைநீயறிந்தக்காலவன்மகிமையறிவாயென்றும். ஈ௨௭

விளையாடுந்திரிகூடக்கடவுண்மால்வரைத்தோகைநிச்சரிநீதேன்கங்கை
யலையாடிப்பொங்குகடற்பாலாடிவடவருவியமிழ்தமாடித்
தலையாடிமடலவிழ்க்குஞ்சண்பகாடவிதவழ்ந்துசங்கக்கோயில்
விளையாடியெம்மருகில்விளையாடுந்தென்றலங்கால்விளையாட்டேயோ. ஈ௨௮

மலையாறுகடலலைந்துமண்டுபுடார்ச்சுனபுரத்துமாய்வோர்தீமை
மலையாமனுமிருந்துமறைப்பொருளைவலக்காதில்வழங்கும்போது
மலையாட்டிகவுரிகுழல்வாய்மொழிசெங்கையிலணைத்துமடிமேலேந்த
மலையாமல்விளைபாற்றிவீசுவதுதிரிகூடவசந்தக்காலே. ஈ௨௯

தீர்த்தமகிமையிலதிகர்திரிகூடவடவருவிதிருக்குற்றால
மார்த்தத்லங்களிலதிகமூவடிவாஞ்சியலிங்கமருளானந்த
மூர்த்திகளிலதிகமிவைசாலோகமுதன்மூன்றுமுறையேநல்குங்
கூர்த்துரைக்கிலிவைமூன்றுமடுத்தலத்திலுலவுதென்றல்கொடுக்குமாதோ. ஈ௩௰

மஞ்சதோய்முகடுமித்திரிகூடமலைச்சாரல்வசந்தனூதை
அஞ்சபோதையின்மேனிதைவரல்சால்வானெமூர்தனுறைக்காற்றிற்
பஞ்சபோன்மறையவன்செய்பாதகம்போய்ச்சிவதருமம்பலித்ததாலே
தஞ்சமாமுயர்கயிலைவரைமேவியெமதுபதஞ்சார்ந்தானன்றே. ஈ௩௧

ஆதலாலெமது புடார்ச்சுனபுரத்திலெழுந்தினைத்தேனுறபாயுங்
காதலாமைந்தினைநாற்றிசைமூன்றியோசனையுங்கலந்துவாழ்வோர்
சாதலாம்பொழுதிருபாலுமிரிடத்துமொருநாளுந்தருமவேந்தே
போதலாவறுதவிர்த்துத்தர்யாவருக்குமிதுபுகல்வாயென்றார். ௱௯௨

இன்னபடிகயிலைமலையெம்பிரானருளியவாரியமன்கேளா
முன்னமிதையறியாதுசெய்தமையைநினைந்திரங்கிமுகுந்தனுறும்
பன்னரியமறையாலுந்தெரிவரியபரமராசியத்தின்பான்மை
மன்னுபெருந்திரிகூடத்தென்றலங்கான்மகிமையெனமகிழ்ச்சிகூர்ந்து. ௱௯௩

பின்னலணிபிறைமவுலிச்சடையிறைவரீபரமப்பெம்மானெம்மான் [றித்
சொன்னபணிதலைமேற்கொண்டனனெகொண்டனமென்னவேதொழுதுபோற்
தன்னகர்க்குமம்பெருமான்விடைகொடுப்பப்புகடேறித்தருமனையோர்ந்து
தன்னகர்யாந்தாவிலத்துமகிமையயலவருக்குரைசெய்தானன். ௱௯௪

தருமமேதங்குபுடார்ச்சுனபுரத்துமூன்றியோசனையின்மேலும்
வருமமேமறந்துமின்றுதர்காளவனுறைவோர்வருவோர்யாருங்
கருமமேதயற்றுகினுந்தருமமேகுறிக்கொண்மெனக்கணக்கர்யார்க்கும்
பருமமேதியையுகைக்குந்நெறிச்செங்கோற்கடவுள்பகர்ந்தனமனனே. ௱௯௫

பாராதுமறையவனைசெய்மாதகர்தீர்த்தருள்புரிந்தபரிசிதென்று
வாராதவழிகாட்டுமந்தமாருதமகிமையைமுழங்கிச்சூதன்
தீராதசிவத்துரோகந்தீர்த்தமகிமைபுனைசெய்வாமெயென்று
மாராமைமுனிவரர்க்குத்தக்கன்மகம்புரிந்தன்முதலுறைவதானன். ௱௯௬

௰௨ - வது - மந்தமாருதச்சருக்கமுற்றிற்று.

ஆகத்திருவிருத்தம் - ௯௱௰௪.

---

## ௰௩-வது-தக்கன்வேள்விச்சருக்கம்.

அலர்க்கமலாறும்பொகுட்டிலயன்றலைநாளுலகமெலாமளிக்கவேண்டி
முலைத்தலத்தலறத்துறைவனமார்பினிடைப்பிருகுளத்தினைமுதுமரீசி
புலத்தியனத்திரிகிருதுவங்கிராச்சனபத்மேற்புலகன்றேன்ற
வலப்பதீத்திற்றக்கன்முதலாயதசப்பிரமகுமாரபினீன்றான். ௧

அன்னவராம்பதின்மர்களிற்பின்னவனுந்தக்கனெழுந்தயன்பாலெகிப்
பின்னமிலாதுயிர்க்குயிராய்நிற்பவனுமெற்குணனும்பெருந்தேயர்க்கு
முன்னவனுமிறுதியிலாமுதல்வனும்யாரெனக்கேட்பமுளரிமேலோ
னுன்னரியானுணர்த்தரியானிருவர்களுநதேடன்னறவொருவனென்றான். ௨

படைப்பதுவுங்காப்பதுவுமுன்னர்நீர்புரிந்திருப்பப்பரிவாற்பினைனர்த்
துடைப்பவனைமுதல்வனெனச்சொன்னவாறெனையெனத்தன்விருவ
வுடைபிரமமாமலனேயுலகொடுக்குநாளெமையுமொடுக்காநிற்பன்
விடைப்பரன்பின்னருளியன்றேயாமைகள்படைப்பதுங்காப்புமென்றான்வேதன். ௩

காரணனையுனைப்பூதவகையையுயிர்த்தொகையையெலாமான்குவேதம்
பூரணமாம்பிரமமெனப்புகல்வதெவனென்றுதக்கன்புகலவேதா
வாரணசம்பரமனுனையுண்மைமொழியவற்சேமற்றவர்கட்கெல்லாங்
காரணமாமுகமனுனைவேர்தனையுமீசனெனல்கடுக்குமென்றான். ௪

ஆங்கவனோர்செயலுடையன்வடிவுடையனுதலிலுலவனுக்கென்றும்
பாங்குபெறுந்தோற்றமீறெய்தாதோவெனுஞ்செய்க்குப்பதுமத்தண்ணல்
யாங்குமுளன்யாங்குமிலனருவுமிலனுருவுமிலனெம்மானம்மா
வோங்குலகின்பொருட்டாகச்செயல்புரியக்கருணைதிருவுருவாக்கொள்வன். ௫

உயிர்கள்புரிவினைக்கீடாயுருவகுக்கவேண்டிலனதருவமாவன்
செயிரறவெவினைப்பயன்களூட்டுதற்குமாலாவனசிதைப்பான்வேண்டி
னயில்பெறுமுத்தலைச்சூலததாணுவனையாவுமறைத்தருளும்பான்மை
பயின்மகேசனுமாவன்சதாசிவமாயருள்புரிவன்பரமமூர்த்தி. ௬

விள்ளாமையருவாகியருவுருவமாகியுருமேவாநிற்பன்
றள்ளாமையுருவகத்துமியாங்களிருவருமாகித்தானவேறுவ
னௌ்ளாருந்தயிலமும்பூமணமுமணிச்சோதியும்போலெங்குந்தானே
யுள்ளாகிப்புறமாகியகம்புறமுநீங்காதவொருவனுவன். ௭

மாதவனேபிரமமெனாம்யான்பிரமமெனாமதிமயங்காவண்ண
மீதெலாமெம்போல்வார்வெண்டலைமாலைகள்புனைந்தான்விமலமூர்த்தி
யீதெலாமுணர்ந்துணராமாலாகிமாலுடன்யானிகலுங்கால
நாதனெதிர்விலக்கியனலுருவாங்களடிமுடிதேடநின்றனே. ௮

மூவராகினர்தரியையென்னையரனறைக்கினையாமொழிவர்யாரும்
பாவராய்த்தாநதமையேகெடுப்பதன்றியெமக்குமவர்பகைவராவார்
சேவினனன்பொளரினைப்பவர்க்கேயாங்களருள்செய்யாநிற்பே
மேவராகிலும்யானையிறைவனெனவிறைஞ்சன்முக்கணிறைக்கேசாரும். ௯

கவ்வைதீர்ப்பலகோடிநதிகளுக்குஞ்சாகரமேகதியாம்போல
வெவ்வகையாகியசமயநெறிக்கெல்லாமிறைவன்முக்கணெம்மானன்றே
யவ்வகையாயிரமறைகளுரைத்தும்யானுணர்த்தியுநீயறியாயையா
கவ்வியணிகரத்தானைப்பாவியருள்பெறுகவென்றானளினத்தோனே. ௰

வேறு.

கதியின்மேற்பெருவிதிமொழிசிறுவிதிகருதா
முதியநாயகனரனெனிற்பணிந்துமான்முதலோர்க்
கதிகளூசெறும்வினையமுள்ளமைத்தருந்தவஞ்செய்
புதியதானம்யாதென்னதுமலரில்வாழ்புத்தேள். ௰௧

அந்தமானதன்னுணர்வருமேருவினணித்தா
நந்தமானதத்தடம்புனன்மூழ்கிஅம்பரனை
முந்தமானதவருச்சனைமுதற்றவமுயன்று
சொந்தமானதற்பரனடிசேரெனச்சொற்றுன். ௰௨

வேறு.

பூந்தவிசிலயனுரைத்தபோதுமானதத்த டத்துப்போர்துதக்க
ஞாந்தவமோராயிரம்யாண்டியற்றுதலுமுயர்விடைமேலாதிதோன்றிக்
கூர்ந்தபெருந்தவமுவந்தேமீக்குனக்குவேண்டும்வரங்கூறுயென்னப்
பார்ந்தளணிசெஞ்சடையார்பவள வாய்மலர்ந்தருளப்பணிந்துபோற்றி. ௰௩.

மேகபதமுதலாயவிசும்புலகு மால்பதமும்விரிஞ்சனூடு
நாகருலகமும்புவியுமெ ண்டிசையுமெனதாணைநடப்பநாளும்
பாகசாதனன்முதலாவுனைப்பணிவோர்யாவருமென்பணிகள்கேட்ப
மாகனசுற்றமும்வாழ்வு மக்களுஞ்செல்வமுமழியாவரமும்வேண்டும். ௰௪

சுர்தரியுன்னிடத் துறையுந்தோகையுமென்மகளாகத்தோன்றநீயோ
ரந்தணன்போல்வந்தருளிமண ம்புரியவேண்டுமிவையருளாயென்னப்
புந்தியுறவனைக்குதலும்புசன்றவரமனைத்துமருள் புரிந்துமேனுஞ்
சிந்தையுறநன்னெறிநீநிற்கிலிவைநிற்குமென்றான்றேவதேவன். ௰௫

வரமனைத்துமழவிடையாரருளியெழுந்தருளியபின் மதங்கூர்தக்கன்
பிரமனைத்தன்னிடத்தில்வரவுன்னுதலுமவனுணர்ந்துபெருஞ்சீர்முத்திப்
பரமனைக்கண்டிவ்வாறுபெற்றனன்யான் பணித்ததொன்றும்பயின்றுனல்லன்
றரமனைக்குளமுதாட்டிவளர்த்தாலுங்காளமன்றித்தருமோகாகம். ௰௬

சிற்றறிவற்கினிதுரைக்குநன்மொழிகண்மென்முளைபோற்சிதைவாமென்று
முற்றறிந்தநான்முகன்யோப்மைந்தனவையகத்திசைந்தமுகமன்கூற
மற்றவனைக்கம்பியன்போல்வளநகருமுறைபதயும்வகுப்பாயென்றான்
பெற்றவனைப்பரியவனைத்தெரியுமோசிறியவறகுப்பெருக்கம்வந்தால். ௰௭

தால்மிசையயனை வகுத்ததக்கமாபுரியிடத்துத்தக்கன்மேவி
மாலயனுமுறைபுரியவாசவனும்பணி கேட்பவானோர்போற்ற
நீலவிழியரமகளிர்கவரியிடவிலாமணிப்பூண்மகுடஞ்சூடி
மேலரியாசனத்திருந்தானவேந்தர்வேந்தாய்விதிக்குவிதியாய்மாதோ. ௰௮

வேறு

அரசுசெய்காலத்தன்னிலயன்மலர்ப்பதத்துத்தோன்றும்
விரைசெறிகுழலாள்வேதவல்லியைவிரும்பிவேட்டுத்
தரைதனிற்புதல்வரீராயிரவரையிருகாற்றந்தா
னுரைசெய்நாரதனுலன்றேரொழிவிலாமுத்திசேர்ந்தார். ௰௯

பாலரைமுத்திசேர்த்தபான்மையான்முனியைத்தக்க
னாலநீர்ப்புவனந்தோறுமுழன்றிடச்சபித்துப்பின்னர்
நீலவார்கூந்தலம்பானேரிழைக்கணத்தையீன்று
சால்புசேர்சுபுத்தியாதிபதின்மூவர்தருமற்கீய்ந்தான். ௨௰

அரிவையர்பதின்மர்தம்மிற்பிருதியங்கிரா வுக்காக
மரிசெம்பூதிவேட்பவற்கையைவிட்டன்மேவக்

இருதுவேகமையைவேட்பக்கியாதியைப்பிருகுமேவப்
பொருகனற்சுவாலைநண்ணப்பிரீதியைப்புலகன்வேட்ப, ௨௧

புத்திரைசனதிமாதைப்புலத்தியன்மணப்பவாய்மைத்
தத்தையாமனசூயைக்குத்தலைவனத்திரியேயாக
வித்தகக்கியாதிமைந்தன்விதாதாவேசுவதைக்காக
வத்திரிமகவான்சோமனசுபதிமுதலோர்க்காக. ௨௨

தார்முடிச்சுவதையீன்றவிருவரிற்றரணிதன்னை
மேருவேமணப்பவாட்கண்மேனையையிமவான்வேட்ப
வார்முலைத்தரணியீன்றமேலையைவருணன்வேட்டா
னாரமுதனையாரீன்றமக்களுமனேகர்மாதோ. ௨௩

வேறு.

இங்கிவரிற்காசிபனையீன்றனன்மரீசிபுலத்தியன்சீர்மைந்தர்
பொங்கிராக்கதர்கவிகள்கின்னரர்கிம்புருடர்முதற்புலகனீன்றோ
ரங்கிராச்சனபதிகள்கந்திருவர்வசுக்கடமையளித்தாராங்கே
வெங்கவியைத்திருவையவுணரைப்பயந்தான்பிருகுவெனவிளம்புமேலோன். ௨௪

அன்னவரிற்காசிபன்பின்றக்கனருள்பதின்மூவரணங்கார்தம்மை
முன்னர்வேட்டனனவரிலதிதியாதித்தர்தமைமுறையினீன்றாள்
பின்னிரணியனிரணியாக்கனையுந்திதிபயந்தாஃபிரகலாதன்
பொன்னவன்சேயவன்மகன்விரோசனன்மாவலியவன்சேய்புதல்வன்வாணன்.

காலகேயரைப்பயந்தாள்காலையாயுவுமசுரர்கணத்தையீன்றாண்
மேலையோர்நால்வரொடுகலுழனையுமருணனையும்வினதையீன்றா
ளாலவிழியரம்பைமுதற்பன்னிருவர்தமைப்பயந்தாளரிட்டைமூவாக்
கோலராகுவைப்பயந்தாள்சிங்கியைகத்துருநாகக்குலத்தையீன்றாள். ௨௬

சம்பரனேமுதலாயபன்னிருவர்தானவரைத்தனுவுமீன்றாள்
கொம்பினிலங்கிளைகபிலையிருவருமேகந்திருவக்குலத்தையீன்றார்
வெம்பரிதியிந்திரியம்பாரிமூக்கினில்விடுப்பவிரண்டுகோடி
யும்பர்மருத்துவர்பிறந்தார்பிறந்தனசராசரங்களுலப்பில்கோடி. ௨௭

எண்கிளையாவாண்மகப்பெற்றெனப்பெற்றாயிரத்தினிரட்டியோரும்
விண்கிளையாவீடுபெற்றார்மீட்டுமகளிரைப்பயந்தவியப்பாலோங்கி
யொண்கிளையாய்மலைகடலும்பாதலமும்பூதலமுமுயர்வானும்
பெண்கிளையாற்சிறுவிதிக்குப்பெருங்கிளையானதுதவத்திற்பெரிதொன்றுண்டோ.

வேறு.

அத்தனைவாழ்வுமீசனருளெனவுணரான்றன்பாற்
பித்தெனவகந்தையேறிச்சிறுவிதிபெருமால்பூண்டா
னெத்தனைகற்றோனுமிருவகைச்செருக்காலயார்க்கும்
லைத்தகாயதுமோமுக்கண்மருந்தையுட்கொள்வார்க்கன்றி. ௨௯

மகக்குழாத்திருபானேழ்பெண்மக்களைமணஞ்செய்சோமன்
முகத்தெழிலாரல்பாலுமுலையெழிலுரோணிபாலு
முகப்பினாலேயையோரையொருவினைதனைக்கேளாத்
தகைப்பெருமதியைத்தேயவிதிமகன்சாபஞ்செய்தான் ௧௦

புதியவானமுதமீய்ந்துபுலவரைவளர்ப்பான்மேனி
திதிதொறுந்தேய்வதானுன் சிறுவிதிசாபந்திரா
னதிபொதிபவளவேணிநாதனாடியாரன்றி
விதிதனைமதியினாலேவெல்லவும்வல்லாருண்டோ. ௧௧

பான்மதிதேய்ந்துமேனிபழுதுபட்டுழன்றுவானோர்
கோனவைகுறுகிக்கூறக்கொழுங்கனல்கரியாவேட்ட
தேனனுக்கோரஞ்செய்தசிறுமையாற்பெருநோய்பூண்டாய்
மேனெறித்தக்கன்சாபம்விலக்குதற்கெளிதோநம்மால். ௧௨

முதிரைமோதகவிளாவின்முதுகயமுகத்தெம்மான்முன்
னதிகவீறுணைத்துநீசனுயிரையுந்தச்சாபஞ்
சதுமுகனவனைவேண்டச்சதுர்த்தியிலைமைத்துநீந்தா
ல்விதுவுமங்கவனூற்றீர்தியென்னலுமவன்பாற்சென்றான். ௧௩

வியன்மதியுலகினுன்கும்விண்ணிடைநான்கும்வீய
வயிரவாட்படையான்முன்னர்வளர்கலைநான்குந்தேய
வயன்முனர்க்கலைமூன்றேகமவன்வழிவிடுப்பவேகி
யுயர்பிரான்கயிலைவெற்பிலொருகலையொடும்போய்வீழ்ந்தான். ௧௪

மறைகளின்முதல்வாவோலம்வானவராவிகாத்த
கறைகெழுமிடற்றாயோலங்கண்ணுதற்பெருமானோல
மிறைவனேயோலமோலமென்னலுமிரங்கிநாதன்
பிறையையோர்கரத்தால்வாங்கிப்பிறழ்சடைமுடிமேற்கொண்டான். ௧௫

அருகுறைமதிமேற்சாபமயனின்றுபணிவினாவ
முருகுலவுபிலிற்றுங்கொன்றைமோலியான்முடித்ததிங்கட்
கொருகுறையிலதாய்த்தன்பாலுற்றதால்வளர்வுமங்கோய்
வருமுறையதனாற்றேய்வுமதிதொறுமதிக்குவைத்தான். ௧௬

இன்னவையுணர்ந்துதக்கன்யான்புரிசாபந்தீர்ப்பான்
பின்னல்வேணியனேயென்னப்பிதற்றலும்புலகனேக்கிச்
சன்னிதியடைந்தோற்காத்தன்சாபமுந்திறவினின்சீர்ப்
பொன்னனூர்வாழ்வுங்காத்தான்புரையதோவென்னத்தீர்ந்தான். ௧௭

சாதனைத்தவமும்வீறுந்தக்கனூர்மிக்கவாழ்வு
மாதராராறுபானமூவராகியமக்கட்பேறு
மோதுதல்புரிந்தானிப்பாலுயர்புகழ்ச்சதியையீன்று
காதலனுக்கேய்ந்தவாறும்வேள்விசெய்கையப்புஞ்சொல்வாம். ௧௮

இரசதகிரிமீதிலிறைவர்பாலெம்பிராட்டி
யரசுவீற்றிருக்குமெல்லையடிதொழுதகிலமெல்லாம்
வரதனிநடத்தும்பான்மைவகுத்தெனக்குணர்த்தாயென்றான்
௦ முரகரிக்கரியநாதன்முறுவல்கூர்ந்தருளிச்செய்வான். ௩௯

சகளநிட்களமேயாகிச்சகலமுமொடுக்கந்தோற்ற
நிகழ்தரப்புரிவோமென்றுநிகழ்த்தலுநிமலமேனி
யகளமாமுனக்கேதென்றாளருளுருவாவதென்றான்
புகலுநின்னருள்யானெல்லாமெனதென்றாள்புவனமீன்றாள். ௪௰

அகிலமாமுணர்வைநாதனம்பிகையுளாயான்மாற்ற
நிகிலமுமயங்கிப்பானுநிலாவொளிதிறம்பியேனைச் ,
சகமுளோர்சடமாய்வீழ்ந்தார்சதுமுகத்தயன்மாலானான்
முகில்வண்ணன்பிரமமானான்மூவுலகிருளாயிற்றால், ௪௧

யாவுமேமருளாய்க்கன்மயிகநதுமாசுறலாலஞ்சிப்
பூவையென்மடமையாவும்பொறுத்தியென்றடியில்வீழ்நதா
டேவிமெய்த்துளக்கநீங்கத்திருவுளமிரங்கியண்ண
லாவியாய்நிறைந்துநின்றானகிலமுமெழுநதவன்றே. ௪௨

உணர்ச்சிமீண்டிறைவனல்கவுலகுயிர்த்தெழுநதம்மா
கணத்தினிலுகம்பல்கோடிகழிதலாற்கன்மமாறாப்
புணர்ப்புறுதலமேற்குற்றம்போக்கெனக்கவுரிபோற்றத்
தனைப்பிறாற்பிறவியெய்தித்தவஞ்செய்துதவிர்ப்பாயென்றான் ௪௩

வள்ளலைப்பிரிந்துதேவிவலம்புரியெனக்காளிந்தி
வெள்ளமேன்மிதந்துபூமேல்விரதமுற்றுழன்றுதக்கன்
பிள்ளையாயூழிகாலம்பெருந்தவமுயன்றும்பாவந்
தள்ளுதற்கரியதானாற்சகத்துளோர்க்கெளிதோவம்மா. ௪௪

மணந்தனன்மறையோனாகமழுவலான்மாதைவேட்டுத்
தணந்தனன்மறைந்தானன்றேதக்கனுங்கதமேற்கொண்டா
னணங்குபின்வருந்திநோற்பவார்வமுற்றெய்திநாதன்
கணநதொழவிடைமேற்கொண்டுகயிலைமால்வரைமேற்போந்தான். ௪௫

தந்தைதாயுணராவண்ணந்தன்மகட்கொடுசென்றானென
றெந்தையார்தமையெண்ணுமனிகழ்வதுதொடுத்தான்றக்கன்
சிந்தையாலவரருள்ளிச்சிறுவிதிக்கிதனாற்றீமை
வந்திடுமெக்குமேதம்வருமெனவெருவிச்சூழ்ந்து. ௪௬

ஆதியார்வரத்தாற்பெற்றவரசிறைவன்பால்யாமும்
போதராதிருந்துகூடாதாதலாற்புனல்சேர்வேணி
நாதர்பாலிவளையுய்ப்பநவையறுமென்றுதேறி
மாதுநின்மருகற்காண்பான்வருகெனவவனுஞ்சென்றான் ௪௭

௦ முரகரி—விஷ்ணு.

கவளமால்வரையைக்காத்தோன்கமலத்தோன்குலிசத்தாலே
துவளமால்வரைகளீர்ந்தோன்சுரர்களுந்திரளாய்வெள்ளித்
தவளமால்வரையைநோக்கித்தக்கனோடெழுந்துமுக்கட்
பவளமால்வரையைக்காண்பான் பரிவினால்விரவிப்போந்தார். ௪௮

போந்தனர்வானோர்வெள்ளிப்பொருப்பிறைசெம்பொற்கோயில்
சார்ந்தனர்வாயில்பூதர்தடுத்தனர்விழியுந்தாளுஞ்
சேர்ந்தனனகங்காரத்தாற்சிறுவிதியின்றன்செல்வி
காந்தனைப்பணிவாரெல்லாங்கடைதடையின்றிச்சென்றார். ௪௯

எரிமணியிமைக்குங்கோயிலிமைப்பிலாவிமையோர்புக்கு
வரிவிழிமடந்தையோர்பாலுருவிவீற்றிருந்தான்றன்னை
யரியயனணுகித்தாழ்ந்துபணிந்தனருகாந்தவாரி
கிரிசனெம்பெருமான்வெள்ளிக்கிரிமுனர்த்தாழ்தலேய்ப்ப. ௫௰

சொல்லினாலரிக்குமோலித்துளக்கினால்விதிக்குமூரல்
வில்லினாற்குலிசத்தாற்குவிழியினாலமரர்க்கின்ப
நல்கினான்சமையந்தோறுநண்ணியகடவுளாகி
யல்கலிலுயிர்கட்கெல்லாமளவினுக்களவாய்நிற்பான். ௫௧

காப்பதுகடனாக்கொண்டகண்ணனையினிதுநோக்கி
மாப்புவனங்கள்யாவும்வளவிதேயென்றனன்றேன்
பூப்பவன்றனக்கும்யாவும்புரக்குமென்றனக்குமேத
நீப்பவனுனைநீயாகநிறைவலாற்குறைவேதென்றான். ௫௨

கரியுரியாடைபோர்த்தகண்ணுதற்கருணைமூர்த்தி
யரிபிரமாதியோரையவரவரதிகாரத்துப்
புரிவனபுரிந்துவாழ்மின்போதுமினென்றுவாக்கால்
விரிதருகுதிப்பானேக்கால்விடைகொடுத்தருளப்போந்தார். ௫௩

படையினர்வணங்குநேமிப்படையினனாதியானோர்
விடையினர்சரணம்போற்றிவிடையினைமீளுங்காறுங்
கடையினர்முகனுங்கோயிற்கடையினிலமர்ந்தான்றக்கன்
புடையினர்பரவக்கொங்கைப்புடைப்பினர்கவரியேந்த. ௫௪

திருமலைக்கோயில்வாயில்செறிந்தசாரதரைநோக்கி
மருகனைமகளைக்காண்பான்வருமெனைத்தடுத்தென்னேவ
லரிதனையயனைவானிலமரரைவிடுத்தீர்நீரென்
பெருகடித்தொழும்பராயும்பேதமேபுரிந்தீரென்றான். ௫௫

வனைத்துதியாகிற்சேதிவள்ளல்பாலென்றார்பூத
ரனைக்கினையவனுக்கேய்ந்தவடியர்போல்வணங்கேனென்னைக்
கனைக்கணீர்தடுத்தவாற்றுற்காண்மினுங்கடவுள்பூசை
தனைத்திடவுலகம்யாவுந்தடுப்பனென்றுரைத்துப்போனான். ௫௬

அன்றுதொட்டனைமாலையமரர்காவலனைமேருக்
குன்றுதொட்டவன்பொற்கோயில்குறுகுதிர்பணிதிராகின்
மன்றுதொட்டரசும்வாழ்வுமாற்றுவனெனனுமன்னோர்
நன்றுநின்பணியேநிற்போநம்பிநீமுனியேலென்றார். ௫௭

பூமனுங்கண்ணன்றானும்பூமனும்புனிதத்தெய்வக்
காமனும்போயபின்னர்க்காமனுநெறிநீர்தக்கன்
சோமனைமுடித்துத்தோலைச்சோமனென்றுமிந்தானென்னை
மாமனென்றுணரான்றேனமாமனென்றிருந்தானென்று. ௫௮

தீர்த்தனைப்பாவுகாணாத்தீர்த்தனைன்றீராக்குற்றம்
போர்த்தனன்பிரமன்யாகம்புகுந்தனைபரமபாக
நீத்தனனந்திசாபநிறுவிடவேள்விகருண்டா
ஆர்த்தனகர்தைசெல்வத்தரவினைத்தார்ப்பதோரான். ௫௯

திருநந்திசாபமஞ்சிச்செய்கலர்யாரும்வேள்வி
தருமமாந்தனையைநீக்கித்தவித்தனவுலகமெல்லாம்
வெருவுபேரவையைநோக்கிவேள்வியானபுரவேனென்று
னெரிபெருஞ்சாபத்தீமுன்னைதிரும்வைத்தூறுபோல்வான். ௬௰

தெருண்டவானவரைகூவிச்செப்புவானகயிலையாற்கு
மருண்டபுண்காடுநாடுமலர்க்கையிலெடுப்பதோடு
சுருண்டபூங்குழலார்வீடுதொழும்பலிக்குழல்வான்கண்ட
மிருண்டதுவயிறுற்றுமலெழுகடல்விடமுண்டன்றே. ௬௧

விதியெனுமௌனதுதாதைவித்தியிலாற்கிரந்தியென்பாற்
சதியெனுமகளைடன்றுன்றனக்கருளென்றவாற்றற்
பதியெனவவனுக்கீய்ந்தேதன்பாக்கியமவளாற்பெற்றான்
மதியினுமந்தியானென்னைமாதுலனெனவுமோரான். ௬௨

தாயிலான்றமருமில்லான்றந்தையுமில்லான்காடு
கோயிலானூருமில்லான்குலமில்லான்குடியுமில்லான்
தீயிலாடரங்கமாகத்திக்கெலாமுடைதொட்டாடும்
பேயிலாதிருந்தாலுண்டோபேரிலான்றனக்கோர்சுற்றம். ௬௩

கொற்றவனல்லன்வேணிக்கோலத்தாற்குருவிலாதான்
கற்றவனல்லன்மாதர்கற்பினையழித்தலாலே
நற்றவனல்லனீமகட்டிருலொழுக்கமில்லான்
மற்றவன்றனையேஞ்நந்தவனைக்குதர்காணோர்நீவிர்- ௬௪

பொன்மையாரிருவர்க்காகமற்றனபுதல்விமாரை
யன்மையாயலைத்தான்றனையலைத்தனன்சாபத்தீயான்
மென்மைசேர்மகத்தியொன்றுவேட்டினிச்சதியைவேட்டான்
வன்மையும்பணியுந்தேவர்மடைமையுந்தவிர்ப்பேனென்றான். ௬௫

என்றனனிருந்தார்தம்மவெழுந்தனனமரமாகர்
பொன்றுணைக்கவரியேந்தப்புள்ளிடைதட்பப்போகிச்
சென்றனன்கன்னையோர்பாற்றிசைமுகனுதிதேவர்
மன்றனன்மகளிரோடும்வருகெனவிடுத்தானோலை. ௬௬

கனகலவனத்துத்தெய்வக்கம்பியனிறைஞ்சிப்புக்குப்
புனைமணிவாயின்ஞாயில்பொன்னெடுஞ்சிகரமன்றஞ்
சினகரமணங்கார்கோட்டமுனிவராச்சிரமநெற்றி
யனமடஞ்சாலைசோலையறப்புறம்வேதியாதி. ௬௭

ஏறுயோசனையோரைந்தூற்றிரட்டியின்யாகசாலை
நூறுயோசனைவிசாலநுவலரும்வேள்விக்குண்டங்
கூறுயோசனையான்மேருக்குன்றமுமலையாநிறப
வீறுசேர்கடவுண்மங்கலன்னவர்வியப்பச்செய்தான். ௬௮

வேறு.

இந்தமகச்சாலையுழித்தக்கனோலைவழியெழுந்துபோந்தார்
கந்திருவர்கின்னரர்தானவரியக்கர்கிம்புருடர்கருடர்போக
ர்ந்தரசாரியரமரர்வித்தியாதரபூதாரக்கர்மாநதர்
மூந்துதாராகணத்தர்பாதளர்வேதாளர்முனிவோர்சித்தர், ௬௯

பன்னிருவராதவர்கள்பதினொருவருருத்திரர்மேற்பதின்மர்தேவர்
மன்னுவமணிமவுலிமனுவேந்தவொண்டிசையின்மகுடவேந்தர்
நன்னதிகளோரேழுபொழுதாறுதருக்களைந்துநான்குவேத
முன்னருலகொருமூன்றுமிருமருங்குநிறைந்தனராண்முகூர்த்தமொன்றில். ௭௰

பொன்னுலகிலரம்பையர்கள்பொருப்பிலுறையரமகளிர்புயங்கநாட்டுக்
கன்னியர்களியக்ககுலப்பூவையர்விஞ்சையமகளிர்கருபவேந்தர்
பன்னியர்கள்கந்திருவப்பாவையர்களும்மகளிர்படியமாத
ரின்னகைமேனகையரம்பையுருப்பசிதிலோத்தமைமேலிந்திராணி. ௭௧

வேறு.

வந்துகுழுமினர்மகவான்முதலோராகவானவர்குழாத்துடன்மால்வாரிமீதி, லுந்தி
பூத்தவனிடம்போய்த்தக்கன்வேண்டியுயர்மாநீகாததருளென் றுரைப்பமாமான்
மூந்தவெழுந்தொருகருடத்துரங்கமேறிமுளரிமலர்த்திருவிணைடும்வந்தான்பூமே,
லந்தணனேர்புறத்தணைந்தானதனைக்காணு வறுபத்துநாற்கலையோடொருமான்வந்
தாள். ௭௨

வேறு.

புக்காட்செல்வம்போதும்புகலுண்டோபுகலாமுன்னர்த்
தக்கனார்வேள்விச்சாலைதன்னிலெவ்வுலகத்தோருந்
தொக்கனர்புவனவேந்தர்தொகையிலீசானனல்லார்
மக்களிற்சதியேயல்லார்மருகரிற்பரமனல்லார். ௭௩

மவுனரிற்பராசரால்சிர்வசிட்டனத்திரிததீசி
சவனுயர்கும்பயோனிதுருவாசன்பிருகுத்துங்க
னிவர்களெம்மானையன்றியெய்திலரிருந்தார்மற்றைத்
தவமுயன்முனிவர்யாருஞ்சார்ந்தனர்யாகசாலை. எச

பதுமாசனுக்குமேலைப்பண்ணவர்தமக்குஞ்செய்யு
முதன்மையாஞ்சிறப்புச்செய்துமுறைமுறைவரிசையாவும்
புதல்வியர்மருகர்க்காற்றிப்பொருவருநெடுங்கூடத்து
மதகயம்புகுந்தாலென்னமகப்பெருஞ்சாலைபுக்கான். எ௫

ஆகவனீயங்காருகபத்தியந்தென்பாலங்கி
மாகனற்கொழுந்துவீசவடவரைத்தறிவாளெங்கப்
பாகமாங்காமதேனுப்பரந்தவிசொரியாநிற்ப
யாகமார்பொருள்கள்யாவுமீய்ந்திடப்பாரிசாதம். எ௬

திரவியங்குன்றுகுன்றாத்தேவர்கள்குவிப்பவாளோர்
புரவலன்பணிப்பயோனைப்புங்கவர்திசைகள்காப்ப
விரதமார்வருக்கமெல்லாமிந்துவேகொடுப்பவேலை
மருகரோடதிதியாதிமக்கள்கைக்கருமமாற்ற. எஎ

இருபுறத்தமரமாதர்கோடிகமேந்திச்சூழத்
திருநுதலிந்திராணிசெயும்பணிக்குறைகடீர்ப்பக்
கருணையாலுலகமெல்லாங்காப்பவன்வேள்விகாப்பப்
பொருவரும்யாகத்தெய்வம்பொலிவுறநடிப்பமாதோ. எஅ

தருமனேகுரவனுகச்சதுமுகப்பிரமனீன்ற
பிரமரிலொருவன்மேவிப்பிரமதானத்தில்வைகக்
கருநிறக்கலைத்தோல்போர்த்துக்கைத்தலம்வெண்ணைபூசித்
திருமகப்பொலிவுபூண்டுசிறுவிதியிருந்தான்மன்னோ. எகூ

மடுத்துச்சொல்லுலையாவாணிமறையுரைப்பவளாம்யாவு
மெடுத்துக்கைநீட்டுவாளாமெழிற்பெருந்திருவாஞ்செல்வி
விடுத்துக்கைம்மறுப்பாருண்டோதக்கனூர்வேள்விச்செல்வங்
கொடுக்கக்கைசடைப்பாரில்லைக்கொள்ளக்கைசடைப்பாரின்றி. அய

இன்னவைநிகழுமெல்லையீசனெம்பெருமானன்றிப்
பன்னருமகத்தின்சாலைபடருவான்மடைமைநோக்கிச்
செந்நெறிவிளைப்பாலுன்னிச்சென்றனர்முனிக்குழாத்துத்
துன்னுசீர்ச்சவனுத்துங்கன்றுருவாசன்றதீசிமாதோ. அக

சிறுவிதிமுகத்தைநோக்கிச்செப்புவான்றதீசியார்க்கு
முறுதியேயமங்கள்செய்தலுயர்பலவறத்தின்மேன்மை
பெறுகதிமகமேமிக்காம்பிறங்குசீர்மகத்திலுன்போன்
மறுவறுமுயற்சிவல்லார்வழங்குழுவுலகிற்காணோம். அஉ

நிச்சமார்தருவும்வானோர்நிருபனுமேவல்கேட்பப்
பச்சைமால்வேள்விகாப்பப்பண்ணவர்விண்ணோரோத்த
விச்சையாமகஞ்செய்கின்றாய்விதிம்கண்விதிநீசெய்யு
மெச்சமென்பதற்கோரெச்சமீசனில்லாததென்றான்- ௮௩

தேசமர்முனிவன்கூறச்சிறுவிதியொருவர்க்கிங்கே
யீசர்பன்னொருவருள்ளாரென்றனனிவரோநேர்யா
ரோசைவிந்துவுமாமூலவுருத்திரர்க்கென்றான்யோகி
யாசறுமனத்தன்மீட்டுமுருத்திரரவரோவென்றான் ௮௪

உமையொருபாகர்க்கோதுமுருத்திரநாமஞ்சொல்வார்
தமதுருப்பெற்றோராங்கிசம்புவின்கணத்தோர்க்கெல்லாஞ்
சுமையுறுதாதுவைந்தும்பொன்னெனிற்சுவணமாமோ
வமரரோபுலவரொன்றாலாடினோர்பாடினோரும். ௮௫

கடைநடுமுதலிலாமுக்கண்ணனேகடவுளென்று
சடைமுடித்தலைவன்கூறச்சாற்றுவான்முனிந்துதக்க
னிடையினிற்சடையின்மாதரிருவர்வைத்தவனேயோகி
விடையினைப்புரியாவேறிவீதிபோமவனேவீசன். ௮௬

நஞ்சினையமுதுண்பானோநாணிலாநக்கன்றானோ
குஞ்சிதப்பவுரியாடுங்கூத்தனோதீர்த்தனாவான்
வெஞ்சினப்பன்றிக்கோட்டுமீன்விழியாமையோடு
கஞ்சுகிபிறவும்பூணுங்கருத்தனோகருத்தனாவான். ௮௭

கழிதலைமாலையானோகையிலோடேந்துவானோ
கழிபுலிகரித்தோலாடைசுற்றிவெண்ணீறுபூசி
யழிதருமயானந்தன்னிலலகையோடாடுவானோ
விழியில்வேற்றுருவுகாட்டும்விகிர்தனோவிமலனென்றான். ௮௮

முறையிலான்முனிந்துகூறமுனிவிலான்மொழிவான்மூல
மறையெலாங்கற்றுங்கல்லாமனத்தராய்மதத்தாலுன்போ
லிறைவனையெண்ணாராகியிருந்தவம்புரிந்தார்மன்னோ
கறைசெழுமனத்தர்தாருகாவனமுனிவர்முன்னாள். ௮௯

ஈங்கிவர்தவத்தைமாய்ப்பமாயனையேவியெம்மான்
றீங்கனிமொழியார்க்கெல்லாந்திகம்பரனாகிச்சென்றா
னாங்கவர்மருங்குநெஞ்சுமாசையேயுடையராகி
நீங்கருந்தவமுங்கற்புநிறைகளுந்தோற்றாரன்றே. ௯௰

அவ்வவராபிசாரமுயன்மிதித்தாடிவேங்கை
வெளவுரியுடுத்துநாகமிலைந்துகூர்மழுவுந்தீயு
நவ்வியுந்துடியுமேந்திநகுதலைமுடித்துப்பூதம்
வெவ்வடர்படையாகத்தன்விரதர்வீறடக்கியாண்டான். ௯௧

உலகமீன் றருளப்பெண் பாலுகந்தனன் மலர்ந்தநாட்டந்
திலகவாணுதலாள் போத்தச்செங்கைவேர்வெழுந்தவாரி
புலமெலாமழித்தல் கண்டுபுவனமூன் றுருவுய்த் தான்
புலநதிப்பரப்பி லொன்றேபகிரதற்கேந்துகங்கை. கஉ

வீறுநீருகாந்தம்பொங்கியெரிதெறவெளியாங்கால
மீறிலாவுமையிஞலீசனிவ்வெளிமயானத்தந்த
நீறணிந்தாடல்செய்வானின்மலையொருத்திகாண
வூறிலாத்தருமஞ்சேவாயுகந்தொறுமொருதாடேக்கும். கங

மீனமாய்மறையைமீட்டுக்கமடமாய்வெற்பைத்தாங்கி
வானவர்க்கமுதமீய்ந்துமகிதலம்விழாமற்கோட்டா
லேனமாயெடுத்துமாமாலெய்துமாலடக்கிமைந்தர்
ஞானநாயகன்பாலுய்த்தார்நாட்டமுமோடுங்காடும். கச

கயமெனுமவுணக்குன் றமுயிர்க்கடல்கலக்குங்காலம்
வியமுறுதுலகமுய்யவென் றுதோலுரித்துப்போர்த்தா
னயன்மதஞ்சிரத்தானீக்கியதுபலிக்கலமாச்சூலம்
வயிரவற்கீய்ந்துவிட்டான்மாலாதிசுரர்மான்மாற்ற. கரு

வாசவன்மதமோர்காலமாற்றவேற்றுருவாயெங்கோன்
பூசல்வெங்கதத்திலுய்த்தசலந்தரன்புவனமூன் றிற்
கேசவன் முதலோர்சாயக்கிளர்சமர்விளைத்தான்வெற்பி
லீசனந்தனன்போலுய்த்தநேமியாலிருகூறுஞன். கசு

வீய்ந்தவனுருவிற்புக்குவிறலரிவிருந்தையென்னுங்
காந்தையைப்புணர்காற்சோரங்கண்டவள்சபித்துத்தீயின்
மாய்ந்தனண்மயானத்தூடுமெயங்கலுமுமையோர்வித்தாற்
பூர்துழாயருளவன்றேபுனைந்துமாலொழித்தான்மாலும். கஎ

அகிலகாரணமாவாடலாடலுக்கிசைந்தகோலஞ்
சகலமுமங்கங்காகத்தரிக்குவன்விடுப்பனல்லாற்
புகலருமுருப்பேர்செய்கைபூண்படையுடையூண்மற்று
நிகிலநாயகனுக்குண்டோநிகழ்ந்ததுநிகழ்த்துஞாலம். கஅ

சரமனைத்தசரமெல்லாந்தந்தையாய்த்தாயாய்த்தந்த
பரமனைப்பணிந்தேநீயும்பண்ணவர்க்கரசாயுந்தை
பிரமனைப்பிறவாயாண்டாய்பிஞ்ஞகர்க்கவியும்பெய்து
கிரமனைச்செல்வமெய்தித்திறம்பெறவாழ்தியென்றான். ககூ

ஆங்கவன்பொருட்டாலென்றும்முதின் றிவிடமுண்டாற்குப்
பாங்கிலுற்பலியேற்றுண்ணப்பரிகலங்கொடுத்தானெந்தை
நீங்கலாவருமைநீக்கிநேரிழைசதியையானே
யோங்குசீர்மணத்தாலீய்ந்தேனுயர்மனைவாழ்வுபெற்றான். ௰

துன்னரும்புலித்தோன்மாற்றித்துகில்சுற்றிமகுடஞ்சூட்டி
மன்னுபொன்னணிகள்பூட்டிமணவாளக்கோலஞ்செய்த
வென்னையோரணுவாவெண்ணாவிகழ்ந்தனனதனாலீசன்
றன்னையுமருகாவெண்ணேன்சதியையுமகளாவெண்ணேன். ௯௧

பற்றிலனெனவேதக்கன்பகர்தலுமுனிவனோக்கி
யுற்றுநீபுரியும்வேள்விக்குறுபயனளிப்பார்யாவர்
பெற்றமாமறைகள்யாவைப்பிரமமென்றுரைக்கும்பேதாய்
வெற்றிகொண்டெழூஉமாசேனைவேலனைத்தனையின்றியென்றான். ௯௨

முனிவனீதுரைப்பத்தக்கன்முயற்சியேபயனைநல்கு
மெனவுரைவிப்பப்பின்னுமின்றயிலிச்சடமாமூக்க
நனிபயன்றருமோவென்னநற்றவன்மறுப்பமற்று
முனநுலாகேட்பார்க்கஞ்சேருவுரைப்பதென்றருத்துச்சொன்னான். ௯௩

அவனதுபகர்தலோடுமடன்முனிச்சியஞ்சீறிச்
சிவனருளின்றிச்செய்கைசீவகோடிகளுக்குண்டோ
விவனையெண்ணாதநீயுமியலுமட்டியற்றும்பூபங்
கவனவெங்களத்திலாவிகழியுமட்டாம்பூபம். ௯௪

விதுவணிசடையானன்றிவேள்விநீயியற்றுஞ்செய்கை
மதுமலர்குழலிற்சூட்டிவனமுலையாரம்பூட்டிக்
கதிர்மணிக்கலாபஞ்சாத்திக்கன்னிகையொருத்திதன்னைப்
புதுமணக்கொழுநனின்றிப்புரிமணக்கோலம்போலும். ௯௫

கண்ணனென்பவனுமெங்கள்கடவுள்பாற்சத்திமற்றை
விண்ணவர்பசுக்களன்றேவியன்பசுபதியைநீக்கிப்
பண்ணமைபசுப்படுத்துப்பயனுநீயெய்துவாயேற்
பெண்ணொருபெண்ணைக்கூடிமகவினைப்பெறலுமாமே. ௯௬

வசுக்களேயாதிவானோர்காசிபன்மற்றோராய
முசுக்கள்போன்முனிவராலுமுடிவதொன்றிலையாற்கவ்வை
யுசுக்கள்போலரிப்பக்கூடியுயிரரித்திருந்தீரும்மைப்
பசுக்கள்போற்படுப்பன்வந்துபசுபதியவனேயின்னம். ௯௭

உகம்பலகடந்தமுக்கணொருவனைமழுவலானை
யகந்தையாலிகந்தநீயுமழிகநின்யாகசாலை
புகுந்தவர்சிதைகவேள்வியொன்றுகவென்றுசாற்றித்
திகந்தமும்புகழும்யோகிமுனிக்குழாத்தெழுந்துசென்றான். ௯௮

ஆங்கவர்போயபின்னரமரரோடிருந்ததக்கன்
வீங்குதீவேள்விசெய்தான்மேல்வருக்கருமமோரான்
யாங்குமேநிறைந்தமுக்கணிறைவனையறிவித்தன்றித்
தீங்குநன்கெய்தும்பான்மைதேவர்க்குந்தெரியொணாதால். ௯௯

இருநிலப்பரப்பும்வானுமேவல்கேட்டிறைஞ்சத்தக்கன்
பிருகுசெய்மகத்தின்கோப்புந்திங்கள்காசிபனேயாதி
மருகர்தஞ்செருக்குமன்னோர்மனைவியர்களிப்பும்வானோர்
பெருமையுங்கண்டுவெள்ளிப்பிறங்கல்யாழ்முனிவன்சேர்ந்தான். ௱௰

திருமலைக்கோயில்வாயிற்றிருக்கடைபலவுநீங்கி
மருமலர்த்திருவோலக்கமண்டபங்கடந்துபோகி
யருளினுற்கண்டான் ○ சிற்குருதகிலமுமாடுங்கையாற்
கருணைநம்பரமனோர்பாற்கவறெறிந்திடுவானை. ௱௰௧

சடைமுடிதாளிற்சூட்டித்தாழ்ந்துவீழ்ந்திறைஞ்சிமுக்க
ணுடையநாயகனைப்போற்றியுலகெலாமீன்றதாயைப்
புடையுறவணங்கிவாழ்த்திப்போந்துவாய்புதைத்துத்தக்கன்
விடையமரர்வேள்விமாரக்கம்விளைவின்விண்ணப்பஞ்செய்தான். ௱௰௨

கேட்டனள்கவுறுஞ்சூதுங்கிடத்தினளிறைமுன்றுதை
யீட்டியமகத்தினோர்வத்தெழுந்தனள்பணிந்துவீழ்ந்தாள்
வேட்டகத்தெவர்க்குமெய்தாவியன்சிறப்பெய்தினும்
பேட்டனநடையினார்க்குப்பிறந்தகத்தாசைபோமோ. ௱௰௩

அன்னைதாள்பணிந்துகேட்பவையர்தாமுறுவல்பூத்து
நின்னையுமழையாளெம்மைநினைவிலுநினையான்சென்று
துன்னையேமதியான்போதலொழியெனமறுத்துந்தாயர்
தன்னையர்க்கண்டுமீள்வேனென்றுபொற்சரணில்வீழ்ந்தாள். ௱௰௪

வல்லியங்கொம்புவேண்டவரதன்மேற்கருமமோர்ந்து
சொல்லியவண்ணநேர்ந்தான்றூயபொன்விமானமேறிப்
பல்லியங்கொம்புபம்பப்பனிமொழியணங்கார்சூழச்
செல்லியற்கணங்களார்ப்பச்சிறுவிதிசாலைசார்ந்தாள். ௱௰௫

தநிலக்குண்டங்கண்டுசமிதையாமுரந்துஉய்ச்சாலி
முதிரைவித்தெறிந்துநெய்யாமுதுபுனல்சொரிந்துநாளுந்
த்தொடுகோளுஞ்சுழத்தீவினைப்பயிர்செய்வான்முன்
புதியநல்வினைபோற்சென்றுபுகுந்தனள்புவனமீன்றாள். ௱௰௬

வன்சுதைதீற்றுஞ்சாலைவாஞ்சையின்வருகின்றாளைத்
தன்சுதையெனவும்பாரான்றகவிலன்வருகன்றூட்டாப்
புன் ✠ சுதையனையனுகிப்புறக்கணித்தகலாநின்றான்
மெனசுதைதனைக்கண்டாலம்விலங்குதல்வழக்கேயன்றே. ௱௰௭

தீயவனிருந்தமார்க்கநிருவுளந்தனிலெண்ணுமை
யுயகிநட்ந்தாளுள்ளேநடத்தலுமவன்சாறுது
தயருந்துணைவிமாருந்தழுவினர்மகிழ்ச்சிகூர்ந்தா
ரயிலழைபாசவர்க்கமகத்திலுமகலுமேயோ. ௱௰௮

○ சிற்குரு ஞானவிளையாட்டு. ✠ சுதை பால்கொட்டாப்பசு.

பயந்தனள்சிறப்புச்செய்யப்பயந்தனள்பதகனுலே
வியந்துடன்பிறந்தார்யாரும்விருப்பினர்வெறுப்பார்போன்று
ரயர்ந்தனளகன்றுள்செல்வியனைங்கணார்குழாத்தைநீக்கிப்
புயங்கலையுரிவைபோர்த்தான்புரிமகமுன்னர்ப்போந்தாள். ௧௧௯

கண்ணினைமலருளாளைக்கற்பகவனத்துளாளை
விண்ணவர்பிறைவூனில்வெண்மதிக்கடவுளாதி
யெண்ணருமருக்கர்தம்மையாகத்தில்வரித்தாய்முக்க
ணண்ணலெம்பரனையெந்தாயயர்த்தனைபோலுமென்றான். ௧௨௰

அலைகடலமுதப்பாயலண்ணலுமமுதமுண்ணும்
புலவரும்புலவர்கோனும்புலவருக்கமுதநல்கும்
கலைநிலாவொளிருந்திங்கட்கடவுளும்வளர்பொற்சாலை
நலமிலாவிடத்தையுண்டானன்னுதற்குரித்தோவென்றான். ௧௨௧

ஆரணன்வெருவியோடவமரர்களோடவோடா
நாரணன்வெளியமேனிகரியதாய்நடுங்கியேங்கிப்
பூரணமுறையோவென்னப்புகறலும்விடத்தையெங்கோன்
பாரணஞ்செயலாலன்றேபருகினாரமுதமென்றான். ௧௨௨

மன்றிடைநிருத்தஞ்செய்துமனைதொறும்பலியேற்றுண்டு
குன்றுறைகுலமிலானைக்கூட்டலன்வேள்விக்கெனறு
னுன்றனிமகளையன்னாற்குதவினைகுலமென்சொல்வா
யென்றனளதற்குனீவிரிருவருந்தவிர்கவென்றான். ௧௨௩

அங்கணாயகனைமுக்கணிலநாயகனைமூர்க்கன்
பங்கமாயிகழ்தலாலேதநகைமேற்பழையகாதன்
மங்கைநாயகியாண்முற்றுமறந்தனண்மடவார்க்கெல்லாந்
தங்கணாயகனேயன்றித்தந்தைதாய்தமர்வேறுண்டோ. ௧௨௪

மந்திரமறைகள்பாய்மாமகத்திலெண்டிசைகளாக்கு
மிந்திரன்முதலோர் ० அசரிமையவர்முனிவோர்தொண்டர்
சந்திரன்கதிரோனங்கிதம்பிரான்விழிதேர்பூமி
யந்தரமுனைத்துமேனியவனலாதுலகமுண்டோ. ௧௨௫

சீர்மகமுனக்கேதீண்டிச்செயுமிடமேதுநீதான்
யார்மகன்றந்தைதாயர்யாவரொன்றுணராய்போலும்
போர்மழவிடையார்க்கன்புபுரிந்தமெய்த்தவத்தாலன்றோ
தார்மகபதியேயாதிதலைவர்க்குந்தலைமைபூண்டாய். ௧௨௬

நெறியுளார்செல்வம்பெற்றுனெறியின்றுநீடியாழ்வா
ரறிவிலார்செல்வம்பெற்றுலளவிலாவகைதைப்பேயும்

---

० அசிர்—படைஞர். உடைதருபவர்ஸனிதுமாம்

பிறிதுகண்டெரியாநோயும்பிடித்திடுமவையைமாற்ற
வறுமையேதண்டமென்னுமிரண்டுமோமருந்துமாதோ. ௧௨௭

சிட்டனைப்பரிக்குந்தேவதேவனையிகழ்தலாலே
துட்டநிக்கிரகஞ்செய்யத்தோன்றலார்தோன்றுகிற்ப
ரிட்டமாமுனிவர்சொல்லுமெம்மனோர்மொழியுமேனாய்
மட்டறுசெல்வமந்தோமதத்திலைழிகின்றயால். ௧௨௮

யாவர்தாண்மழுவலாளையிகழ்வரோவுடலேயர்தப்
பாவலாயடுதல்வேண்டும்படாதெனிற்பழிமேல்வைத்து
வீவந்தவேண்டுமாவிவீய்த்திடார்வரல்லூர்விட்டுப்
போவதேவேண்டும்வேண்டார்பொருந்துவர்சிவத்துரோகம். ௧௨௯

என்றனள்கவுரிமானத்திவர்ந்தனளணங்கார்சூழச்
சென்றனள்கயிலைவாழ்வைத்தெண்டனிட்டிறைஞ்சியோர்பான்
மன்றலங்குழல்பின்சோரமனத்தொருவேகந்தூண்ட
நின்றனள்கமலம்வேர்ப்பநீலங்கள்சிவப்பநாணி. ௧௩௰

அணங்கெழுந்தருளும்பான்மையறிதலாலமரிலேற்ற
கணங்களைத்துரந்திட்டன்றேனன்கனன்மகத்தாபிசாரத்
தணங்கெழுதறுகட்பூதமொருத்தரும்பிறவுநோக்கி
மணங்கெழுகொண்டையார்முன்சென்றனன்மகநியாமோன. ௧௩௧

வேறு

மமதையான்மதியழிக்குந்தக்கன்மாமகளா
முமையலையெண்ணலனுதருளெண்ணலனுமையோ
டமையவேகுவின்கணங்களையடர்ந்தனனமலா
விமையவர்க்கவிசொரிந்துனையிகழ்ந்தனனென்றான். ௧௩௨

முனிவன்வாசகந்திருச்செவிபுகுதலுமுதல்வன்
புனிதவாயிதழ்துடித்ததுநெறித்ததுபுருவ
நனிகொள்வாணுதல்வேர்ந்ததுசிவந்தனநயன
மனிலமங்கியுமொடுங்கினநடுங்கினவகிலம். ௧௩௩

மாரனிங்கிலைவிழிக்கடைசிவந்திடவறிதா
மூரல்வந்திடமுப்புரங்களுமிலைமுழுதும்
வேரம்வந்திடக்கடையுகமிலையெனவிமலன்
பாரவெங்கதமடக்கியோர்குறிப்பொடும்பார்த்தான். ௧௩௪

௰௩-வது—தக்கன்வேள்விச்சருக்கமுற்றிற்று.

ஆகத்-திருவிருத்தம்—எாச௰அ.

## ௰௪-வது-தக்கன்வேள்வியழிந்தசருக்கம்.

பார்த்ததிக்கினிற்கொடுமுடியாயிரம்பரப்பிச்
சேர்த்ததிண்புயவரையிரண்டாயிரந்துளக்கிப்
பேர்த்ததாள்களிலண்டமுமகண்டமும்பெயரப்
போர்த்தெழுந்தனன்வீரரில்வீரரில்வீரன். ௧

அண்டகோளகைமுகடுறநெடுமுடியணர்தருஞ்
சண்டபானுவோர்வடிவெடுத்தனவொளிதழைப்பக்
கண்டகங்கதிரொறிப்பவோர்கனகமால்வரைமேன்
முண்டகங்களாயிரமுகிழ்த்தெனக்கரமுகிழ்த்து. ௨

காற்றுமொன்றுதியொன்றலைவிரண்டிலைகடப்பக்
கூற்றமென்பதுமொன்றலைவிரண்டிலைகுழைப்பத்
தோற்றயன்சிரங்கலாலைத்தலைதுமிப்ப
வேற்றெழுந்திசையெட்டலார்பிறிதிலையிருப்ப. ௩

குழைபுறக்கடலொன்றலைவிரண்டிலைகுடிப்ப
வழைசெய்மேருவுமொன்றலைவிரண்டிலைவளைப்ப
வுழைசெயண்டமேற்பித்திகையிரண்டிலையுடைப்பப்
பரசுபாணியாயழைத்ததென்பணிக்கெனப்பணிந்தான். ௪

பொன்பருப்பதமண்டமெண்டிசைகள்யாம்புரிந்த
மென்பரப்பெலாமழிப்பதுகுறித்திடேல்வீர
வுன்பகத்திலாச்சிறுவிதிப்பருமகமழித்து
வன்சிரத்தையுங்கொணர்ந்திவண்வருகென்றுரைத்தான். ௫

என்னலும்பணிந்தேகினன்விறைவிபாற்றெழுதி
யனலைபுத்திரகாளிபல்கணத்தொடும்மேனகதா
டன்னிடைப்பலகோடியர்வீரரைத்தந்தான்
பின்னர்முன்னருமருங்கினுநெருங்குறப்பெயர்ந்தான். ௬

ஆனைதந்தமீப்போர்வையுமடற்புலிசொடுத்த
தானையும்பெருந்தானையங்கடற்புவிதாங்கு
மேனமாமருப்பணியுடனெறிகடற்கிடைய
போனமாமறைமீட்டசேற்கண்களும்பொலிய. ௭

உரவுமார்பிடைச்சிங்கவேற்றுரிவையுத்தரிகம்
விரவுமாசுணக்கங்கணம்விரிபணாமணிகள்
கரதலத்தொழுங்கதிர்தரக்கலைமதிக்கணம்போற்
பிரமர்மால்சிரமாலைகள்புயத்தொழும்பிறங்க. ௮

ஆயிரம்பணாநெடுமுடியுடையகச்சசைய
வாயிரங்குபொற்கழலொலியுருமொலிமடுப்பச்
சேயிருந்திருமுகந்தொறுஞ்செறிநுதல்விழியாற்
காயகங்கையும்புறக்கடல்களுங்குடர்சலங்க. ௯

வடிநெடுங்குடைகொடிகள்வானகதிரொளிமறைப்ப
விடைநெடுங்கொடிநிலவுமேலிருளெலாம்விழுங்க
வடிபெயர்ந்திடும்விசைதொறுந்திசைதொறுமதிர்த்
தொடிநெடும்பணித்தாமதிமண்டலந்தரப்ப. ௰

அடல்செய்திண்புயமெண்டிசாமுகவெளியடைப்ப
வுடையபொன்முடியண்டகோளகைமுகடுடைப்பப்
படைகள்கண்டகர்மனந்தொறுங்கொடுங்கனல்பரப்பத்
தொடையன்மார்பமுந்தடித்ததோள்களும்வலந்துடிப்ப. ௰௧

கண்களிற்பொறியூழிவெங்கனலையுங்கனற்ற
விண்களிப்புறவுடுக்கள்போன்மலர்த்தொடையிடைய
மண்களிற்பிலமதிர்தரவரும்பெருஞ்சேனை
யெண்குலப்பெருங்கிரிகளைவிலைசகனாடுலடுப்ப. ௰௨

கன்னிகாவுயர்கயிலையின்றிழிந்தொருகோடி
தன்னுழூதமொவ்வொன்றுபோண்டமுஞ்சமப்ப
வுன்னிவாங்கியவுயர்மணிக்கொடிஞ்சியதேர்மே
லென்னையாள்பவனேறினனுலகமீட்டற. ௰௩

வேறு.

கப்பணம்பிண்டிபாலங்கணிச்சிமுட்கரங்கோடாரி
வைப்பெருஞ்சரிகைதோட்டிவச்சிரம்வெதிரைந்தண்டந்
துப்புடைமுசலங்கைவாள்சூலமேற்கிரியாதி
வெப்புடைப்படைகார்காலமின்னெனப்பரந்துமின்ன. ௰௪

முருடுசல்லரிகள்பேரிமுரசுமத்தளிதடாரி
காடிகைதுடியிலைமொந்தைசைமணிபடகம்பம்பை
திரடருபணவந்தக்கைதிண்டிமநவுரிகாளம்
வருடகாலத்துத்தோனறுமாமுகிலொலிபோலார்ப்ப. ௰௫

வேறு.

நந்திபல்கணத்திரளொடுநெறிபுறங்காப்ப
வந்துசண்டனும்வலத்துறவிடத்துறமணிமான்
முந்துபல்கணநாதரும்பூதருமுரணிச்
சிந்துரக்குழாந்திரிந்தெனச்சாரிகைதிரிய. ௰௬

புலிமுகத்தனகலைமுகத்தனவயப்புலிமா
ளுலிமுகத்தனகொய்யுளையுத்தரிமுகத்த
கலைமுகத்தனகரடியின்முகத்தனகணங்கண்
மலைமுகத்தினுமதிகடன்முகத்தினும்வாவ. ௰௭

அடித்தலங்களிலலைகடல்கலக்குவனந்தன்
முடித்தலங்களுமுளுக்கரின்றுவெமுகிலோ
டிடிக்குலங்களைப்பிசைவனமிசைவனவிமையோர்
கெடிக்கலங்குறக்கணமண்டலங்களைக்கிழிப்ப. ௰௮

மேற்றிசைக்கரியிட்டிசைக்களிற்றின்மேல்விடுப்ப
காற்றினைக்கொசெழுத்துவகைலைவாய்மடுப்ப

போற்றுபாரிடஞ்சூழ்தரத்தேர்மிசைப்போந்தான்
கூற்றினுக்குமோர்கூற்றெனும்வீரகோளரியே. ௧௯

காளிவஞ்சனிகாடுகாள் கடற்படைகளுலக்
கூளிசிந்துவெங்குறள்புலிப்பறமெனக்குழும
வாளிசென்றெனச்சென்றனரடற்கணநாதர்
தூளிசென்றதுசிறுவிதிமகக்குழிதூர்ப்ப. ௨௰

மலையதிர்ந்தனமாதிரமதிர்ந்தனவான
நிலையதிர்ந்தனவீரர்களதிர்தலுநெடுநீ
ரலையதிர்ந்தனமகஞ்செயுமயன்மகன்குடுமித்
தலையதிர்ந்திடவதிர்ந்தனவானவர்தகுதி. ௨௧

காலைவாலுடைத்தெரிந்தனகதிர்தலைநோக்கிக்
கோலஞாளிகள்குரைத்தனநரிக்குழாங்குழுமிச்
சாலவூடவிகவர்ந்தனதக்கனுதியர்க்கு
மேலவேமனமடித்தனதுடித்தனவிடமே. ௨௨

தக்கனுணவன்றன்மகக்கடிந்ததாண்புரிவான்
மிக்கனுவதுகாண்டுமென்றயனின்றவிரிஞ்சன்
மூக்கனுயகன்சேனைகண்டுளம்வெரீஇமுதுவான்
புக்குரோமினியுய்ந்தனமெனப்புறம்போனன் ௨௩

தொலைகத்தடங்கடல்வீரன்மாப்படைவருந்துழனித்
திகைக்குமாலுமாலாகினன்முனிவருஞ்சடைத்தார்
திகைக்குமன்னரோயாகினர்தேவர்கோன்முதலோ
ரகைத்துமாமகமயரும்வானவர்களுமயர்ந்தார். ௨௪

ஞாலமேழையுமீன்றநாயகியையுமிகழ்ந்து
மாலயற்குயர்தேவையுமறந்துளான்மகஞ்செய்
சாலைபுக்கதேயவலமென்றமாருஞ்சலித்தார்
மேலினிச்செயல்யாதெனமுனிவரும்வெருண்டார். ௨௫

ஆதிநாயகன்புதல்வனைமுன்னிடாதமிர்த
மோதுவாரியிற்கடைந்துமுன்பட்டபாடுணர்வோ
மாதுபாகனையிகழ்ந்தயன்மகத்திடைமதிபோய்ப்
போதன்மேயினம்புரிந்தனம்பிழையெனப்புகல்வார். ௨௬

தன்றுதிக்கெலாந்துந்துமியதிர்தலுந்துளங்கிக்
குன்றடர்த்தவன்முதலினோர்மாலொடுங்குழுமி
யின்றினிச்செயல்யாதெனவெருவுவார்க்கெதிரே
சென்றுதாக்கினபாரிடப்பெரும்படைத்திரள்கள். ௨௭

ஓலமிட்டெழுகூளிகளும்பர்மேலுதிரக்
கோலமிட்டெனக்கிழித்தனவாய்வழிகுருதி

தாலவிட்டனவானவர்மகளிர்சாதரித்து
சாலவிட்டனபுரந்தராதியர்சபைநாப்பண். உ௮

வனமுருத்தெழுகுறட்படைமகப்பெருஞ்சாலை
யனல்கொளுந்தினயாகமேற்கொழுங்கனலவித்த
கனகநற்சுவரிடித்தனவுடைத்தனகடங்கள்
இனைமலர்த்தருப்பிடும்பினநடுங்கின திசையே. உ௯

சாலையிற்கனல்சொளுத்துசாரதர்தமைநெருக்கி
யாலையிற்படுகரும்பெனவலைத்தனரமரர்
பாலையிற்பெருங்கிழத்திசென்றமரர்தம்படைமேல்
வேலையிற்கலங்கலக்கிடுஞ்சுறவெனமிடைந்தாள். ௩௰

மிடைந்தமுத்தலைப்படையினாலதிர்த்துவாள்விதிர்த்துத்
தடிந்துசெனனியுமூளையுந்தகர்படத்திதியைக்
கடைந்தமத்தெனத்தண்டினாலலைத்தனள்காளி
யுடைந்துவிண்ணவரோடினர்தரிபடாதலைந்து. ௩௧

அமரர்தாங்கியகொடிப்படைநெரிதலுமழன்று
நமனுமங்கியுநிருதியும்வருணனுநலங்கூர்
தமனியப்பெருந்தலைவனும்பாகசாதனனுந்
திமிலமுற்றெழுபவனனுமெதிர்ந்தனர்செருவில். ௩௨

வலமழுப்படைநந்திதேவனுமணிமானுங்
குலவுபல்படைச்சண்டனுஞ்சாரதர்குழுவுங்
கலகவிற்கொடுவாள்கொடுங்கதைகொடுகலந்தார்
புலவுமைக்கடன்மேல்வடவனற்றிரள்புகல்போல். ௩௩

இந்திரன்பொரநந்திபல்கணைத்தொடுமெதிர்ந்தான்
முந்துசெங்கதிர்தழன்முதன்மூவர்மேற்சண்டன்
வந்தெதிர்ந்தனனெறழ்வலித்தடம்புயமணிமா
னுந்துமாமதிவருணனுதியருட்றூடன்றான். ௩௪

பம்மையார்த்தனபடலிகையார்த்தனபணைபோர்க்
கொம்புதாரைகள்குழறினபிளிறினவேழ
மம்புவார்சிலைமுட்கரமெறிமழுவடல்வாள்
சம்பமாதியபடைகொடுதாக்கினர்சமர்மேல். ௩௫

தாள்களைப்பெருஞ்சிரங்களைக்கரங்களைத்தடிந்து
தோள்களைச்சிறுபுறங்களையுரங்களைத்துமித்து
வாள்களிற்பொருசாரதப்படைகளைமடுத்துக்
கோள்களைப்பொருகோளெனவானவர்கொதித்தார். ௩௬

சித்தரைப்பெருந்தேவரையியக்கர்கிஞ்சையரை
மொய்த்தகின்னரர்கருடர்கிம்புருடர்காருணிக்

கைத்தலத்தினாற்புடைத்துவெங்காலினாலுதைத்துத்
தத்தவானிடத்தெறிந்தனர்பாரிடத்தலைவர். ௩௭

கருநிறத்தெழுகாரெனக்கார்முகந்தாங்கி
யுருமெனச்சிறுநாணொலித்திசைதொறுமொலிப்பத்
தருமழைப்பெருந்தாரைபோலமரர்மேலனசரந்தூஉய்
வருசணப்படைதுரந்தெதிர்ந்திமேனமலைந்தான, ௩௮

ஞானறுபத்தொன்றாமுயிரமெனப்பொலிந்தலவாத்
நூனறுபதந்துரமாயிரம்வாசவன்றுரப்ப
நின்றுநாந்திகன்கணிச்சியாலடுத்துநீறாய்ப்
பொனறிவிட்டன விளக்கில் வீழ்பதங்கமேபோல. ௩௯

நிலைநிலாபபொருகணையெலாமய்யனரிமு
வரையெனப்பெருங்கதைகொடுமலைந்தனனமாசவான்
புரைதவிர்ப்பவனமழுவினாற்போயது பொடியாய்த்
தரைதனிற்சினந்தெறிந்தமட்கலமெனத்தகர்ந்து. ௪௰

குலிசம்வாசவன்பிடித்தனனிடித்தெதிர்முழு
மொழியிறுற்பெருஞ்சாரதர்மலைந்தனருலைந்தார்
வலியமையேயலிமிலிலென்னவள்ளன்மேல்விடுத்தான்
கலைகளார்தவெனவாரத்தனர்வானவர்கணமே. ௪௧

எரிபரப்பியெண்டிசைகளும்புகைத்துருமேறும்
சரிபடப்படர்புரந்தரன்வச்சிரக்கதிர்வாள்
விரிசடைப்பெருநந்திதன்கணிச்சியினமிடலா
லெரிகனற்கிடுஞ்சமிதைபோலடலையானதுவே. ௪௨

காயும்வச்சிரப்பொருபடைசெரிதலுங்கனனரு
ளுயிரநதடங்கண்ணாயிரனுடறபெருங்கரியைப்
பாயவிட்டெதிர்படர்தலுங்களிறதைவால்பறறிச்
சீயமொத்தவன்றிசைதொறுங்கறங்கெனத்திரித்தான். ௪௩

கறையடிப்பெருங்களிறுவெருண்டுசுழற்றலுங்கலங்கிப்
பறவையின்குயிலுருக்கொடுவாசவனபறந்தான
மறைபுகாதுவிண்மறைதலுமழுவினன்மலையைச்
சிறையரிந்தவன்சிறையையுமரிந்தனன்செய்யோன். ௪௪

இயமனங்கியைநிருதியைப்பரிதியையிகலி
யயமனங்கியேழ்கரங்களிற்சிலகரமரிந்து
வயமனங்கிபல்லுதிர்த்துவானவரைவான்மடுத்துச்
சயமனங்கிப்பார்த்தாடினனெழில்வலிச்சண்டன். ௪௫

வருணன்வாயுவைத்தனதவிர்ந்துவைப்பொருமணிமான்
றருணவேந்தலாச்சேனையைத்தானையைத்தடிந்து

கருணைவாழ்கெனவிருந்துணும்பருந்தொடுகாக
மருணமண்டலமறைத்திடும்பர்தரிலார்த்தான். ௪௬

அடித்துமார்பிடையுதைத்துமேற்கதுப்பிடையறைந்து
பிடித்துமெற்றியுந்துகைத்துமேற்பற்றியுமீர்த்துங்
கடித்தும்விஞ்சையர்விண்ணவர் தானையங்கடலைக்
குடித்துமைப்புயற்குழாமெனத்திரிந்தனகூளி. ௪௭

ஆழுமெண்டிசைக்காவலர்தொலைதலுந்தொலையாப்
பூழிமொய்த்தெழச்சாலையுட்சாரதர்புகுந்தா
ரூழியண்டங்களுடைப்பபோலவிக்கடமுடைத்தா
ராழிமால்பெருவேள்விகாப்பவனெதிரடர்கதான். ௪௮

தக்கனெங்குளான்சாலையெங்குளதவள்சாலை
புக்கவானவரெங்குளார்போதுமின்புகுமின்
சிக்கயார்த்திவட்கொணர்மினென்றமரிடைச்சினவி
முக்கணாயகனருளாலுஞ்சாரதர்மொழிவார். ௪௯

வெற்றியானைவிட்டோடினனிந்திரன்மேதிச்
சிற்றியானைவிட்டேகினனந்தகன்றேவர்
மற்றியாவருமிரிந்தனர்வேள்விகாவலன்போ
லெற்றுபோர்செயப்புகுந்தனன்முகுந்தனேயென்றார். ௫௰

எந்தையார்பதம்பணிந்துகண்ணிடந்துசாத்தியதும்
வந்தையாவருள்புரிகெனத்திகிரிவாங்கியது
முந்தையார்திருவருளினாலொலிபெற்றதுவுஞ்
சிந்தையாலுறமறந்தனனேகொலாந்திருமால். ௫௧

யாங்குளானவன்யாங்குளானெனப்புகாவெதிர்ந்து
தாங்குநின்னுழைத்தக்கனைத்தருதியோசமர்மே
லூங்குநின்றெதிர்பொருதியோவென்னலுமுருத்து
வாங்குவெஞ்சமர்க்கெழுந்தனன்கலுழன்மேன்மாயன். ௫௨

ஒறுத்துமால்சிறுநாணொலியுருமெனவொலிப்ப
மறுத்துவில்லிடுமுகிலெனச்சரமழைவரதன்
குறித்ததேரின்மேற்காளிமேற்கூளிமேற்குறண்மேற்
பொறுத்தநந்திமேற்சண்டன்மேற்கணங்கண்மேறபொழிந்தான். ௫௩

மாதவன்கணைகணங்கண்மேற்சொரிதலும்வரதன்
மோதுதானவர்தயித்தியர்சேனைபோன்முகுந்தா
பூதர்மாப்படையெளிதெனநினையலைபொருபோர்
பேதுறுவெனில்வருகெனவொருசிலைபிடித்தான். ௫௪

வேறு.

பிடித்தனனமலன்சூாபம்பிறந்தனபகழிக்கூற்றங்
குடித்தனசெறுனராவிதுவித்தனகுணபக்குன்றக்

துடித்தனவுடல்கள்சோரிசொரிந்தனகணங்கள்பாட
நடித்தனகவந்தபந்துநடுங்கின திசைகளெங்கும். ௫௫

சேனையைதகமிக்குஞ்சில்லித்தேர்களைச்சிதைக்குந்தேவர்
தானையைத்துலைக்குந்தானைத்தலைவரைத்துணிக்குந்தாவி
யானையையுருட்டும்வாசியடர்த்தெழுமமலன்பாணம்
வானமுங்கடலுந்திக்கும்வரைகளும்வரையாதேகும். ௫௬

கரங்களைக்கடிந்துநீண்டகால்களைத்தடிந்துதம்வீர
ருரங்களைப்பிளந்துந்தாவியுயிர்களைக்குடித்துமோதிச்
சிரங்களைத்துணித்துமூளைதெறிபடத்தகர்த்தும்வானோ
ரரங்களைப்புகுந்துருறையாடினவரதன்வாளி. ௫௭

நீடினவிசுடர்சேனைநெரிபடவுரங்கள்கீறி
யோடினவுலகந்தோறுமுலவினவொருவன்வாளி
வீடினவுலகங்கீண்டுமெய்ந்நிணம்பருகியாவி
தேடினதிசைகடோறுந்திரிவனபொருவுமாதோ. ௫௮

அமரராயுடலுண்டார்களலகையாயுடலுண்பாராய்ச்
சமருளார்படைகண்மாய்ந்துதம்பிரான்படையாய்ச்சூழக்
குமரியாணலகைக்கூட்டங்கூளிகள்குரவையாடப்பத்
திமிலையார்களத்திற்காகப்பந்தரிற்சேர்வேட்டன்றே. ௫௯

வேறு.

நொடிக்குளண்டமுமகண்டமும்வெடிபடநொதில்போர்
முடிக்குமாயினுமுடிவிலான்விடுகொடுஞ்சரங்க
ளிடித்தெழுந்துலகெவையினுமெண்ணலராவி
குடித்துமீள்வனபரவுவார்க்கின்னருள்சொடுத்து. ௬௰

வெய்யவோர்பசுவித்மகன்விதியுற்றுன்விரவார்
கையுமெய்களும்யூபமாக்களமமர்க்களமா
நெய்படுவேல்வாய்நெருப்புமிழ்ந்தவியுணவிரப்பி
யையன்மாப்படைவனந்தமாம்பசுப்படுத்தன்றே. ௬௧

ஏறுவெஞ்சமரிமையவர்தொலைதலுமெதிர்போர்
வீறுவெஞ்சிலைமாதவன்வளைத்துவெங்கணைக
ளாறுநூறொருதொடைதொடுத்தனனதையமல
னாறுநூறெனநூறினொருகணைநுதியால். ௬௨

ஆயிரம்படைகாந்தமால்விடுத்தலுமனகன்
பாயிரும்படைகாந்தநேரொருகணைபணித்தான்
மாயவன்பதினாயிரங்கணையிருண்மலைந்தான்
றூயவன்கணையாயிரங்கதிரொளித்தரந்தான். ௬௩

மாரியிற்சரமாரிபெய்தனன்மழைவண்ணன்
மூரிவிற்சரஞ்சுறையின்விடுத்தவைமுருக்கிப்
பாரிடத்தவன்முராரிதேர்ப்பரியினைப்படுத்துத்
தேரிடத்தவன்பாரிடத்தவனெனச்செய்தான். ௬௪

சேமத்தேர்மிசைக்குதித்தனனெதிர்த்தனன்றிருமால்
வாமத்தானையின்வலம்படுகணைகளான்மலைந்தான்
சோமத்தாரவன்சரமொருதொடையினூற்றுளவத்
தாமத்தான்விடுகணையொடுசிலையையுந்தடிந்தான். ௬௫

புதையவெஞ்சரஞ்சிலையொடுதுலைதலும்புழுங்கி
யிதையமண்டுறத்தண்டமொன்றெடுத்தரியினமே
லுதையமால்வரைக்குலந்திமால்வரையெனவுய்த்தான்
கதையினூற்கதையிலையெனக்கடிந்தனன்கடவுள். ௬௬

குல்லைமாலினித்திகிரியேபடையெனக்குறியா
வெல்லையண்டமும்புவனமூடுச்சுறவெடுத்து
வல்லையேவினித்தாங்கெனவலியினால்விடுத்தா
னெல்லைவானவரார்த்தனர்சாரதருலைந்தார். ௬௭

நேமியம்படைநேமிமால்விடுத்தலுநெரிந்து
பூமியந்தரநெருப்பெழக்கொதித்தெழும்போதின்
மீமிசைத்தவுந்தாரமொன்றிசைத்தனன்விமலன்
காமியந்தனைப்பக்குவன்மடுப்பதுகடுப்ப. ௬௮

அலைகள்வற்றுறக்குடித்துமூவுலகமுமதிர்த்து
மலைகளைப்பொடித்தெதிர்வருந்திகிரிமாப்படையை
மிலைதரப்புயப்பொருப்பின்மேலேற்றனன்வீரன்
றலைவர்போற்றலைமாலையிற்கடைமலரிதயங்க. ௬௯

சண்டநேமிபோய்வாள்கொடுகுலைகடற்சயனன்
கொண்டன்மின்னொடுவருதல்போல்வருதலுங்குழுறி
யண்டமெண்டிசைவெடிபடவார்த்தனனையன்
விண்டுவாய்வெரீஇயுருமொலிக்கரவெனவீழ்ந்தான். ௭௰

வீழ்ந்தவன்றனைத்தடிந்திலனருளினால்விடுத்தா
னாழ்ந்ததன்கடலரண்புகுந்தொளித்தனனவனுஞ்
சூழ்ந்ததிண்குரலிடித்தலுந்துடித்துவீழ்ந்தனனே
போழ்ந்திடும்படைதொடுத்திடலாற்றுமோபுவனம். ௭௧

சண்டனுந்திருநந்தியுந்தனிமணிமாறு
மண்டுமேதிமேற்சண்டனைத்தனதனைமடுத்துக்
கண்டகால்களும்வருணனைநிருதியைக்கடைநாட்
கொண்டவாமெனவாய்வழிகறைபுகக்குமைத்தார். ௭௨

ஒருவனைச்சிவபரமனைக்கருதலாவுதைய
னொருவனைத்தனிவிழிகுடைந்தனர்மதியுருவா
மொருவனைத்தலைநிலத்தொடுதேய்த்தனருகைக்கு
மொருவனைக்கரங்களைந்தனர்நாவையுமொறுத்தார். ௭௩

குடர்சரிந்தனர்தாள்குறைந்தனர்கரங்குறைந்தார்
முடிசிதைந்தனர்விண்ணவர்விஞ்சையர்முதலோர்
படிகளந்தனிற்கிடந்தனருடல்பதைபதைத்தா
ருடையநாதனையிகழ்ந்தவர்யாவரேயுய்வார். ௭௪

கணையுங்குந்தமுஞ்சுரிகையுங்கயலினங்கடுப்ப
வினையில்குஞ்சரமிடங்கர்மாவெனவெடுத்தேகித்
திணைநெடுங்களக்குருதியாறுயர்பிணத்திரளா
மணைகடந்துதேர்க்கலிங்குமுன்சுழிந்துபாய்ந்ததுவே. ௭௫

அண்டர்சேனைகடுலைதலுமமர்க்களமகன்று
மண்டுசாரதரிருபுடைவலம்புரிமுழக்க
விண்டவேள்வியஞ்சாலையிற்புகுந்தனன்விமலன்
கண்டபல்வகைக்கணங்கண்மேற்புகுந்தனகணங்கள். ௭௬

தூண்கள்பற்றியபசுக்களைவிடுத்தனர்றூரப்பா
ருண்கள்பற்றியவமரரைமுனிவரையறுப்பார்
சென்குடைத்தவிமுனிவர்தஞ்சிரங்கண்மேலுடைப்பார்
வீண்குவைப்படுதிரவியங்கடல்புகவீழ்ப்பார். ௭௭

தீர்த்தனெம்பிரான்றனையிகழ்வேள்வியைத்தேவர்
பார்த்தகண்களைப்பறிப்பனகேட்டவர்செவியைய
யேர்த்தகைகளையவிருகர்நாவினையீர்த்துக்
கூர்த்தவாளினுலரிந்தனதிரிந்தனகூளி. ௭௮

வாணியின்றிணாதுண்டமுஞ்சசிவனமுலையுஞ்
சேணரம்பையரதிதிமற்றவர்குயிற்சிமிழு
நாணிரம்பவோகணனெச்சிலகழியவோநடுவே
காணுமுன்பிடித்தரிந்தனள்சொரிந்தனள்காளி. ௭௯

திக்கனைத்தையும்யாகதண்டத்தமர்செலுத்தி
யிக்கனைத்தவர்பணிசெயமுனிவரோத்தெடுப்ப
முக்கனைந்தழன்முருக்கெனப்பூத்துமுன்னிருந்த
தக்கனைச்சிகைபிடித்துவாள்பிடித்தனன்றலைவன். ௮௰

மக்கடாரமுமுலைகண்மூக்கிழந்தமைமதியாய்
திக்கடாமல்விட்டோடியதேவரைத்திருப்பாய்
மிக்கடாவினைவிடாததோமுடிந்ததோவேள்வி
யக்கடாவுனக்கெளியனோமழுப்படையமலன். ௮௧

வேறு.

சிற்பராபரைமகளாச்சிவபெருமான்மருகாக
முற்பராய்த்தவம்புரிந்தமுறைமையாலுலகாண்டாய்
தற்பராபரனைமறுத்திகழ்ந்துதனித்தாய்பாவி
யற்பரானவர்முடிமேற்றங்குமோவபிடேகம். ௮௨

உன்னையீன்றெடுத்தவனேயுயர்மவுலிதேடவவன்
றன்னையீன்றெடுத்தவனேதாட்கமலந்தேடநின்ற
வென்னையீன்றெடுத்தபிரான்றன்னைமதத்தாலிகழ்ந்து
சொன்னவாய்சிரத்தினொடுந்துணிக்கின்றேனெனத்துணித்தான். ௮௩

எச்சகாயத்தவருமிடைந்துமாய்ந்தனர்போத
னெச்சனுஞ்சிறுவிதியுமிமைப்பொழுதில்வீடினு
னெச்சனாமல்லதிலையெனவிரலையாலெழுந்த
வெச்சனுமவன்றலையும்வாளினாலறவெறிந்தான். ௮௪

மந்திரத்தின்முறையறியார்பூசைபோன்மகவேள்வி
யிந்திரற்குமிமையோர்க்குமுடியாமலிருந்ததாற்
சிந்துரத்தமொடுதக்கன்சிரமறுத்தாகுதிபுரிந்து
தந்திரத்தினொடுமுடித்தானொருகணத்திற்சகாரதன். ௮௫

அமராரகவேமகத்திடையவியுணப்புகுந்தா
ரமராரகவேகளத்திடையவியுண்டாரதனாற்
றமரவாரிதிவிடமுண்டதம்பிராற்பரவுந்
தமரலாதவர்நினைத்தவாமுடிப்பரோசகமேல். ௮௬

உகமழிப்பவனையபோர்வீரனென்னலைக்
ககமழித்திடப்பொருதுபோய்க்கணத்தொடுகயிலை
யிகன்மழுப்படையெம்பிராற்றொழுவனீந்தான்
மகமழித்ததோர்நாமமுமழிவிலாவரமும். ௮௭

நண்ணுவீரனுநந்திபல்கணமுநாரதனுங்
கண்ணனும்புடைபரவவீற்றிருந்தருள்கயிலைப்
பண்ணவன்றனைப்பணிந்தனனெழுந்தனள்பகர்வா
ளண்ணல்பாகமுமாகமும்பிரிகலாவணங்கு. ௮௮

வேறு.

எவரும்பரிவுநின்னையெண்ணலாதிருந்ததக்கன்
பாவையென்றென்னைக்கூறும்பரிபவமொழிப்பாயென்று
தேவிநின்றுரைப்பநாதன்றிருவுளமகிழ்ந்துநம்பர
லாவல்சேரிமவான்செல்வியாகெனவருளிற்போந்தாள். ௮௯

சிறந்தநான்முகத்தோன்போற்றிச்செங்கங்களின்குறைபாடோதி
யிறந்தவருயிர்மீட்பானெம்பிரானருள்பெற்றேகி

யாறங்கைகால்சிரங்களாதியவையவம்பொருந்தமெல்லை
யுறங்கினர்விழித்தாலென்னவெழுந்தனரும்பரெல்லாம். ௧௰

அத்தலையூபந்தோறுமவரவர்முடிபெற்றுய்ந்தார்
செய்த்தலையூபத்தாடுநிணத்தலைபறிபோய்த்தக்கன்
மைத்தலையூபமேவிவானவர்தலைமைநீர்தான்
மெய்த்தலைவிதியேவந்துவிலக்கினும்விளைவிடாதால். ௧௧

யாகத்தின்விளையாய்த்தக்கனெடுத்தநல்விளையேயென்றுஞ்
சோகத்திவிளையாய்வந்துசூழ்ந்திடத்துயரிலாழ்ந்தான்
மேகப்பூங்குழலோர்பாகனருளன்றிவிளைகளாலே
பாகத்துயிர்கட்கெல்லாம்பயனறிவூட்டற்பாற்றே. ௧௨

சிவநெறியோர்க்குமோராச்சிறுவிதிசெயலின்மாய்வுங்
குலவுறுதிண்டோள்வீரன்கொற்றமுமுரைத்தாம்பின்னர்த்
தவநெறியில்லான்வேள்விச்சாலைபுக்குழன்றவாறே
ரவநெறியடைந்துபாவமடைந்தமைதொடர்ந்துசொல்வாம். ௧௩

௰௪—வது தக்கன்வேள்வியழிந்தசருக்கமுற்றிற்று.

ஆகத்திருவிருத்தம்—௪௱௭௰௪.

---

## ௰௫-வது-தேவர்கள்சிவத்துரோகமடைந்தசருக்கம்.

மோலியிற்பிறைவைத்தானைமுறையிலாதிகழ்ந்ததக்கன்
சாலையிற்புகுந்தவேள்விசமைத்ததீவினையினாலே
மேலையிமையோர்தம்மைவெண்மதியிரவிலாத
மாலையிலிருள்போல்வந்துவளைந்ததுசிவத்துரோகம். ௧

தளர்மதிமுடித்தார்சேர்பர்தவிர்தலாலமரர்பாவக்
களர்நிலத்திடைக்காலாழ்ந்தகயக்குறாமெனத்தாழ்ந்தார்
கிளர்சமத்தஞ்சியோடிக்கிழ்ப்படுமவுணராங்கு
வளர்நரிக்கணம்பொற்றுக்கிவளமெலாங்கவர்ந்தார்மன்றே. ௨

பல்லவமுயிர்க்கும்பாரிசாதமும்பசும்பொன்னாடுஞ்
செல்வமுஞ்சுரபிசிந்தாமணிகளுந்தெய்வமாதர்
நல்லெழிற்புணர்வுநீங்கிநல்குரவடைந்தார்கல்லாப்
புல்லர்தம்மருங்கிற்சேர்ந்தபுலவர்போற்புலவரெல்லாம். ௩

கவிகையுமரசும்வாழ்வுங்கடவுள்வாரணமுஞ்செம்பொற்
சிவிகையுமிழந்துகாலாலுழந்தனன்றேவர்வேந்த
னவியமுமறியுமேந்துநம்பனைநம்பார்க்கென்றும்
புவிதனிற்பிலத்தில்வானப்பரப்பினிற்புகல்வேறுண்டோ. ௪

இந்திரபதத்தைநீத்தவிந்திரன்முதலோரெல்லா
மந்திரக்கிழவர்சூழமதிநெறிமுறையிற்சூழ்ந்து

தந்திரக்கலைகளுவான்சதுமுகத்தவனேயென்று
சுந்தரப்பதுமத்தண்ணறுள்ளகர்நோக்கிச்சென்றார் ௫

வேறு.

பரவையாரமுதணவுபோய்வாழ்வுபோய்ப்பனிநா
ளிரவுதாமரைக்காடுபோன்முகம்புலர்ந்திமையோர்
குரவனுண்முகன்கோயிலின்றிருக்கடைகுறுகிப்
புரவிபூண்டதேரிரவிமுன்கமலமேபோன்றார். ௬

நாலிரண்டுகட்கமலமுமதிமுகநான்கு
மேலிரண்டிரண்டருமறைவிரிக்குநாத்தடமும்
பாலிரண்டினுநாலிருதடம்புயப்பணைப்பு
நூலிரண்டையுமகம்புறந்தரித்தநூன்மார்பும். ௭

மீநிலங்குநான்மகுடகோடிகள்வெயில்விரிப்புங்
காதிலங்கியகுண்டலமொளிவிடுகதிர்ப்பும்
போதிலங்கியகரங்களுங்கமண்டலப்பொலிவுந்
தாதிலங்கியதாமமாத்தாமமுந்தயங்க. ௮

நாவின்மாடந்தநறைவிரிநளினபீடத்துத்
தேவிபாரதிமகிழ்வொடுசிறந்துவீற்றிருப்ப
வாவிபேதகமனந்தகோடிகளுமங்குரிப்பத்
தாவில்வேதமுமங்கமுங்கலைகளுந்தளிர்ப்ப. ௯

மடன்முறுக்கவிழ் 0 வனருகமண்டபநாப்பட்
சுடர்விளக்கெனவுறைதருசுருதிவானவனைக்
கடல்கொழித்தனகருணையங்கடவுளைக்கண்டா
ரிடர்தவிர்த்தனமினியெனவிறைஞ்சினரிமையோர். ௰

ஞானமாதியாலுயிர்க்குடல்கரணங்கள்வயக்கி
யேனபோகமும்புவனமும்வினைவழியிசைத்து
மேனகாலமுங்கருமமுநடைபெறவிதிக்குந்
தானபங்கயாச்சிரமனேபரமனேசரணம். ௰௧

வானநாதனேமண்பொறுத்தந்தையேமறைதேர்
கானவேதியர்கலைகணேகருதுவார்கனியே
ஞானபாரதிநண்பனேநாற்பெருங்கோணிற்
பானுவாயொளிர்பகவனேசரணெனப்பணிந்தார். ௰௨

எந்தையேயெனவிறைஞ்சுவார்க்கெதிர்முகங்கொடுத்து
நொந்தவானவரொழுமெனத்திசைமுகனோக்கி
வந்தகாரணம்யாதெனப்பவளவாய்மலர்ந்தா
னந்தராதிபன்பரவிவாய்புதைத்துநின்றறைவான். ௰௩

---

0 வனருகம்—தாமரை.

சேம்மாநிதித்திறைகொண்டுவந்தெனமப்பரவு
நாமவாளுடைத்தானவர்க்குடைதந்தகலிந்தோம்
காமதேனுவுங்கற்பகக்காவுமிழந்தோஞ்
சோமசூரியர்வழங்கிடாத்திசைதொறுஞ்சுழன்றோம். ௰௪

வானமாநிலைகறையாடலுமறந்தோந்
தானபானமுஞ்சந்தியுநியதியுந்தவிர்ந்தோம்
மீனமார்தனத்தரம்பையர்முயக்கமும்பிரிந்தோங்
கானமாமலையுறுதிபோய்வறிதுநாட்கழித்தோம். ௰௫

வசைக்கலம்புனையவுணராஞ்சூறவினமடுப்ப
விசைக்கலங்கவிழ்வணிகர்போலிடர்க்கடல்வீழ்ந்தோ
நசைக்கலர்த்தனநறுஞ்சுவைக்கலந்தனநல்யா
ழிசைக்கலந்தனமெமக்கிதுபுகுந்தவெங்கூர். ௰௬

மிக்கநான்முகன்விளம்புவானென்மகம்விலக்கித்
தக்கனுமவனல்லதற்கோமகஞ்சமைந்தா
னுக்கபேரவியுருத்திரபாகமுமொழித்தான்
முக்கணாயகன்றனையுமிகழ்ந்தனன்முடிவால். ௰௭

தகவின்மக்களையழைத்தனனழைத்திலன்சதியை
யகிலமுற்றவுமீன்றருளன்னையென்றுணரான்
வகையுணர்த்தவுமுணர்ந்திலன்மத்தினாலழிந்தான்
புகலினுங்கெடுமதிகள்கண்டோற்றுமோபுலவீர். ௰௮

அறிவிலானவனப்படியாருகவானுற்
பொறியிலீருங்கள்புத்தியும்வெறுவிதாய்ப்போமோ
வெறிமழுப்படையிறைவனையாவரோனிகழ்ந்த
நெறியில்யாவருநிற்பரோநீவிரோநின்றீர். ௰௯

ஆதியார்விடமுண்டதாலமராராயமர்ந்தீர்
காதிமுப்புரம்வென்றதாற்கனகநாட்டுறைந்தீர்
மாதுபாகர்செய்நன்றியைமறத்தலின்மகத்தா
லோதுநல்வினைதீவினையானதாலுமக்கே. ௨௰

நந்திநாயகன்முகுந்தனைப்படைப்பநாளவன்ற
னுந்திமாமலர்மிசையவனருளினாலுதித்தே
னந்தநான்முதலீன்றுகாத்திருந்தனமதனா
லெந்தையாரலாலெமக்குமோர்களைகண்வேறுண்டோ. ௨௰௧

அனந்தசாமியுமியானுமேத்தமலையரவம்
புனைந்தவேணியெம்புனிதனைப்பொருளெனப்போற்றீர்
மனங்கொண்மாமறையோதியுஞ்சுவர்க்கமேல்வதிந்துங்
கனங்கொண்மெய்ந்நெறிகடந்தனிர்நவையுறக்கடவீர். ௨௰௨

பாவமேதரும்பழிதரும்பகைவராற்படுக்குந்
தாவசோபமேவிளைத்திடுங்குலத்தையுந்தாழ்க்கு
மாவதாம்பொருளழித்திடுநரகிடையழுத்துந்
தேவராகினும்விடுத்திடுமோசிவத்துரோகம். உங

கறையணிந்திடுங்கண்டனைப்பழித்திடுங்கயவோ
ரிறைசிவாகமஞ்சிவபுராணங்களையிகழ்வோர்
முறைமையன்பரையன்பர்வேடங்களைமுனிவோர்
மிறைசெய்கும்பிபாகக்கொடுநரகிடைவீழ்வார். உச

எழுந்திடாநரகழுந்தியுமியமதண்டத்தின்
கழுந்திறலடியுண்டுமேகற்பங்கள்கழிவார்
செழும்புனற்சடையெம்பிரான்சிவநெறியகன்று
பழங்கணெய்திடப்பரமதம்புகுந்தபாதகரே. உரு

ஆகையாலுமைச்சிவத்துரோகம்பிடித்தலைப்ப
யாகைதானவர்க்கேய்ந்துமாசுணப்படங்கிழிக்குந்
தோகைகோம்பியாற்சுழல்வதொத்திரநதலைந்து
போகயான்முதலெந்தையாலியற்றவும்போமோ. உசு

வேறு.

வேதநெறிக்கடங்காதபாவமியான்போக்குவனென்விதியிற்றீராப்
பேதமுறுபாவமெல்லாமாலொழிப்பனவனாலும்பிரியாப்பாவந்
தாதவிழ்கொன்றைச்சடையான்போக்குவிப்பன்வனருளாற்றவிராப்பாவஞ்
சீதரனார்தம்மாலுமெம்மாலுமெவராலுந்தீர்க்கொணாதால். உஎ

ஓராதகோகத்திபிரமகத்திதிரிகத்தியொன்றொன்றேற்றந்
சாராதகுருத்துரோகஞ்சனத்துரோகஞ்சாமித்துரோக
நேராகவொன்றிலொன்றுநூறுமடங்கதிகமிவைநீங்குமேனுந்
தீராதுதீராதுசிவநெறியிற்பிழைத்தவர்தஞ்சிவத்துரோகம். உஅ

என்றுதிசைமுகனுரைத்துநின்றுமுறையிடுவாரேநோக்கிரங்கிப்பின்னுந்
தொன்றுசேரகிலாண்டத்துள்ளசிவாலயங்களெல்லாந்தொழுவீராகி
லன்றுபோமுமதுவினையல்லதெனில்வகைகாண்குண்டலவகைனுஞ்சி
லொன்றுசெயத்திருமெனத்தொகையுணர்த்தியவகைவினவவுணர்த்துகின்றான். உகூ

வேறு.

பூதலமேலோசனையோரிலக்கம்பானுப்புதுமதியோரிலக்கமுடுமேலொன்றுகு
மேதைபுகர்செவ்வாய்பொன்சவுரிதானமேன்மேலேயிவ்விரண்டா விளங்கித்தோ
ன்று, மாதிமுனிவோரொழுவர்தானமேலொன்றப்புறமோரிலக்கமென்பர்துருவதா
ன,மேதினியிலிருந்துபுவலோகங்காறும்விலக்கரியதொகைமூலைந்திலக்கமாமால்

சுவலோகமிலக்கமெண்பத்தைந்துமேலேசொல்லரியமகலோகமிரண்டுகோடி
கவமேவுசனலோகமிருநாற்கோடிநண்ணுதவலோகமும்பன்னிரண்டுகோடி
யிலைமேற்சத்தியலோகமீரொண்கோடியெம்பதமுக்கோடியரிபதமுக்கோடி
சிவலோகநாற்கோடிபித்திகோடிசெப்புதொகையுளாக்கிலம்பான்கோடிபார்மேல்

பூதலத்தின்கனமிலக்கமெண்பானும்புயங்கமெட்டுஞ்சேடனுமெண்களிறுங்கேழ
லும், மாதலத்தைத்தாங்கிநிற்குமதன்கீழ்க்கோடிமர்திருபானிலக்கமாடகர்தங்கோ
யில், மேதகுபன்னகரக்கரவுணர்சூழ்வோர்விடுத்ததலமுதலேழுமேழொன்பானு
ஞ்,சோதிபெறுகூர்மாண்டர்பதங்கீழொன்பான்றென்னூற்றென்பானிலக்கமதன்
கீழ்க்கும்பி. கஉ

இருணிலமுமெழுநான்குகோடியாகுமிலக்கமிருபத்தொன்பான்கீழதாக, வொருக
மடமிருக்குமிடமொருகோடிக்கீழுயங்குநெடும்புகைப்படலமைந்துகோடி, மருவு
றுமக்கினிச்சுவாலைபதின்கோடிக்கீழ்வயுங்குகாலாக்கினியின்வரதர்கோயில், பெரு
குபித்திகோடியதன்கனமோர்கோடி பெரும்புவிக்கீழுலகமைம்பான்கோடியாமா
ல். கங

வேறு.

சேரவலையாடுமுதலானாவலொடுதேக்குர்குசைகவுஞ்சமிலவிறலிபுட்கரமேயாகப்
பாவலவர்புகழ்தீவுமேழாகுமுப்புப்பாறயிர்நெய்கரும்புமதுநீர்க்கடலேழாகு
நாவலர்தீவோரிலக்கமிரட்டிமேன்மேலுாலையுப்புமுதலேழுமன்னவேயாகு | யே
மேவுதிரைக்கடலேழுநதீபமோரேழு மிருகோடியைம்பதிலுன் இலக்கம்யோசனை.

சூழ்கனகபூமிபதின்கோடியப்பாற்சுடர்த்திகிரிவரையதனைச்சூழாநிற்கும் [க்கம்
வாழ்வகாயின்பெருங்கனமோரயுதமாகும்வளைந்தபுறக்கடல்கோடியிருபத்தேழில
பாழிருண்டபூமிமுப்பானைந்துகோடியத்தொன்பானிலக்கமுடனயுதநான்கா [டி,
மாழ்க்கனபிதந்கையோர்கோடியாகு மருவனைக்குநிலந்திசைதோறைம்பான்கோ

வாசனையைம்பதுகோடிதிசைதோறுன்மகிதலஞ்சூழ்ந்தாலயங்கள்வணங்குவீரோ
யோசனையைம்பதுகோடிவான்மேலெறியுயர்விடையார்பதம்பரவித்திர்க்கின்றீரோ
தேசனையைம்பதுகோடியிறங்கிக்கீழ்போய்ச் செறிந்தபாதலங்கடந்துகாண்கின்றீ
ரோ, வீசனையெனினைநதொருபாற்றவஞ்செய்வீரோவிலைநான்கினுமதுகருத்தியம்
பீரென்றான். கச

மேலானசிவபதத்தினுயர்ச்சிதானுமேதினியெண்டிசைபரந்தவிரிவுங்கீழமைப்
பாலானபாதலமூரகின்வீறும்படர்புகையுங்கனற்சிகையும்பரிந்துதாவிக்
காலாங்கியுருத்திரலாக்காணுமாறுங்கருத்திலுன்னிநடுங்கிக்கரங்கள்கூப்பி
காலானிதிசைமுகத்துக்கமலத்தேவானிதொழுதுபுத்தளிர்கவில்வதானார். கரு

முன்னமேவீரன்வலிக்குடைந்துபோனோமுழுதுமேசிவபதத்துமுயன்றுசென்று
மின்னமேசிவகணத்தார்பொறுப்பரோவுமிகலும்வயிரவர்குலத்திடையமாட்டேம்
பின்னர்மேற்புவனிவலம்புரிதலாற்றேம்பிலத்திறங்கியுருத்திரனைக்காணமாட்டேம்
தன்னமேதலியிருந்துசிவபிரானைத்தவம்புரிந்துகாணும்வகைசாற்றுயென்றார். கசு

வேறு.

வானவருரைப்பச்செந்தாமரைமலர்த்தவிசின்மேவு
ஞானநான்முகத்தோன்செவ்வானற்றவம்புரியுந்தானம்

பேணமாப்புணரிசூழ்ந்தபெரியபூதலமேயாகு
மானதோர்இகிரிவெற்பினசமலாற்புறமுமாகா. ௩௯

மற்றையேழ்தீவின்வேந்தர்மனுமகன்விரதனென்பாந்
பெற்றசீரங்கிரனபெரியமேதாதிபுட்டு
வுற்றசீர்ச்சோதிட்டென்பானுயர்தருதிமான்மற்ற
மற்றமில்சிறப்பின்மிக்கவார்வலிச்சவளன்மன்றே. ௪௰

அவரினுஞ்சம்புத்தீவிலங்கிரானுக்குமைந்தர்
புவிபுகழ்பாரதன்கிம்புருடனேயரியேகேதுத்
தவறில்பத்திராச்சுவத்தன்றனியிளாவிரதன்மேனு
நவிரமியனேபொன்னன்குருவிவர்நவகண்டத்தோர். ௪௧

வீறுசேர்சம்புதீபநடுவுறவிளங்குமேருக்
கூறுநாற்றிசையுஞ்சூழக்குலவுநாற்குனறமப்பான்
மாறிலாத்தென்பான்மூன்றுவடதிசைமூனறுமேல்பா
லூறிலாவொன்றுகீழ்பாலொன்றுசூழ்குன்றமெட்டாம். ௪௨

ஈரொன்றாயிரமேழும்பக்கமுமெண்பானான்கு
மேருமேலுயரம்பாதுமிகுளவரைகட்காகு
சேருமெண்கிரிச்சாரொட்டுஞ்செம்பொன்மால்வரையின்சுற்றுஞ்
சாருமேகண்டமொன்பானவ்வகைசாற்றகேண்மின். ௪௩

வடகடல்சிருங்கராப்பன்வளர்குருவருடமிப்பா
லிடவியசுவேதங்காறுமிரமியவருடமேனைத்
தடவரைநீலங்காறுந்தனியிரணியமாங்கண்டஞ்
சுடர்வரைமேருச்சூழ்ந்தஇளாவிரதபேர்சொல்லும். ௪௪

கந்தமாதனமேமேல்பாற்கடலிடைக்கேதுமாலம்
வந்தபத்திரியேகீழ்பால்வாரிமாலியவான்மட்டு
மந்தமாவிடதத்தென்பாலரிகண்டமேமகூடத்
தந்தியதென்பாலாகுமுயர்ந்தகிம்புருடகண்டம். ௪௫

பனிவரைசேதுகாப்பட்பாரதகண்டமாகு
மனிதருமிவையொன்பானினன்னுபத்திரியேகேது
விளியமுப்பதிற்றுகாலாயிரமெனபரோனயாறு
மினையயோசனைகளொன்பானாயிரகாப்பன்மறநே. ௪௬

தருமமேதருமபாவந்தவிலாப்பாவமூன்றுங்
கருமபூமியிற்செய்வோர்கள்கதிதருசுவர்க்கம்பூமி
யிருணிலமூன்றும்போகமெய்துவரிவைகண்மூன்றிற்
பொருவருஞ்சுவர்க்கசேடம்பொசிப்பதுபோகபூமி. ௪௭

இதியபாரதகண்டமுழ்வுவுரணிபுக்கன்னிக்குத
யாதல்சேர்வகைவுசிற்பன்கருமத்தாற்கருமபூமி

பீதறையவர்க்குசெல்லுர்ண்மேனியுமுழநாலெட்டுக்
கோதமபருவகாறுறகர்தொறுங் துறையாநிற்கும். சஅ

கருமசேடங்களுண்பார்கதிகண்மேல்விழைவார்க்கெல்லாந்
தருமமுநதவமுஞ்செய்யததக்கதகருமபூமி
புரிதவமனேகன்சாலம்பாகபூமியிற்செய்வார்க்கு
வ்ருபலனகருமபூமிவளசொருதினத்தேநல்கும். சக

வேறு

ஒண்டொடியோர்பாகனிடமுறைப்பின்ண்டத்துச்சியுருத்திரர்கோயிலதன்மேருமண்டாபிரான்சிவப்லாகமனைமூலததமர்வதுகாலாக்கியுருத்திரர்தஙகோயினமண்டுமோடகர்சோயிலதனமேலாசமகிதலததினிருகோடிகீழாமனதும்வண்டநடுச்குடதிலசயின்கீழபாலாகுமேருமேகலமூன்றில்விமலங்கோயில்-௫0

வேறு-

பொன்மலையுத்தரத்திலண்டச்சுவாணவும்வடகயிலைப்பொருப்புங்கோடும்
பன்மதிதுமளபபரியவுருத்திரர்நாராயணருமபதுமத்தோருங்
கொனமலிவேறகர்தாகணபதிகள்சாரகர்சாத்தர்குழுவிருர்ப்பு
நின்மலசதாசிவமுநதெய்வசக்கிழாமுமெமமாணிசழ்ந்தொறுதால்- ௫௧

பொனனிமைபடிால்லைக்குவடமேல்பான்மநதாத்தின்புடைசேர்தென்பாற்
கன்னிசெருங்கயிலைவரைகறபகோடிக்ளகடாதுககனநதாவிச்
செனனிமதியாறணிநததேவனேயனதிமறநத்தேவசொல்லா
கனனிலவிட்டிறப்பதுவும்பிறபபதுவுங்கண்டுகனைநகையாநிற்கும்- ௫௨

வேறு-

தங்கவடகயிலாயமுதலாவைநது துருவொனறுதொண்டைவளநாட்டென்றுங்கு, தஙகுநடுநாட்டிருபத்திரண்டுபொனனித்தலநூறறுததொண்ணூறுமலைநாட்டொனறு, கொங்கேழுசிங்களததிலிரண்டுவைகைக்காழ்தமிழ்நாட்டீரேழுமுதலாஞ்சூலச், செஙகையார்தலமிருநூறறெழுபானுன்கிறமிறக்கணபாற்கயிலாயந்திருக்குறறூலம்- ௫௩

அம்புவியிலித்தகையாலுரைத்தவெல்லாமாதிதலம்பிறதலங்களனநதமாகுஞ்
சம்புநிலப்பரதகண்டமடநல்லாட்குததாணிட்டுவடதிசைதென்றிசையேசென்னி
கம்புசிர்ப்பருப்பதங்கேதாரங்கொஙகைகளிவயற்றமிழ்நாடுவதனமாகக்
கொம்பலர்சூழ்செண்பகாரணியஞ்சூழ்நதகுறறூலமபீடகத்தானமாமால். ௫௪

புவனநெடும்பரபபெல்லார்த்தினைகயர்தாகப்பொன்னிமையகிரிவடபாலுன்குபோகக், கவனவரைமிமயமுதறகனசிகாறங்கண்டபெருநிலமுழுதங்கழனியாகுஞ் சிவனுறைகேதாரமுதற்கருப்பநதோட்டஞ்செனனிவளநீர்நாடுகன்னற்சாறும். குவலயத்தமிழ்நாடுவடித்தபாகுகுற்றாலஞ்சருக்கரைவட்டாகுமன்றே. ௫௫

வேறு.

தற்பரனையம்பெருமாட்டியமிலாண்டசித்திவெனத்தனிநின்றும்
முற்பதியாயுயர்தாணுமாலயபூர்தொட்டிதுவசோர்மூலகீடாயக்

கற்பமெனுங்கடல்கடத்துந்தோணியாய்க்குணக்குறிகள்கடந்தஞானச்
சிற்பரனவாழிடமானபரமரகசியத்தானந்திருக்குற்றாலம். ௫௬

சிறக்குமிடஞ்சிற்பரைக்கும்பரமனுக்குமூவருக்குந்தேவர்யார்க்கும்
பிறக்குமிடங்கவுரியரம்வளர்க்குமிடம்பிறந்தோர்கள்பிறவிபிணி
மறக்குமிடம்வடவருவியெனுங்காமதேனுவளர்பால்சுரந்குன்
கறக்குமிடம்பரகதியேகாட்டுமிடந்திரிகூடக்கடவுட்டானம். ௫௭

ஆண்டுபதினாயிரமோர்புண்ணியமாத்தலந்தருமபேரனைத்துங்காசி
கூண்டுதவுமோராண்டிலயணமொன்றிற்கேதாரங்கொடுக்குங்காஞ்சி
பூண்டுதவுமிருமதியிலொருமதியிற்பெரும்பற்றப்புலியூர்நல்குஞ்
சேண்டருமெய்ப்பயன்களெல்லாமொருநாளிற்கொடுத்தருளுந்திருக்குற்றாலம். ௫௮

வேறு.

தாய்பசிக்கத்தந்தைபசித்திருக்கக்காண்போர்தங்கள்சுற்றமனைக்கொதிக்கத்தாங்களவாழ்வோர், செய்பசிக்கத்துடிக்கவிருந்துண்போர்தாரஞ்சிறைவிருத்திப்பரதாரம்விரும்பிச்செல்வோர், வாய்பதைத்துப்பிறர்குடிக்குத்தீங்குசொல்வோர்மன்றிருந்துவழக்கோரஞ்சொல்வோர்பொல்லா, நாய்வளர்த்துக்கொலைபுரிவோர்பாவமெல்லாநன்னகரேதவிர்க்குமெனுமிருக்குவேதம். ௫௯

அடுத்தார்க்குநன்றுசெய்யாரிடுக்கண்செய்வார நதணரையுயிர்செகுத்தாரராவைக்கொன்றார், கொடுப்பாரையருகிருந்துதடுப்பார்கற்பின்குலமாதர்வரம்பழித்தார்குருவைப்போற்றார், கெடுப்பார்க்குத்துணையாவாரறஞ்செய்வார்க்குக் கேடுசெய்வார்பாவமெல்லாங்கிரிக்கோதண்ட, மெடுப்பார்க்குவளம்பதியாந்திருக்குற்றாலமிமைப்பொழுதிலொழிக்குமெனுமிரண்டாம்வேதம். ௬௰

அன்னமிட்டார்தமக்கிரண்டுநினைகின்றாரு மடைக்கலத்தைவயிறெரியத்தொடுகின்றாரும், பின்னமிட்டுக்கிளைக்கூட்டம்பிரிக்கின்றாரும்பெரியாரைப்புறம்பழித்துப்பேசுவாருங், கன்னமிட்டுக்களவாடிக்கள்ளுண்பாருங்காமத்தாலழிவாருமெய்தபாவ மூன்னவர்க்குமுன்னவர்குற்றாலமென்றுமொழிந்தாலுந்தீருமெனுமூன்றாம்வேதம்

உலகிடத்துத்தொலையாதபாவமெல்லாமுயர்தருபுண்ணியதலத்துத்தீரவேண்டும்
பலபலபுண்ணியதலத்துந்தீராப்பாவம்பரமனுறைசிவதலங்கள்பரவத்தீருந்
திலகமெனுஞ்சிவதலத்துச்சென்றூர்பாவந்திருமேதிராதசிவத்துரோக
நலமலிசீர்த்திரிகூடத்திருக்குற்றாலநன்னகர்போதிர்க்குமெனுநான்காம்வேதம். ௬௧

வேறு.

இன்னபடிமறைநானுந்துறைதோறுமுழங்குதலாலிமையோர்நீவிர்
மன்னகர்ச்செண்பகவனத்துச்சென்றுதவம்புரிந்துமதுநகவைசடர்ந்து
சின்னமதிபுனைவேணிச்சிவபிரான்றிருவருளாற்றெய்வக்காவும்
பொன்னுலகுமாம்பையர்பாற்புதுநலமும்பெற்றுழ்ந்தும்பொலிவீரென்றான். ௬௨

விண்ணிலுறைசதுர்முகத்துவேதியனீதுரைத்தருளவிட்டுக்கொண்டேகிக்
கண்ணியவாறுவரத்ததனுற்கனிகூர்ந்துகனிக்கரும்பின்கணம்போல்வாரோர்

மண்ணிமணியலைகொழிக்குங்கடல்வாவிக்குவலையமாமலர்த்தபூமேற்
புண்ணியமாமதனூறியவட்டெடுக்குந்திரிகூடப்பொருட்டிற்சேர்ந்தார். ௪௭

பிரமனைக்கண்டுறுதிபெறும்பேறுரைத்தாந்திரிகூடப்பிறங்கன்மேலாச்
சிரமதிசைத்தலம்புரிந் துசிவத்துரோகந்தவிர்ந்துநிங்கள்சூடும்
பரமனைச்செண்பகவனத்திற்பண்ணவனைக்கண்டுபதம்பரவினாரோர்
புரமனைத்தங்குடியேறக்கரையேறுமகிமையினைப்புகறல்செய்வாம். ௪௮

௧௫-வது. தேவர்கள் சிவத்துரோகமடைந்தசருக்க முற்றிற்று.

ஆகத் திருவிருத்தம்—௬௱௬௬.

---

# ௧௬-வது. தேவர்கள் சிவத்துரோகந் தீர்ந்தசருக்கம்.

வற்றுதனைநருவிவான்றுவியானை
நற்றலமேவுதுறையாடினிவாரோர்
குற்றலமேயதிரிகூடமிசைவந்தார்
பொற்றலமேல்விளைவுபுந்தியிலொழிந்தார். ௧

விண்பகவுயர்ந்தகிரிமேவுசிலையெல்லா
மெண்பகரிலிங்கவடிவென்றுதிசெயித்தார்
செண்பகவனத்துதித்செயத்தையெதிர்கண்டா
ருண்பகல்செய்கற்பகவனந்தையுமயர்த்தார். ௨

காவைகளைனல்விளைகானிலெதிர்மேவித்
தானவரையீறுபுரிசாரதனையெய்தி
ஞானவரையோகியர்கணங்குகைநண்ணி
யெனவர்கண்மாதவமியற்றுமிடைசென்றார். ௩

வேறு.

சந்தகில்குரவவேலிச்சண்பகச்சோலைசார்ந்து
புந்தியின்மகிழ்ச்சிகூர்ந்துபொன்னகரமரர்முன்னு
ளந்தமார்தக்கன்வேள்வியழலினுற்காயந்தமேனி
மந்தமாருதத்தினாலேவரவரக்குளிர்ந்தார்மன்னோ. ௪

பாளையஞ்சடைகள்பின்னிப்பழுப்பிலைக்காவிதாங்கி
நீளவுமொருதாணின்றுமெய்யரிச்சீரைசாத்தித்
தாளினிர்சிரத்திலேற்றுத்தவத்தர்யோகியர்கள்போது
நாளிகேரங்கள்கண்டார்நலம்பெறுமகிழ்ச்சிகொண்டார். ௫

கன்னிபம்பசியபாளைகமழ்தருபருவத்தெங்கின்
மன்னியகுரும்பைகாய்த்தமழைமுகில்பொதிந்ததோற்ற
மன்னியவுலகிற்றெய்வவட்டவர்வந்தாரென்று
துன்னுபர்மடவார்கொங்கைதுகிலினுன்மறைத்தன்மானும். ௬

புண்ணியதருக்களாகப்போகிந்தபூஞ்சோலைவேலித்
திண்ணியகதலிநின்றசென்றமாலையுந்தோற்றம்
விண்ணினிலரம்பைமாரைவேட்டவர்வந்தாரென்று
மண்ணினிலரம்பையர்வட்டங்கள்சுழற்றன்மானும். ௭

அருக்கமாமலரில்வீழந்தசுரும்பினாநறவமாடி
மருக்கமழ்தாதிஞலேவடிவுவேறமைந்ததோற்றந்
திருக்கிளர்தழலின்மூழ்கித்திருநாளைப்போவார்மேனி
யுருக்கிளர்சைவத்தெய்வவுருவுபெற்றெழுந்ததாமால. ௮

பண்மலர்துளிக்குந்தேறல்பைம்பொனுடலித்தேமென்னுங்
கொண்மலிதாரையன்றிக்குளிர்மழைத்தாரைபோதுஞ்
சண்மலிச்சினைகடேவுஞ்சண்பகமலர்கள்வானம்
பொன்மழைபொழிவதன்றேற்பூமழைபொழிவதாமால். ௯

இலவிதழ்விரியுந்தோற்றமியர்கொலோதக்கன்வேள்வி
நலனழிநகர்ந்தாரென்னநவிலவாய்திறத்தல்பாலும்
புலனுறவடைந்தார்தம்மைப்புறஞ்சொலத்தகுமோவென்ன
வலருமாந்தளிர்கள்கையாலமைந்துவாய்புதைத்தன்மானும். ௰

தேவர்கள்வந்தாரென்னச்செண்பகவனமாங்கன்னி
மாவடுவிழியாளுக்கிமுருக்கின்வாய்மலர்ந்துமுல்லைப்
பாவனைமுறுவல்பூத்துப்பாடல்வண்டிசையாலேத்தி
யாவல்சேர்தளிர்க்கைப்பூந்தேனருக்கியமளித்ததன்றே, ௰௧

கண்டனனமரர்வேந்தன்கண்களாயிரத்தின்பேறு
கொண்டனனியாமைநாட்டங்கொண்டபேறமைந்தார்பின்னோர்
தண்டலைக்கமுகவேலிச்சண்பகவனச்சீர்நோக்கி
லண்டர்தங்குரவன்வாய்மையாயிரத்தொன்றேயென்றார். ௰௨

பூவின்மேல்வண்டோடாப்புதியசண்பகக்காவெங்குந்
தேவரோபூவின்மேவிச்செழுந்தவத்தேன்வண்டானார்
மூவராய்ப்பரமமூர்த்திமுத்தொழில்புரியுந்தானம்
யாவரோவலஞ்செய்யாதார்யாவரோதவஞ்செய்யாதார். ௰௩

கந்தரவருடஞ்சேர்ந்தான்கமழ்புனற்கிறைவன்வாரி
யிந்திரனுவைச்சார்ந்தானிந்திரனெழிற்பூஞ்சோலை
மந்தமாருதத்தைச்சார்ந்தான்மருத்துமாமுனிவர்வேள்விச்
செந்தழலத்தனைச்சார்ந்தான்செழுங்கனற்கடவுண்மாதோ. ௰௪

அந்தகன்றருமவேடமாகினனிருதியாவான்
மூந்துவேட்டுருவமானான்முதுதவம்புரியுமேனைத்
தந்திரர்யாமோர்சித்தர்தவத்தர்விஞ்சையர்புத்தேளிர்
கந்தகிம்புருடர்மற்றோர்வின்மையுமவருத்துச்சொல்வாம். ௰௫

மனிதராய்வடிவுகொண்டோர்சுளாய்ப்புள்ளாய்வாசப்
புனிதமார்தருக்களாயும்புயல்கெழுகிரிகூடத்து
முனிவராய்ப்புதலாய்ப்புல்லாய்முற்றும்வேற்றுருவம்பூண்டிந்
தனிதராய்த்தவங்கள்செய்தார்தானவர்பயத்தான்மன்னோ. ௰௬

ஆலயச்சங்கவீதியண்ணலையுன்னிவானோர்
நால்வகைச்சங்கத்தோருநளினங்கோமுகஞ்சொத்திகஞ்
சால்புசேர்வீரஞ்சிங்காசனமுத்தஞ்சுகாசனங்கள்
பீலிபத்திரமாமொன்பான்பெரியவாசனத்திருந்தும். ௰௭

ஆறுடற்பகைகையையோட்டியைம்புலனடக்கியாண்டு
மேறுநாற்கரணங்கட்டியியலுமுக்குற்றமாற்றி
யூறுகால்வளியிரண்டுமொருக்கியோர்வழிகடாவி
மாறிலாயோகநீராற்றவப்பயிர்வளரச்செய்வார். ௰௮

இயமமாசனந்தியானந்தாரணைபிராணயாம
நியமமங்கியதிநீண்டபிரத்தியாகாரநிட்டை
யுயருமட்டாங்கயோகமுணர்ந்தியுமாறுதாரத்
தியல்பெறுபாந்தண்மூலத்தெழுபசிமேலாடல்சண்டும். ௰௯

காய்பலதின்றுங்கானிற்கனிபலநுசர்ந்தும்வாவிப்
பாய்புனல்பருகாநின்றும்பச்சிலைகறித்துங்கல்லிற்
சாய்பலகிழங்கசித்துஞ்சருகினைப்புசித்துந்தாங்கா
வாயுபக்கணங்கள்செய்தும்வசிலறப்பசியைத்தின்றும். ௨௰

சாந்திராயணமுடித்துந்தருதிங்களுபவாசித்து
மாந்தியுமயனத்தோர்நாள்வருடத்திலோர்நாளுண்டும்
காந்தியின்வெயிலசேர்பஞ்சக்கனலின்மத்தியிலேநின்று
நீந்துதலரிதாம்வாரிநீரிலேநிலையாநின்றும். ௨௧

கல்லெனக்கிடந்துநீரிற்கயலெனவாழ்ந்தும்பாரிற்
புல்லெனப்பொருந்தாநின்றும்புற்றெனவளர்ந்துமேனி
வில்லெனவளைந்துமாலின்வீழெனச்சடைகள்வீழ்த்துஞ்
செல்லெனக்கலங்குறுதுந்தீயெனப்பயமுறுதும். ௨௨

ஊசிமேலொருகால்வைத்துமொருவிரலூன்றிக்கண்கு
ஞுசிகாமூலம்வைத்துநன்னிலத்தொருகையூன்றி
யாசுவாய்முடிகீழாகவடியிணைமேலாய்நின்றும்
வீசுகைசிரமேற்கொண்டும்விடாதுமெய்த்தவங்கள்செய்தார். ௨௩

அப்பரிசமரர்யாண்டிலாயிரப்பதிற்றுண்டேல்லா
மெய்ப்பெருந்தவங்கள்செய்துமெய்யெலாம்வருந்தித்தேம்பிச்
செப்பருங்கவலைகூர்ந்தார்தேவரேயாகிலம்மா
விப்பெருஞ்சிவத்துரோகம்யாவரேதொலைக்கவல்லார், ௨௪

அத்தனைக்காலமெல்லாமருந்தவம்புரிந்தமாதி
கத்தனைவிடஞ்சேர்நீலகண்டனைத்திரிகூடத்து
நித்தனைவரவுகாணார்நின்றனர்திகைத்துவாடிச்
சித்தநைந்தலைந்தவாறோர்சிந்தையில்வருந்திச்சொல்வார். ௨௫

வேறு.

உருகினேமுடலெலாமுளமெலாமறுகினேம்
விரவினேமனலினேலெயிலிலேகருகினேம்
வருகிலாரருள்கிலார்மழுவலாருலகெலா
மருளுமோர்பரமனாருளிலர்தவர்கொலோ. ௨௬

வரமெலாமுதவுமோர்வரதனார்கருதலார்
புரமெலாமெரிசெய்தேபுவியெலாநிலைசெய்தார்
பரமனார்நமதுபால்பரிகிலார்வருகிலார்
பிரமனார்மொழியுமேபிசகுமோபிசகுமோ. ௨௭

வேகமேயிடையறாவேழமேயுர்செய்தா
ராகமேயணிசெய்தேயாதிநாளருள்செய்தார்
நாகமேயணிகுவார்நாமெலாமெலியவே
யேகநாயகர்வராரேழையெம்வினையிதோ. ௨௮

செங்கைமான்மழுவினார்செண்பகாடவியினு
ளெங்குமாம்வடிவுளாரெங்குமாம்விழியுளார்
கங்கைவார்சடையினார்கண்டுமேவருகிலா
ரங்கமேபுகழ்துநாமென்றுவாளவரெலாம். ௨௯

வேறு.

அவரவர்கண்மனந்தோறுமறிவென்னுஞ்சுடர்தூண்டப்
பவரமர்செஞ்சடைக்காட்டுப்பசுங்கனகத்தனிக்குன்றைக்
கவரமருந்திரிகூடக்கனவரைவாழ்கற்பகத்தைத்
துவரமருநறுங்கனியைத்தோத்திரஞ்செய்தெடுத்தார். ௩௰

தேவருக்கும்பெருந்தேவேதிரிகூடப்பரஞ்சுடரே
மூவருக்குமுதற்பொருளாய்முளைத்தருளுந்தனிமுதலே
மேவருட்கண்வாரிதியேமேலானகுணக்குன்றே
யேவருக்குமுனையல்லாற்புகலுண்டோவெம்பெருமான். ௩௧

ஆயார்க்குத்தோன்றாத்துணையாவாயனைத்துயிர்க்குஞ்
சேயாவாயணித்தாவாய்செண்பகப்பூங்காவுடையாய்
தாயாவாயெமதுரிமைத்தந்தையாவாய்பரவார்
நோயாவாய்பணிவார்க்குநோய்தீர்க்குமருந்தாவாய். ௩௨

மண்ணுடையாய்நீருடையாய்வன்னியுடையாய்மருத்து
விண்ணுடையாய்சன்கெமீதியுடையாய்ப்பிம்

பெண்ணுடையாய்சென்னிமிசைப்பிறையுடையாய்கண்களின்மேற்
கண்ணுடையாயெங்கடுயர்காணுவாறென்னேயோ. ௩௩

கரிகூடவேடனுக்குநந்தாதபதமளித்தாய்
பரிகூடகரிகூடத்தும்பரமகாரணமூர்த்தி
யரிகூடவயனறியாவண்ணலேயிரங்காயுன்
திரிகூடங்கண்டவர்க்குத்தீராதவினையுண்டோ. ௩௪

புகழ்வரர்க்குநல்குதியோபுட்பகந்தனூர்முதலா
யிகழ்வார்க்குங்கதிகொடுத்தாயல்லையோவெங்கோமான்
திகழ்வார்க்குவினைதீர்க்குஞ்செண்பகாடவியுடையா
யகழ்வாரைத்தாங்காதநிலமுண்டோவச்சோவே. ௩௫

ஈயறியாப்பூந்தேனேயெழுத்தறியாமறைப்பொருளே
காயறியாச்செழுங்கனியேகற்பகத்தின்பசுங்கொழுந்தே
தாயறியாக்கருவிலிருந்தமுதூட்டுந்தாய்த்துணையே
நீயறியாச்செயலுண்டோநிகிலபரம்பரமூர்த்தி. ௩௬

கங்கைதனைச்சென்னிமிசைக்காதலாற்றாங்கியதும்
பங்கயப்பொற்றாள்பரவும்பகீரதனுக்காவன்றோ
சங்கையறநொந்தேமைத்தாங்காயோமானையொரு
செங்கைமிசைத்தாங்குந்திரிகூடத்தம்மானே. ௩௭

நன்றுநரகாசுரனையந்தகனையிடழித்துத்
துன்றுமுலகெல்லாந்துயர்தவிர்த்தாயல்லையோ
வின்றுநீவாராயோவேழையேமெய்துதுயர்
குன்றுந்திரைக்கடலுங்கொள்ளாதுகொள்ளாதால். ௩௮

நஞ்சம்பொறுத்தாய்நகுபாரவெண்டலையின்
வஞ்சம்பொறுத்தாய்மழுவேந்துங்கையுடையாய்
தஞ்சந்திரிகூடத்தானேயெங்கள்பிழை
நெஞ்சம்பொறுத்தருளனின்மேற்கடனன்றே. ௩௯

நாராயணனுமொருநான்முகனுங்காண்பரியா
யாராவமுதேவருக்கைகிழலம்மானே
வாராயிதுசமையம்வந்தருளிநின்கணருட்
பாராயென்றும்பர்பரதபிக்குமந்நேரம். ௪௰

வேறு.

குளிர்புனற்கொழுந்தும்வில்வத்தழைகளுங்கொன்றைப்போது
மிளிர்மதிப்பிஞ்சுங்காயும்விரிசடைப்பவளக்காடு
நளிர்மறைபழுத்தவாயுநாட்டங்கண்மூன்றும்வானோர்
தெளிர்தரவிடைமேல்வந்தான்சிவதிரிகூடத்தம்மான். ௪௧

வாடியபயிர்கள்கண்டமழைமுகம்போலவாடித்
தேடியவறியோர்கண்டதிரவியம்போலக்கங்கை
சூடியகனகக்குன்றைச்சித்திரச்சுருதிமன்றி
லாடியபெருமான்றன்னைக்கண்டனரமரரெல்லாம். சஉ

கண்டனர்விழியுறொஞ்சுங்களித்தனர்களியாற்றேற
லுண்டனர்திருக்குற்றாலத்தொருவனைப்பரவிவாழ்த்தி
விண்டனர்பரமானந்தவெள்ளத்துட்டிளைத்துமேவித்
தெண்டனிட்டாடிப்பாடிச்சென்னிமேற்கரங்கள்கூப்பி. சங

ஒன்றாகியிரண்டுமாவாயொன்றிரண்டாவாய்மற்று
மின்றாகியென்றுமாவாயிலதுளதாவாயெல்லா
மன்றாகியனைத்துமாவாயாதியாயந்தமாவாய்
குன்றாகியணுவுமாவாய்குறும்பலாவுடையாய்போற்றி. சச

படைப்பவனீயேயாவும்பரிப்பவனீயேமுற்றுந்
துடைப்பவனீயேமூன்றுதொழிலன்றித்திரோபவங்க
ளடைப்பவனீயேபாவுமறுக்கிரகிப்பாய்நீயே
யுடைப்பெருந்திரிகூடத்தாயுனையல்லாலுலகமுண்டோ. சரு

கருவியாய்ச்செயல்களாகிக்காலமாயிடமாய்ச்செய்யும்
பொருள்களாய்ப்புரிவாருகிப்புவனகோடிகளுஞ்செய்வாய்
மருவியேசலந்துநிற்பாய்மற்றநீயவைகளெல்லா
மொருவியேபிரிந்துநிற்பாயுன்னையாருணர்தற்பாலார். சசு

காணவுந்தொழவுந்தொண்டர்கருதவுந்திரிகூடத்துப்
பூணவுமுரியாய்நின்னைப்புலப்படத்தேடிக்காணச்
சேணதோநிலமதேயோசிவப்பதோகறுப்பதேயோ
வாணதோபெண்ணதோவென்றறிந்திலமறைகளின்னம். சஎ

அரும்பியபொருள்களாவாயல்லையுமாவாயன்பர்
தரும்பெனிற்றரும்புமாவாய்தானெனிற்றானுமாவா
யிரும்பெனுமனத்தார்காணவெளியையோதிரிகூடத்துத்
திருந்திழைபாகாவேகாசித்திரக்கூத்தாவென்றார். சஅ

வேறு.

நின்றுபுகழ்வானவரைத்திரிகூடப்பரன்கருணைநிறைந்துநோக்கி
யொன்றபெருமாதவமுந்தோத்திரமுமினிதுவந்தோமுமக்குவேண்டும்
வென்றிவரங்கேண்மினெனவருளுதலுமெங்களுக்கும்வேளினின்றுமை
யென்றுமெழுதாவேதமன்பருக்கேயன்பனெனவிசைப்பதென்றே. சகூ

முன்னாளிலுனையிகழ்ந்துசிறுவிதிதீமகத்தடைந்தமுறாலன்றோ
பன்னாளுமரசிழந்தப்பதியிழந்துவறுமையிலுற்பனைக்கின்றேம்யா
மந்நாளிலெமைத்தடர்ந்தசிவத்துரோகந்தனையின்றகற்றல்வேண்டு
மெந்நாளுமெங்கள்பதம்யாங்கள்பெறவேண்டுமெனவிறைஞ்சிப்பின்னும். ருய

சந்துகாரகில்வேலிச்சண்பகாடவியொருநாட்டங்கிறோர்க்கு
மந்தமாருதக்கொழுந்துவந்தொருகாண்மெய்திளைப்பவரப்பெற்றோர்க்கு
மூந்துநீர்த்திரிகூடவடவருவியொருபொழுதுமூழ்கினோர்க்கு
மாதவான்பிரயாகைமாகமாபிரந்தருபேறளித்தல்வேண்டும். ருக

என்னபாதகம்புரிந்தாரொன்றுமித்தலத்திலெய்துவாரே
லன்னபாதகமவரையாதவன்முன்பனிப்போல்விட்டகறல்வேண்டும்
பொன்னகரமழிந்தாலுமழியாமைவேண்டுமிவ்வூர்புலியூராதிப்
பன்னகரம்பிரிபினுநீசன்னகரநீங்காமற்பதிதல்வேண்டும். ருஉ

புல்லெனினுமரமிலைகாய்கனியெனினுந்திரிகூடபுரத்துநீர்பாய்
நெல்லெனினுமழுதெனினுமுண்டோர்க்குங்கண்டவர்க்குநிலத்தில்வாய்ந்த
கல்லெனினுங்கிளியெனினும்பூண்டவர்க்கும்பாக்கியங்காட்டல்வேண்டு
மெல்லெனினுமிரவெனினும்பாங்களபவரிசெயவேண்டுமென்றார்வானோர். ருங

அவ்வரங்களகேட்டலுமேமபழுதாங்கவாய்முறுவலரும்பநோக்கி
யிவ்வரங்கள்குற்றாலத்தியற்கைநமதாந்தரங்கமுமக்காயிந்த
செவ்வரங்கள்வெளிபரங்கம்பெறத்தந்தோமினிபபுலவீர்சென்றெய்தி
மெய்வரங்கள்பெறுகவென்று ௦ னெழுதரங்கமினைசாடிக்கும்விமலமூர்த்தி. ருச

அந்திப்பான்மதியணிவாரவ்வரங்களருளிவிடையருளப்போனா
சிந்திப்பாம்பொன்னுடுஞ்செல்வமுமபெறறனாவானோர்சிவபிரானை
நிந்திப்பார்படுமபாடுமின்றோறுந்தககனமநிலைவாரா
வந்துபார்பெறும்பேறுவாழுதற்றொறுந்திரிகூடம்வாழுத்துவாரால். ருரு

வேறு.

சிலம்புரிதிருக்குற்றாலஞ்சேர்ந்துபாதகங்கடேர்ந்த
பொலம்புரியார்றொசெய்கைபுகனறபினறவர்கருக்குதன்
சலம்புரிசிலைக்கைவேடனசம்புவைத்துடர்ந்தும்மறா
வலம்புரிப்பணிலவீதிவலம்புரிமகிமைசொலவாம். ருசு

மஅ வது-தேவர்கள்சிவத்துரோகநீர்ந்தசருக்கமுற்றிற்று

ஆகத் திருவிருத்தம்—கூாகூஉ.

## மஎ-வது வேடன்வலம்வந்தசருக்கம்.

தரையினுலயம்வலமுதற்றிருப்பணிசரியை
கிரிசனெம்பிரானருச்சனைபுரிவதுகிரியை
யொருமையுள்ளுறத்தியானமுற்றிருப்பதுயோகம்
பொருவிலாவுடனிரண்டறக்கலப்பதுபோதம். க

அன்னநால்வகைச்செய்கையுநாற்பதமளிக்கும்
பன்னுநான்கினும்பணியணிபரமர்பொறகோயில
முன்னியேவலம்வருவதுசரியைபன்முறையின
மன்னுமோர்வகையன்னதுவிரிக்கிலேழ்வகையாம். உ

---

௦ எழுதரங்கம-சிதம்பரசபை

மதிலினுட்புறம்வலம்வரல்புறம்வலம்வருதல்
விதியினாற்காங்குவித்தன்மெய்த்தோத்திரந்தியான
மெதிரிறைஞ்சுசாட்டாங்கமெய்வலமெனவேழு
மதிகமொன்றிலொன்றுயிரமடங்கெனலாமால். ௩

நகரநாடொருதேயநற்கண்டநற்றீப
மகரவாரிசூழ்புவனமெண்டிக்குவானுலகம்
பகருமன்னராய்ப்புரந்துமிவ்வெழுவகைப்பணியோர்
சிகரவில்லியார்நுறைசிவலோகமேசேரவார். ௪

கானவேடுவன்கொலையுங்கோமாயுவின்களவு
மானவோடியவலமொருவலமெனும்பிழையு
மேனபாவமுநீக்கியெம்பரமர்குற்றால
மோனமாக்கதிகொடுத்தவாகேண்மெனமொழிவான். ௫

காலத்தாம்பிரக்கனிகள்பந்தாடுதெண்டிரைக்கைக்
கோலத்தாம்பிரவன்னியாங்கொழிதிரைநதிபாய்
ஞாலத்தாம்பிரக்குன்றம்வாரிசநதமிழ்சுருதி
மூலத்தாம்பிரமன்பெருந்தவக்குறுமுனிவன். ௬

போதனால்விதியாப்பெரும்புடார்ச்சுனபுரத்து
வேதநாயகர்விண்டுவாயிருத்தலான்மேவ
நாதனார்திரிகூடமால்வரையொடுநேரும்பார்
மாதரான்மூலையிரண்டெனத்திரண்டதுமலையம். ௭

நடக்கும்யாவரும்வடதிசைக்குழுமலான்ஞால
முடக்குநீக்கிடத்தென்றிசைத்தோன்றியமுனிவன்
குடக்குநோக்கியமதியணிவார்திரிகூடம்
வடக்குநோக்கிமெய்த்தவம்புரிதமிழ்மலைமலையம்.

இந்தமால்வரைச்சாரலின்சிறுகுடியிருக்கும்
விந்தைவார்சிலைவீரனும்வேடுவன்றனக்கு
மைந்தனும்வலனென்பவன்கொலைத்தொழில்வலியாற்
சந்தனுடவிச்சற்பமாமெனத்தலையெடுத்தான்.

வேறு.

செருப்புங்கானமூநதேய்த்ததிண்காலினுன்
பொருப்பினேங்கிவளர்ந்தபுயத்தினு
னெருப்பினீர்பெய்திறத்தினன்செங்கடாய்
மருப்புமானமுறுக்கும்வன்மீசையான், ௰

மையனுங்கொடும்பாவமும்வஞ்சமும்
பொய்யுமோருருக்கொண்டனபுன்மையான்
வெய்யதூணைத்தரந்தகன்மேனியும்
மையுங்காலுமொய்த்தன்னகவடியான். ௰௧

முயலுமான்களுமுரிக்கலைகளுங்
கயலுஞ்சேல்களுங்கானமுஞ்சேனமுங்
குயிலும்வீட்டுங்கொலைத்தொழிலைக்கடை
பயிலுங்காலத்தின்முன்பயில்பான்மையான் ௰௨

தோயும்வாடையெடுத்துச்சுவடுபோய்
நாயுநாணநடக்குந்தடத்தினன்
காயுஞ்சிந்தைக்குளிரிக்கள்ளத்தான்
பாயும்போர்க்குப்பதுங்கும்புலியனான். ௰௩

கோபமின்றிச்சிக்குங்கொடுங்கணன்
றீபமென்னவெரிசிகைப்பங்கியான
ரூபமாகியெழுமுயிர்த்துண்டத்தான்
பாவமன்றிப்பழிக்குப்பயப்படான். ௰௪

உடலையேவளர்த்தூனுண்டுபல்லுயிர்ச்
சுடலையேயெனத்தோன்றுமுதரத்தா
னடலையேயெனுநஞ்சுறைநெஞ்சினன்
முடலையெயறியாமுழுமுண்டத்தான். ௰௫

மாலுறதென்றலுஞ்சேர்மலையாசலங்
கோலுநீள்வரைகொல்லிமயேந்திர
மேலும்போகிவிலங்கொடுபுள்ளெலாங்
காலந்தோறுங்கருவறுத்தானரோ. ௰௬

அங்கண்வேட்டமெய்தாதயல்சூழ்வரை
யெங்கும்வேட்டம்புகுவதற்கெண்ணியே
மங்குல்வேட்டமலையத்துளார்க்கெலாந்
தங்குவேட்டமெனப்பறைசாற்றினான். ௰௭

வெள்ளிவாரத்தில்வேலனைமுன்புகூஉய்த்
தெள்ளிதாம்வரைத்தெய்வதம்போற்றுபு
துள்ளியாடித்தொழுதுவணங்கெழுந்
தள்ளியீர்த்தனைவனமாதியா. ௰௮

முதுபுனத்தினையுமுளைத்தோரையு
மதுவுங்கந்தமுமற்றவுங்கொண்டவன்
கதுமெனச்சுனைமூழ்கிக்கடிகமழ்
புதுமலர்ப்பெய்துபொங்கவிதூவியே. ௰௯

பரவியேத்திப்பலிவைத்தசேடமும்
வரவிசேடமுஞ்சொல்லிவழங்கலும்
விரவுநல்லநிமித்தெனவேடர்கோன்
சுரவுதாங்கியொடுதொடுதோலிட்டான். ௨௰

அம்மலைக்குரியானவனாதலால்
வெம்மலைப்புறவேடுவர்யாவருஞ்
செம்மலைப்புடைசூழ்ந்துசெருமினார்
கைம்மலைக்குலங்கார்மலைசூழ்தல்போல். ௨௧

ஆங்குநின்றவர்க்காதிமுதியவன்
வீங்குபல்துரலாந்தைவிளித்தனுந்
தீங்குகாட்டியசேதமென்றான்மறுத்
தோங்குமாக்கமென்றான்மற்றொருவனே. ௨௨

வேறு.

பரிசையுடைவரியதழாற்பரியபுலிப்போத்தானா
னரவுரிகண்முதலசக்கியடற்கூளியெனநின்றான்
சுரிகையெனும்படைதுளக்கியிடமெனத்தோன்றினான்
கரடியுரிக்கஞ்சுகத்தாற்கார்மேகமெனப்பொலிந்தான். ௨௩

வளைதடியர்வளைகோட்டுப்பகடுபோன்மருங்கேற
முளைதடியர்முரிமருப்பிரலைபோன்முன்னடப்ப
கொளையுடுத்தகொடுமரத்தர்வரையாட்டின்குலமேய்ப்பத்
திளைதிளைத்துநடுவொருமோர்சிங்கமெனத்தோன்றினான். ௨௪

ஆளெழுந்ததிரண்முழக்கமலைசுருட்டுங்கடலேய்ப்ப
வாளெழுந்தவயப்படைகண்மகரமச்சநிரைமானத்
தூளெழுந்தபடலம்போய்ச்சுடர்மறைப்பப்படரிருளால்
வேளெழுந்துதன்கரியாமெனத்திகைப்பவெளிக்கொண்டான். ௨௫

வேறு.

தளிரிலையுமோலைகளும்பாளைகளுந்தானையராய்க்
கிளைகிளைவல்லையந்தரித்துத்தருக்குலம்போற்கிட்டினா
ரிளையர்காளையராயவிறலுளரும்வனசரரும்
பளையர்களுஞ்சூனர்களும்பறம்பருங்கிராதருமே. ௨௬

வேறு.

கொடிபிடிப்பக்குழல்கொம்புதொண்டகத்
துடிமுழக்கத்துவைத்தெழுஞாளிகள்
செடிகள்சுற்றுபுவாடைதெரித்தெழத்
தடமெடுத்துவலைஞர்பின்சாரவே. ௨௭

சென்றுகாணுஞ்சிலம்பும்பதுக்கையுந்
துன்றுசாரலுஞ்சூரலங்கானமுங்
குன்றும்யாறுங்குவடும்வனாகமு
நின்றுமோப்புநீடினர்தேடினார். ௨௮

காடுமுற்றக்கலைத்தெழுவார்சிலர்
மாடுசுற்றி வலையெறிவார்சில
ருடுபற்றியொடியெறிவார்சிலர்
கோடுபற்றிக்குமுறிநிற்பார்சிலர். ௨௯

வேடுபாய்வருமுவையைவேழத்தின்.
கோடுசாய்தரக்குத்துவர்மேல்வரை
யாடுபாய்வரறைபாய்வர்சூகர
மோடுபாய்வர்முயன்மறித்தோடுவார். ௩௰

அழுங்குகிரியணில்சவுதாரிபுள்
ளொழுங்குகாடையுடும்புபுல்வாய்கலை
யெழும்புநாய்கலைத்தேறியதிச்செல்லாங்
கழுந்துபோல்பவர்கைசெயுஞ்சூழல்வாய். ௩௧

நீலமொன்றியகுன்றினைநீள்சரற்
காலமேகம்வளைந்தெனக்கானராத்
தூலமொன்றியமெய்யெங்குஞ்சுற்றலா
லோலமென்றதோர்மும்மதயானகலே. ௩௨

தந்திகூப்பிடச்சக்கரத்தானென
வந்தெதிர்ந்தவன்வென்றிவலனென்பான்
முந்துதாவிமுன்னேகினர்யானையு
மந்தமாசுணமள்ளிவிழுங்குமால். ௩௩

கட்டுநாகங்கரமெனநேமியாத்
தொட்டவாளியிறுற்றெறுலைத்தானையை
விட்டமாலின்விடுத்தனன்மீனவ
னிட்டகார்தலைவிட்டதுமெனவே. ௩௪

வல்லைபாந்தளின்விட்டபின்வாரணஞ்
செல்லும்வேடனைச்சீறித்துரந்ததால்
வெல்லும்வல்விடமீட்டசகாயனைக்
கொல்லவேகுங்கொலைவரிவெய்கைபோல். ௩௫

ஆனைதாக்கலுமாங்கெதிர்ந்தான்வல
னேனைவேடரிரிந்தனரோடினார்
தானைவேந்தைச்சமரில்விட்டோடிநுஞ்
சேனையேயன்றித்தெவ்வரும்வேண்டுமோ, ௩௬

சோனையொத்தகடுசரமாரியால்
வேனில்விட்டெனவேழம்விட்டேகலும்
வானிறைத்துவெறித்ததுமானவே
தாசெருத்தனுஞ்சாபமுமாய்நின்றான். ௩௭

சேணில்வேடனைத்தேடலுங்காண்கிலா
னூணிலாமலொருபகல்வெம்பினன்
வீணிலொரும்விலங்குபுட்காண்டலும்
பாணமொன்றிலன்பற்கறித்தேகின்றான். ௩௮

கானமெங்குமுழுந்தொருகார்முயல்
கூனவிற்குணிலாகக்கொலைசெய்தான்
வானவேடுவன்வன்பசிக்குண்ணவே
யூனைவாட்டவுறுகனற்காண்கிலான். ௩௯

கொம்புதேடிக்கடைந்துகொடுங்கனல்
வெம்பவீழ்த்தலும்வெண்ணைபடர்முனம்
பம்புதாளிபுடைத்தெனப்பாய்ந்தொரு
சம்புவூனைக்கவர்ந்ததுதாயதே. ௪௰

சம்புவோடித்தசைதனைக்கவ்விய
சம்புநீண்மரக்காவுந்தனிவனாச்
சம்புவோடையுஞ்சாரலுந்தாவிப்போய்ச்
சம்புவாழ்த்திரிகூடத்தைச்சார்ந்ததால். ௪௧

ஓடவோடிப்பவக்கடனீந்தவோ
ரோடமேறுதல்போலுயர்மேற்கதி
கூடவோர்வழிக்கூடுதலாய்த்திரி
கூடமால்வரைச்சாரலிற்கூடினான். ௪௨

வேறு.

அனையவூனைவேறமைத்தபின்வினைபிரித்தகன்று
தனையும்வேறுறப்பிரித்தவனுமனத்தனித்தான்
வினைபிரித்தபின்சம்புவைத்தொடருமெய்யனைப்போற்
றனைவிலூன்கவர்ந்தேகியசம்புவைத்தொடர்ந்தான். ௪௩

ஊனைநோக்கலுறுபசிநோக்கலனுடலின்
சோர்வுநோக்கலனடித்தமுட்கடித்தசூழரவம்
பார்வைநோக்கலனிகலன்மேற்பார்த்தகண்பதியான்
பூர்வநாடியுண்ணோக்குமோர்யோகியேபோன்றான். ௪௪

வரியுடற்பொறிமாசுணம்வாய்ப்படுமதம்பாய்
கரியைமீட்டவனைகைப்படைதொலைந்தகாலத்து
நரியின்வாய்த்தசைமீட்கவும்வலியின்றிகலிவான்
பரியகூகையைவெல்லுமேகாகமும்பகலில். ௪௫

நிவந்தகானெல்லாநேடியுமோடியுந்தவித்துங்
கவர்ந்தவூனைவாய்விடுக்கிலதோரியுங்கரக்கால்
சிவந்துமெய்யெல்லாங்கருகியும்வேடனுந்திரும்பா
னுவந்தவன்பொருட்டுயிரையுமதித்திடாருலகோர். ௪௬

அடர்வனெட்டிவன்வாடுவேனுநேயன் றடிப்பன்
படபடத்துடல்சோருவன்பொறியெழப்பார்ப்பன்
குட்டர்கொதிப்பதும்பார்க்கலனிகலன்மேற்கொதிப்பான்
மிடல்குறித்தபினறமதிடர்பார்ப்பரோவீரர். ௪௭

முன்புதெவ்வர்தந்திறைபின்மேற்றிறைகொளுமுனிவன்
பின்புதாளைவிட்டேளைவிட்டோரிபினபெயர்வா
னின்பமெய்தானின்பமேலின்பமாமெவர்க்குந்
துன்பமெய்தாட்டின்பமேற்றுன்பமேதட்டும். ௪௮

விரைவிற்கும்புலைத்தொடர்தலால்வியன்றிரிகூட
வரையைக்கண்டனன்வரைபொருகடல்வடவருவித்
திரையைக்கண்டனன்சித்திரநதிப்பெருந்தீர்த்தக்
கரையைக்கண்டனன்பிறவியங்கடற்கரைகாண்பான். ௪௯

இருவலம்புரிகதனவனம்புகுந்திமையோர்
தருவலம்புரிசண்பகத்தண்டலைதாவித்
திருவலம்புரித்திரளொடுசித்திரநதிசூழ்
வருவலம்புரிமறுகுசூழ்ந்தனன்வினைமறுக. ௫௰

கிளருமுத்தலையருவிபாய்முத்தலைக்கிரியின
வளருமுக்கணூரமுதுறைகோயில்சூழ்வரலா
லுளரும்வெம்பசியொழிந்ததுபகைமையுமொழிந்தான்
றளரும்வெவ்வினைதணந்தபோலிகலனைத்தணந்தான். ௫௧

தணந்துதத்தமதிடங்குலாய்முடிவின்மாதவரும்
வணங்கமானமேற்கயிலையிலேகினவ்வேட
னணங்குபாகர்மெய்யருளினாற்சிவகணமானு
னிணங்குசம்புவுக்கிங்கிரனெனப்பொலிந்ததுவே. ௫௨

தலைவர்சங்கமாமறுகினைவலம்வருதவத்தாற்
சிலைவல்வேடனுஞ்சம்புவுஞ்சிவகதிசேர்ந்த
நிலைமைகூறினன்சூதன்மாதவர்களுமேனிகழ்த்து
முலைவில்யானைசெய்பூசையையாசையாலுரைப்பாம். ௫௩

௰எ-வது வேடன் வலம்வந்த சருக்க முற்றிற்று.

ஆகத் திருவிருத்தம்—௬௰௫.

---

## ௰௮ வது-யானைபூசித்தசருக்கம்.

முந்து ⁰ மெண்வகைப்பத்திநித்தியமுதன்மூன்று
மைந்துசுத்தியாலாகமவிதியினலானை
மந்திரத்தினல்வருபுனல்போதமற்றவையாற்
புந்திவைத்துமுக்குறியினிற்புரிவதுபூசை. ௧

அந்தமெய்ந்நெறியறிகலாவடுகொலைவேழ
மிந்துவார்சடைநன்னகரிறைவனையோர்நாள்
வந்துபூசனைபுரிந்துநற்கதிபெறுமகிமை
சிந்தையன்பினுற்கேட்பவருயர்கதிசேர்வார். ௨

அருமைப்பேடைகண்களிப்புறக்களிமயிலகவும்
பெருமைக்காரொலும்பருவமுங்குருகிளம்பெடைக்
கொருமைச்சேவலினூடலுக்கூடல்கூர்குளிரும்
பருமைக்கூரலினிடைவிடாதன்றில்சேர்பனியும். ௩

பாங்குதண்கயப்பங்கயத்தலர்முகம்வாட்டுந
தாங்குபின்பனிக்காலமும்வண்டுதாலாட்டத்
தூங்குசிரிளவேனிலுந்துலைநடச்சுடரோன்
வீங்குவெய்யில்வாள்விதிர்த்தெழுந்ததுமுதுவேனில். ௪

பாருமண்டமும்படர்கதிர்தேறுதலாற்பரவை
நீரும்வெம்மருநீரினைவேட்டுநின்றங்கு
மூருலாவுதண்மதியுமோர்மதியைவேட்டுருகுங்
காருங்காரினைவேட்டுடல்விளர்க்குமோர்காலம். ௫

துன்னுதெண்டிரைப்புல்வுநீர்சுலவியுநிலமேல்
வெள்ளிவீழ்மனக்கார்துளியாமையால்வெதும்பிக்
கள்ளிபாலறப்பொரிந்ததுகரிந்ததாவரையும்
வள்ளியோர்கொடைமறாநிடிற்கயவரோவளர்பபார். ௬

வருந்துகானிடைவானிடைச்சுழல்வனபருந்து
பருந்தினிழலிலொதுங்குவகிரிபணைப்பாந்தள்
கரிந்தபாநதளின்படநிழலொளிப்பனக்ருப்பை
பொரிந்தகானெரிதளிரொனப்புகுவனபுனமான். ௭

மத்தியானமொத்திரவினும்வெதுப்பும்வன்கோடை
மத்தியானபல்லுயிர்களைவிடுக்குமோமதம்பா

---

⁰ எண்வகைப்பத்தியாவன சிவபூசையின்மகிழ்தல்,சிவபத்தர்பூசைசெய்தல்,சிவார்ச்சனையியற்றல், சிவபணிவிடைபுரிதல், சிவசரிதைகேட்டானந்தபாஷபம் பொழிதல், அதனுற்புளகாங்கிதமுறுதல், அதனைப்பல்காற்சிந்தித்தல், திருப்பணிப்பொருளையபகரியா மையென்பனவாம்.

வத்தியாயருக்தோலதாய்த்தூங்கலாமசல
மத்தியாயருகதோலதாய்த்தூங்கலானதுவே. அ

இன்னகாலையிற்பன்னருமிளைபெருதிரங்கிப்
பன்னகாதிகள்போற்பலருசனம்பழகித்
தன்னுநீரொளவானலைகானலைத்தொடர்ந்து
தன்னமாமெனச்சுழன்றதோர்மும்மதச்சயிலம். ௯

கடவுதிக்கெலாங்கனல்வதுபுனலெனக்காட்டித்
தொடர்தாரத்தரவகன்றுபோயத்தொலைதருங்கானல்
வடவரைச்சிலைவரதனைப்பொருளெனமருவா
துடலும்பொய்யினைமெய்யெனுஞ்சமையமொத்ததுவே. ௰

பருகுநீரின்றிபுனலின்றிக்குஞ்சரம்பசியா
தருகுதாகத்தாலுலக்குமுன்னூழிராட்புரந்த
தருமம்போலவந்தடுத்ததுசண்பகத்தடங்காக்
கருதுமெய்யின்முன்பொய்யெனமறைந்ததுகானல். ௰௧

பற்பவாவியுநதிகளும்வறந்துபாருலகிற்
பற்பலகாவெலாமுலர்ந்தகாலமுங்குளிரயிராய்க்
கற்பகாடவிநிகர்த்ததுசெண்பகாடவியே
கற்பகாலமுந்தானழியாதலைமகாட்டி. ௰௨

கானவாரணம்பேடைசேர்பதுக்கையுங்கமஞ்சூற்
கூனவாரணவாவியுங்குளிர்மரக்காவு
மொனவாரணங்கார்பயின்முத்தலைப்பொருப்புந்
தானவாரணங்கண்டதோரதிசயந்தழைப்ப. ௰௩

அடுத்திடச்சுடுங்கடுவெயிற்கானம்விட்டகன்று
மடுத்தடங்குளிர்செண்பகப்பொதும்பரில்வரலுந்
தொடுத்தருக்குமமெய்துபுநலமாஞ்சமையை
விடுத்தவாவிபோலயர்வுயிர்த்ததுமதவேழம். ௰௪

முன்னெலாம்பசிக்குலைந்ததோர்மும்மதவோங்கல்
பன்னெடுங்கவிப்பாணனார்பாணியைப்பரிவாற்
சென்னிவைத்தவர்திருமுகங்கொடுத்தொருசேரன்
பொன்னின்மாளிகைபுகுந்தெனப்பொழில்புகுந்ததுவே. ௰௫

வாழையிற்குலைமறகரித்தலையெனத்திருகிக்
கூழைமுக்கிமாங்கனியுண்டுகொழுநிதிக்குவைசேர்
பேழையைத்திறந்தெனப்பணைவிற்சுளைபிதிர்த்துத்
தாழைமுப்புடைநறுங்கனிச்சாறுடுக்தாக்கி. ௰௬

ஆகமான்மதமுவட்டெறுகர்ந்ததாள்சலச்
தாகமானதுகொடியரதபித்தனுநதவத்தோர்

போகமேதரும்யோகமேநிகர்த்ததுபொருப்பின்
மாகமாநிவருதல்போல்வரும்வடவருவி- ௰௭

தூபம்போன்முகில்படர்வரைச்சுடர்மணிகொழித்துத்
தீபம்போலொளிரருவிகாண்டலுந்தழைசேவிமாத்
தாபம்போய்த்துயர்தவிர்ந்துபடிந்தமெய்த்தவத்தோர்
பாவம்போய்விடப்பவத்துயர்பதிபடும்படிபோல். ௰௮

அப்பெலாநுகராவலாற்கரத்துமொண்டருந்தி
வெப்பெலாமறக்குளித்துமெய்ப்புறமெலாம்வீசி
வைப்பெலாம்புகவலையமிட்டிறைத்துமதமா
வொப்பில்கோளராமதியையுண்டுமிழ்வதுகடுப்ப. ௰௯

இருமைநாகமேலிந்திரன்வயிரவாளெடுப்ப
வொருமைநாகமேயெனப்புனல்படிந்தயர்வுயிர்த்துப்
பருமைநாகநீள்பணைக்கைமேலெடுத்துப்படர்கோட்
கருமைநாகமென்றிருமதியொருமதிகலங்க. ௨௰

கத்தமோர்மருப்பிருபிறைமும்மதநால்வாய்ச்
சித்தமைந்துடைச்சிந்துரமெடுத்தெடுத்தேந்தி
முத்தவாரிமொண்டெறியுநீர்நிகர்த்ததான்முழங்குஞ்
சத்தமாமுகிலெண்டிசைப்பொழியுநீர்த்தாரை. ௨௧

சுந்தரத்தெழிற்கறையடிக்கவுண்மதக்கலுழிச்
சிந்துரப்பெருஞ்சிந்துரமெடுத்தெடுத்தெறியச்
சுந்தரத்தன்றுடல்வழிச்சொரியுநீர்த்தாரை
மந்தரத்தடவரையில்வீழருவியைமானும். ௨௨

மூரிவாரணமுதுபணைக்கரத்துமொண்டெறியும்
வாரிநீர்தொறும்வரையின்மாமணிகிடந்திமைப்ப
நாரிபாகர்மெய்யன்பராகமிநந்தியடிக
ணீரின்மேல்விடுகிலைசுடர்விளக்கினைநிகர்க்கும். ௨௩

அங்கலாமெனத்துறையில்வீழ்வாரணத்துயர்நீத்
தோங்கலாமெனமுதர்த்தெழுந்தது கிழவுருவாயத்
தேங்கலாரநீர்த்தடம்படிந்தில்லைவேட்கோவர்
நீங்கலாதபேரிளமைபெற்றெழுந்ததுநிகர்க்கும். ௨௪

குளிர்தடம்புனலருவிதோய்ந்தகன்றகைக்குன்று
மளியதண்டலைவண்டலைத்துருத்ததாதாடித்
தளிர்பரித்துபைம்போதுதூஉய்த்தழைபலவிந்ததி
களிர்தடஞ்சினைக்கனிகளுங்கனியுகுத்துவே. ௨௫

துறம்பலாபலமதிகளாமதக்கயஞ்சொரிநீர்
கறம்பலாதிபூத்தனிரொலாகன்னதித்துறைவா

புழும்பலாயிரவண்டகோடிகளுயிர்க்குயிராய்க்
குழும்பலாவுறைகுழகர்பானிறைந்தனகுழுமி. ௨௬

நிமிலவாரணமுமிழுநீர்திண்ணனம்பரனுக்
குமிழுநீரதாய்த்தழையெலாமவன்சிலையுதுக்கும்
கமழும்பூவதாய்ச்சிதறிடுங்கனியவன்கனிவா
யமிழ்தமாகமென்றளித்திடுமவிகள்போன்றனவே. ௨௭

கருதமுற்பவச்சுனிர்தமோசெண்பகாடவிசேர்
தருமமோவடவருவிநீர்படிந்தமெய்த்தவமோ
பருமைமேவழமுய்த்தனவெலாம்பழமறைப்பலவி
னருமைநாயகர்க்கற்புதமாயினவம்மா. ௨௮

பருகிவிட்டெறிபுனலபிடேகமாம்பனைக்கை
யருகுநீர்த்ததுந்தழையுகர்த்ததுமருச்சனையா
மருகினுக்ககாய்கனிநிவேதனங்களாமயன்மா
லிருவர்பத்திசெய்யொருவர்தம்பூசையாமிதுவே. ௨௯

இருசைமச்சனமொழிமொருகையபாலெடுத்துப்
பருகுதண்புனலானுமபச்சிலைபசும்பழ
சருகையானுநன்னகர்பபாமர்நாட்சாத்தி
யொருமைமெய்யதிலார்பெறுதற்கரியதனவுயாக்கேன். ௩௰

வேறு.

கவளக்கார்மதவிழுங்கனிவிடைவைகியநாட்
பவளக்காலுர்தளப்பார்பாண்டிவளநாடனைத்துந்
திவளக்காய்கனிடையெலாந்திரிகூடஞ்சேர்ந்தார்கருத்
துவளக்காய்கொடியவினைதுலைந்ததெனத்துலைந்ததால். ௩௧

அந்நெறிக்கட்சிவபெருமானருள்போலமுகில்சுரந்து
செந்நெறித்தண்டமிழ்நாடெங்கணுமுமாரியும்பொழிந்து
பொன்னுமுத்துநதுறைகொழிப்பவெங்கும்வளம்பொருந்தியதான்
மெனனெறித்தந்தாலளமும்மயதநதாவளமே. ௩௨

திரிகூடப்பெரியபிரான்சிவபணிசெய்மெய்யடியார்
தரிகூடப்பெரும்புவனந்தனில்வாழ்வுதழைத்தோங்கி
யரிகூடவயனறியாவரன்பதமேசேர்வரென
விரிகூடவிரித்துரைக்கும்வேதவாக்கியர்தழைப்ப. ௩௩

நன்புலத்துமதவேழநனிபோகம்பொசித்தவைமே
லன்புலப்பப்பூதலத்திலருபவம்விட்டொழிந்தநாட்
டென்புலத்தான்றூதர்வரச்சிவகணத்தாரெதிரேற்றூர்
புன்புலத்தின்கொலைவிலக்குபுரிதருமம்யாதெனவே. ௩௪

நடுவன்றாதுவர்வினவநம்பர்கணத்தவர்நோக்கிக்
கடுவன்பானுவைச்சிவந்தகனியாகத்தனிதாவு
நெடுவன்சீர்க்குறும்பலவினேசனைப்பூசனைபுரிந்து
கொடுவன்பாதகந்தவிர்ந்தகுஞ்சரங்காணிதுவென்றார். ௩௫

அற்பேறும்பூசனைக்கோவிளையாடலருச்சனைக்கோ
நற்பேறுபெறுவதெனுநமன்படர்க்குச்சிவகணத்தார்
கற்பேறுங்கொடிபாகன்கழல்கண்டோதழைசொரிந்து
முற்பேறுபெற்றுயர்ந்தான்முசுகுந்தனென்னமொழிந்தார். ௩௬

எங்குளாரறிந்தறியாதியற்றுகின்றபூசனைக்குங்
கங்கைவேணியருளேகதிகாட்டுமென்பார்மு
னங்கசாதனமாகவரும்பாவக்கடல்கடத்தும்
வங்கமாய்த்தோன்றியதால்வானிலொருபுட்பகந்தேர். ௩௭

கூற்றினார்விடுத்தகலக்குஞ்சரத்தைப்புட்பகத்தே
றேற்றினாரேறுதலும்[illegible]வனுசேரிரும்பதுபோன்
மாற்றினான்கரியுருவமாதங்கவுருவானான்
போற்றினான்கயிலையிற்போய்ப்போதநாயகனடிக்கீழ். ௩௮

சென்றடியிற்பணிதலுமேதிருவருட்கண்பார்த்தருளி
யன்றுநமைத்திரிகூடத்தருச்சனைநீபுரிந்தமையா
னன்றுகெசகருணனெனநந்திகணத்தினுமுயர்ந்து
முன்றிலிடைக்கிங்கரர்க்குமுதல்வனெனவாழ்கென்றார். ௩௯

மைகொடுக்கும்பழவினைபோய்வளர்பூசைப்பலன்கிடைத்துப்
பொய்கொடுக்கும்விலங்குருவம்புத்தேளாயெவ்வுயிர்க்குங்
கைகொடுக்கும்விடையார்க்குக்கைகொடுக்கும்பணிபூண்டான்
மெய்கொடுக்குந்திரிகூடமகிமையார்விளம்புவார். ௪௰

சிந்தைசெய்யாகரிவேடன்சென்றதேவலமாகத்
தந்திசெய்யும்விளையாட்டேதருபூசைமுறையானு
லிந்திரனுமேத்தரியதிரிகூடத்தெம்மானைப்
புந்தியுடன்வலம்வருவார்பூசிப்பார்பேறெளிதோ. ௪௧

இன்னகரிசெயும்பூசையியம்புதலுநயந்தேத்திப்
பொன்னகமாமலையவனைபோந்தருளெம்பெருமாட்டி
தன்னருமைப்பெருந்தவமுந்திருமணமுஞ்சாற்றுகெனப்
பின்னருமாதவர்வேண்டப்பேசுவானுயர்சூதன். ௪௨

௰௮. வது—யானைபூசித்தசருக்கமுற்றிற்று.

ஆகத் திருவிருத்தம்—௫௱௰௭.

முதலாவதுதானவைபவகாண்டமுற்றுப்பெற்றது.

சிவமயம்

# இரண்டாவது சிவரகசியகாண்டம்

## விநாயகர்துதி

பெருமதத்தினொருகரத்துமாருதமெவ்வுயிர்க்குமுயிர்ப்பிறக்கங்காட்ட
விருகரத்தங்குசபாசம்பரமதத்தினிடைவீழாதெம்பவீரக்
தருகரத்துமருப்புவினைத்துரிசறுப்பமோதகக்கைசைவத்தெய்வ
வொருமதத்தின்சுவைநிறைக்குமும்மதச்செண்பகக்களிற்றையுளத்துள்வைப்பாம்.

## ௧வது-உமைதிருவவதாரச்சருக்கம்.

தேகமாமன்னுயிர்கள்சுவர்க்காதிபோகமுண்டுசேடமுண்ணும்
போகபூமியின்வரம்புதருமமெனும்பயிர்வளர்க்கும்பொழிற்கோர்வேலி
யோகமாதவர்தவத்தின்விளைவுபனிக்காலையமூவுலகுக்காணி
மாகமார்கடவுளரும்வரந்தியுநல்லறமும்வளரத்தாணி. ௧

தாருதித்துமணியுதித்தும்பொன்பூத்தும்புவிமடந்தைதரிக்குமோலி
காருதிக்குந்தொறுமவட்குவாருதிக்குங்களபமுலைகலையாய்ச்சூழ்ந்த
வாரிதிக்குநீருதிக்குநாளுதிக்கும்வரைகடமானவேலி
தேருதிக்குமழற்கதிரைச்சீதமதியாக்குபனிச்சிகரக்குன்றம். ௨

பொன்னிறலயன்கமலப்பொகுட்டாகும்பசுந்தழையாற்பொதுளுஞ்சோலை
துன்னிநாற்றிசைநிரம்பிமால்வளர்பச்சால்போலுந்துலைத்தோய
மன்னலாற்பரமனுறைவடகயிலைவரைநிற்கும்வடிவமூன்று
முன்னினுற்பணிச்சிமையவுயர்வரைமுத்தேவியருமுறமுயாதோ. ௩

வேறு.

அறைகுதிக்கும்வெள்ளருவியையானைமத்தகமேன்
மிறைவருத்தும்வாளரியெனக்கரியினம்வெருவும்
பிறைவளைப்பெருந்துண்டத்துப்பெரும்புயல்வளையைச்
சிறைவிரித்தசிம்புள்ளெனமுழைபுகுஞ்சீயம். ௪

யாவரம்பையர்கண்ணினர்நண்ணினரிவளைத்
தேவரம்பையர்பணிவதுசிறுகுடிச்சிறார்பாற்
காவரம்பையில்கனியளித்திமையவர்கநனர்
தாவரம்பையின்கனிகொளுநனிகொண்மாச்சயிலம். ௫

சமையமந்தரமத்திமதாரம்வீண்டிசைக்கு
மமையமந்தரத்தசுணமாவலமருமடவிச்
சிமையமந்தரத்தவருறைகுலவரைதெரிப்போ
ரிமையமந்தரமென்னலான்முதல்வரையிதுவே. ௬

வேறு.

மேருவார்மந்தரவிடதவெற்புளார்
பாருளார்திசையுளார்பாதலத்துளார்
ஆருளார்கற்பகச்சோலையார்முதல்
யாருளாரவர்தவத்தெய்துமால்வரை. எ

கடும்புலிமுன்முழையிடைக்கலைகள்காதிநீர்த்
தொடர்ங்குமேயரிகளுங்கரியுமோருழைப்
படும்பணிமயிற்சிறையடையும்பாலுவு
நடுங்குறப்பொழிபனிச்சிசிரஞாட்பிறே. அ

அகலிடம்விசும்புதொட்டழன்றுசாய்கதிர்ப்
பகலவன்றேர்ப்பரிபச்சையாயது
முகநிகர்மதிக்கலைமுடங்குபான்மையுஞ்
சிகரவெம்பனிவரைச்சீதத்தாலன்றோ. கூ

தடவரைத்தென்றிசைச்சார்ந்தவெய்யவன்
வடபெருந்திசையினும்வருந்திச்செல்வது
குடமுறுப்னிவரைக்குளிர்பொறுதபோய்
மிடல்வடவனலின்மெய்வெதுப்பவேதொலாம். ய

கற்பகமிசைப்படர்காமவல்லிகள்
வெற்பகமெறிபனித்திவலைவேய்ந்தன
கற்பகக்கொடிச்சியர்நாணிற்கோத்திடும்
பொற்பகிலத்திலக்கோவைபோலுமால். யக

தமையரமடந்தையர்தணப்பவானவ
ரமையனதோள்பிரிந்தலக்கணெய்துவார்
இமையமார்தவத்தினிற்சேர்வராதலா
லிமையவர்துதிசெயுமிமையமால்வரை. யஉ

வேறு.

அந்தமலைக்கரசாறுனுலானசிற்றுதரக்
கந்தமலைமலர்க்குழலாண்மேனைகாவலன்வானோர்
வந்தமலைபுரிகோட்டுமைந்நாகன்றனைமகவாய்த்
தந்தமலைதனைப்பெறுவானெடுங்காலந்தவம்புரிந்தான். யங

அக்கண்ணனொருகன்னியடிசாத்தவருள்புரியு
முக்கண்ணன்முடிசாத்துமறுகண்ணன்முளரியந்தான்
மெய்க்கண்ணன்புறநோக்கிவிரதமுயல்வெற்பனுக்கே
யெக்கண்ணுமெய்தாதவப்பயன்வந்தெய்தியதால். யச

வேறு.

மன்னவன்றவமதோமன்னும்வானமு
முன்னர்செய்கவிர்தமோமுதவெற்போர்சலைப்

பொன்னவாங்கமலமென்பொகுட்டிலீன்றதா
லின்னபேருலகெலாமீன்றசெல்வியை. ௰௫

சேயிழைக்கவுரியைத்தெய்வப்பங்கயக்
கோயிலிற்காட்சிகண்குளிரக்காண்குற
வாயிரநயனமோவனந்தகாட்டமோ
மேயினனற்றைநாளிமையவேந்தனே. ௰௬

அடுத்தனனுவாமதிகண்டவாழிபோ
லெடுத்தனன்பொன்னையீன்றெடுத்தவாரிதி
கடுத்தனன்கயிலையார்வாழ்வைக்கண்ணுற்றிக்
கொடுத்தனன்மேனையாங்கொம்பனாள்கையில். ௰௭

வாங்கினள்செல்வியைவாங்கிவாழ்வுபெற்
றோங்கினள்பால்சுரந்துகள்வார்முலை
வீங்கினள்களித்தனன்மேனைவானெலா
மேங்கினகுரவைகளெழுந்தபல்லியம். ௰௮

வேறு.

இச்சைகூரவெடுத்தனன்மார்பினைத்
துச்சிமோப்பப்பசுநரம்போடியே
கச்சைமீறுகனகவள்ளத்தின்பால்
பச்சைவல்லிபவளத்திற்பார்ந்ததே. ௰௯

புவனகோடியைப்போக்குவரவெனுங்
கவனவூசலிட்டாட்டுங்கவுரியைப்
பவனவானவர்தச்சன்பலித்ததோர்
சுவணமாமணித்தொட்டிலிட்டாட்டினள். ௨௰

சிலம்புதண்டைகள்சில்லரிக்கிண்கிணி
யலம்புகின்றதையன்றடிநோமெனக்
கலம்புலம்புறவோகடுந்தானவர்
தலம்புலம்புறவோதவழ்ந்தாளரோ. ௨௧

இறையளந்தபடியிரண்டாற்சக
முறையளந்தவளர்ப்பவண்முந்துசெய்
யறம்வளர்ந்ததுபோலருண்மாமனைப்
பொறைவளர்ந்ததுபோல்வளர்ந்தாளரோ. ௨௨

வேறு.

வானநாட்டன்னமுமருளமால்வரைக்
கானமாப்பிடிகளுங்கண்கொளுறத்

தானமுந்தருமமுந்தவமுஞ்சைவமு
ஞானமுநடைபெறநடைகற்றுளரோ. ௨௩

ஆற்றியபுவனங்களைத்தையும்பேரண்ட
முற்றினுஞ்சிற்றிலாமுறையிலாடுவா
ளொற்றினுமமைவதோரிலையபுகாட்டவோ
சிற்றிலுமாடினுள்சிமையமுன்றில்வாய். ௨௪

பாவையுங்கழங்குபொற்பந்துங்கிள்ளையும்
பூவையும்பயிற்றுதல்புந்திசெய்கலாள்
யாவையும்படைத்தளித்தழிக்குஞ்செய்கைதன்
றேவையும்பயிற்றுதல்சிந்தையுன்னியே. ௨௫

வேறு.

பேதையார்பருவந்தன்னிற்பேருலகுடையார்கொன்றைக்
கோதையார்சடிலஞானக்கொழுந்தையார்வத்தரன்மேவ
மேதையார்விரதம்பூண்டுமேனையார்க்குணர்த்தமேனை
தாதையாரலங்கன்மோலித்தந்தையார்க்குணர்த்தினளே. ௨௬

அழகினதுறையுள்போல்வாயருந்தவங்கூடுமோவின்
மழலையம்பருவத்தென்றுவழங்கினனிமவான்முக்கட்
குழகனைநினைவார்க்கென்றுநினைத்தவைகூடுமென்றுள்
பழமறைக்கிழவிரோற்பப்பசும்பொன்னூற்சாலைசெய்தான். ௨௭

திலகமாமலைக்குவேந்தன்றிருமகளொருபெண்வாலை
மலர்கொய்யாள்சுனைபந்தாடாள்வல்லியர்குழுவிற்கூடாள்
குலமெலாமிறும்பூதெய்தக்கொழுந்தவத்தனிமைபூண்டா
ளுலகெலாம்பரவுமுக்கணொருவனைத்தனிமைநீக்க. ௨௮

சங்கநீர்படியுந்தோறுந்தவளமெய்வாணிபோல்வாள்
பங்கயாசனத்தின்மேவிற்பதுமையைநிகர்வாள்சூலச்
செங்கையார்தம்மைநீங்காச்சிந்தையாற்கவுரியாவாள்
மங்கைமெய்த்தவஞ்சேர்சிந்தைவயிரத்தால்வஜ்ரப்பெண்ணாவாள். ௨௯

அலைபுனற்றடஞ்சேர்ந்தன்னமாகுவாள்கூலமேவி
மலைமிசைப்பிடியைநேர்வாள்வனத்திடைநிற்குங்காலை
நிலைமலர்க்கொம்புபோல்வாணிட்டையிலிருந்தாலம்பொற்
சிலையினைநிகர்வாளன்றிச்சித்திரம்போல்வாளன்றே. ௩௰

வேறு.

புலன்களைந்தையும்பொருத்திகாற்கரணமேற்புகட்டி
யலங்குகாற்கரணங்களையுள்ளமூடமைத்துப்
பலன்செய்யுள்ளத்துஞானமாம்விழியினைப்பதித்தாள்
இலங்குசோதியைநோக்கிமேற்கண்மூடித்திருந்தாள். ௩௧

மேனையாரும்வெற்பரசனும்வியப்பவின்னவரோ
டேனையார்தொழவெம்பிரான்றிருவுளமேற்ப
மோனையார்வமேகொளுகொம்பாமுததவப்பயிரை
வானையோங்குறவளர்த்தனள்பனிமலைவல்லி. ௧௨

வேறு.

உண்ணிலாவியபேரன்பானுளமெலாநிரம்பிஞானக்
கண்ணிலானந்தவெள்ளக்கடல்பரந்திமையமீன்ற
பெண்ணிலாரமுதார்செய்யும்பெருந்தவப்பெருக்கமேறித்
தெண்ணிலாமதியம்வேய்ந்தார்திருவுளநிறைந்ததன்றே. ௧௩

உடையநாயகியார்செய்யுமுயர்தவப்பரிவுகாண்பான்
சடையினின்மதியஞ்சூடித்தடங்கையினமழுமானேந்தும்
விடைஞர்கயிலையாதிவெற்பினர்பொற்பினூழிப்
படையினர்முதலோர்சூழப்பனிவரைச்சாரல்சார்ந்தார். ௧௪

வந்தவானவரையெல்லாம்வரைப்புறநிறுவித்தாமோ
ரந்தணமுதியோராகியணிந்தமாமதிபோற்கூனுஞ்
சந்தமாநரையுந்தோன்றத்தவப்பொறைசுமந்தமேனிப்
பைந்தளிர்வாடநின்றாள்பணிதவச்சாலைசார்ந்தார். ௧௫

சென்றபினெழுந்துதாழ்ந்துசிவமறையவரைப்போற்றி
யன்றவர்க்கியையநன்கிருசனத்திருத்திக்கீழ்ப்போய்
நின்றனளிமையப்பாவைநேரிழைவதனநோக்கி
மன்றலங்கோதாய்மேனிவருந்தியதென்னேயென்றார். ௧௬

தோழியர்பரவித்துயவுணவொடுதயிலுநீக்கி
வாழியங்கயிலைமேயவரதனைமழுவலானை
யூழியுமுலகுநீத்தவொருவனைக்கருத்திலுன்னி
யாழியினமுதமன்னாளருந்தவமுயன்றாளென்றார். ௧௭

பிடியனநடையும்வாலப்பிறையனநுதலும்வாய்ந்த
தொடியனவிடையாய்மேனிகுழைந்தபூங்கொம்புபோல்வாய்
வடிவமுமழகுநதேம்பவண்ணமும்வருந்தநோற்றல்
கடிஞையிலையமேற்றுக்கடுநுகர்ந்தார்க்கோவென்றார். ௧௮

வியன்மறைத்தலைவர்கூறமெல்லியன்மொழிதலாற்றாள்
சயிலமானருளான்மற்றோர்தலைமையாம்பாங்கிநோக்கி
யயன்முதலமரர்வீறுடற்பலிகொண்டாரண்ட
ருயிர்நிலைநிறுத்தவன்றேவுண்டனர்விடத்தையென்றாள். ௧௯

அலைபொருதடங்கட்பேதாயருமணம்புரிந்தாலம்பொன்
பிலைதருநகர்காடின்றிவெற்பிலோபுகுவாளென்றார்
கலைதெரிமறைநூல்வல்லீர்கல்வியின்பெருமையீதோ
மலைமகளாகத்தோன்றியிகழ்வதோமலையையென்றாள். ௨௰

இப்படியனேககாலமிமையவர்தவஞ்செய்தார்
மைப்படிவிழியாயீசன்வநிலைவருமோவென்று
ரப்படியிரங்காரல்லரடியவர்க்கெளியார்சித்த
மொப்பிலாதொழிநதாரோனுமொழிகலமுயிரோடென்றாள். ௪௧

மறைவலீர்போநதவாறுவழங்கிரீர்போமினென்ன
வறைதலுமமலர்நோக்கியணங்கியாம்போந்தவாறு
பிறைநுதறகருங்கட்செவ்வாய்ப்பெய்வளைத்தையலாளை
நறைமலர்மாலைசூட்டி நன்மணம்புரிதற்கென்றார் ௪௨

கறையணிகண்டத்தண்ணல்கன்னிதனபொருட்டாற்கொண்ட
மறைவடிவுணராள்சொல்லுமறைமொழியென்பதோரா
ளிறைமகளிதையமாழ்கியிருசெவிபுதைத்துவெட்கி
நறைமலர்வதனங்கோட்டிநாணமுற்றகன்றுபோனாள். ௪௩

மடவரலகன்றகாலைமறநுமோர்விளையாட்டாக
விடம்ணிமிடறுங்கங்கைவேணியுங்கரநதுபோநத
கடவுள்வேதியனார்தாமுங்கரநதனர்தகைத்தாள்வல்லி
யிடம்வலநதேடிக்காணாளிறைவனைநிரங்கலுற்றாள். ௪௪

வேறு.

ஒன்றேபலவேயுலகெல்லாமோங் குருணக்
குன்றேகடலேகொழுங்கருணைப்பேராறே
நன்றேயரிதேடுஞானமலர்த்தாள்சிவப்ப
வின்றேதமியேற்கெழுந்தருளவேண்டிற்றோ. ௪௫

பொன்னேமணியேபொருளேபோருண்மறையின்
முன்னேநடுவேமுடியாமுழுமுதலே
பின்னேயெனத்தோன்றிவிண்ணிலேபோய்மறைந்த
வென்னேதமியேனியற்றும்பிழையேயோ. ௪௬

காராயழகொழுகுநதரத்தாயந்தரத்தா
யாராவமுதேயென்றுணர்ந்தமாகடலே
நீராய்வெளியாய்நெடுங்காலாய்வெங்கனலாய்ப்
பாராயொளியாய்ப்பரநதாய்பரமேட்டி. ௪௭

என்றாள்புகழ்ந்தாளிமையவலைப்பூம்பாவை
நின்றாளயர்நதாணெடுநீலமூந்துகுத்தாள்
சென்றாள்பலதிசையுநதேடியணமருங்காண்
மன்றாடும்பாதர்மழவிடைமேற்றோன்றினார். ௪௮

பனகமணிதிருமார்பும்பவளம்போற்படர்சடையுந்
தினகரோதயவடிவுநதிருநுதலின்மேல்விழியு
மனவரதநடம்புரிவாரவையவாநதமுங்காட்டிக்
கனவரையின்திருமகளார்கண்களிப்பமுன்னின்றார். ௪௯

பூணார்நகிலவளைப்பூம்பாவைநோக்கிருந்து
காணாருமேனிநலிந்தாண்மெலிவகலச்
சேணார்கயிலைச்செழுந்தேனைமாலயனுங்
காணாததெள்ளமுதைக்கண்ணான்முகந்துண்டாள். ௫௩

தாராற்றுங்கொன்றைச்சடையாயெனையுடையா
யாராற்றுவார்நின்னடியாருனைப்பிரிந்து
காராற்றுங்கண்டாகளையேற்றாய்நின்காதற்
பேராற்றில்வீழ்ந்தேன்பிரிவாற்றேன்யானென்றாள். ௫௪

வேறு.

கொந்துத்தாரிமையச்செல்வக்கோதையாள்பயந்தகோதாய்
முந்துநீதவங்கள்செய்தமுறையெலாமுவந்தோநின்னை
வந்துநாம்வதுவைசெய்வாம்வருந்தலென்றயன்மால்சூழ
விந்துநாதாந்தமானார்வெள்ளியங்கிரியிற்போனார். ௫௫

௧-வது உமைதிருவவதாரச்சருக்கமுற்றிற்று.

ஆகத்திருவிருத்தம் ௫௫

## ௨-வது திருமணச்சருக்கம்

தனிவரைச்சாபந்தார்சொற்சாபத்தாரெழுவராய
முனிவரைவரித்துநோக்கிமுகிழ்முலையிமையமாதை
நனிவரைவதுவைசூட்டநயந்தனம்விரைவினீவிர்
பனிவரைவேந்தன்முன்போய்ப்பகருதிர்வருதிரென்றார். ௧

ஆங்கவரிமவான்பக்கலணைதலுமெழுந்துபோற்றித்
தேங்கமழ்மலர்கடூவிச்சிறந்தவாசனத்திருத்திப்
பாங்கெழுவரையைச்சூழும்பரிதிபோல்வலம்வந்தேத்தி
யீங்குமெய்த்தவத்தீரெய்தவெத்தவம்புரிந்தேனென்றான். ௨

பின்னருமவரைநோக்கிப்பிரமனேமுருக்கொண்டன்னீர்
பொன்னகர்கழிப்பியீண்டுப்போந்தவாறென்னேயென்னக்
கன்னிலங்கனியைநின்பாற்கற்பகக்கொழுந்தன்னாளை
நன்னர்பூங்கயிலையார்க்குநல்குதியப்பாலென்றார். ௩

தந்தையாமிமவானிற்பத்தனையன்மைந்நாகன்போந்து
முந்தையார்குலமேதென்னமொழிதலுமுனிவர்நோக்கி
யெந்தையாருலகமெல்லாமீன்றுகாத்தழிப்பர்யார்க்குங்
கொந்தையார்கொன்றைவேய்ந்தார்கொடுத்ததுகுலங்காணென்றார். ௪

மேனையாரதனைக்கேளாவியன்மகட்கொடுத்தார்தம்மைத்
தானையாலறிந்துளார்க்கோசம்பந்தமெனலுமோனர்
தேனையூர்மொழியாய்தத்தந்திகழ்மனத்தீபமேனு
மோனையாய்முதுதங்கோடற்கிசையுமோமொழியாயென்றார்.

தன்பெருமனைக்குஞ்சேய்க்குந்தகவுரைத்தினமையேவந்த
னென்பெருங்குலத்தில்வருதவெழின்மலர்க்கொம்பனுளை
நன்பெருங்கயிலையார்திராதனேவேட்பதானுன்
முன்பெருந்தவமேயென்றுன்முனிவரர்மகிழ்ந்துநோக்கி. ௬

பூனையார்கரந்தைவேணிப்புனிதர்க்கும்பொருப்பனீன்ற
வானைசேர்விழியினுட்குமங்கலத்திநாள்வாரம்
வேளையேயோரையாவும்விதிமுறை யுரைத்துமேலோர்
காளையேமுகூர்த்தமென்னநயந்தனர்நயின்றுபோனுர். ௭

போந்தனர்முனிவர்வெண்பொற்பொருப்புறைசெம்பொற்கோயில்
சேர்ந்தனர்நந்தியுய்ப்பச்சிவபிரான்சன்னிதானஞ்
சார்ந்தனர்நிகழ்ந்தவாறுசாற்றின ரிமவான்செல்வி
மார்தளிர்ச்செங்கைபற்றிமணக்குநாளுளையென்றுர். ௮

பண்ணவருவாப்பநாதர்புகசந்துழாய்முகுந்தன்வேதா
விண்ணவர்தலைவன்மேலையுருத்திரர்முனிவர்சித்த
ரெண்ணருமுலகத்தாருமேந்திழைகுழாத்தோடங்கு
நண்ணுதற்கருளநந்திநம்பிரான்மனனஞ்செய்தான்- ௯

அங்கவரிமையமீன்றவமுதனையாளைநாளைத்
திங்களங்கண்ணிவேய்ந்ததெய்வங்கண்மணுளர்வேட்கு
மங்கலமென்றுதோன்றவகைபெறும்புவனந்தோறும்
பொங்கொலிமுரசமார்ப்பப்பொருக்கெனவெழுந்தார்மன்னே- ௰

வேறு-

பங்கயாசனத்திருவுறைமார்பினன்பங்கயாசனச்செல்வ
னங்கைவாரணத்திந்திரன்பாவகனந்தகனிருதேசன்
பொங்குவார்கடற்கிறைபவனுதிபன்பொருவிடையீசானன்
திங்கண்மாதங்கள்வருடங்கள்வாரங்கடிதிகளுட்கரணங்கள்- ௰௧

அண்டமூலகாலாக்கினியுருத்திரர்பதின்மர்மற்றவர்போல்வார்
கொண்டபூதநாற்கணத்திரளாடகர்குறட்படைக்கூர்மாண்டர்
மண்டொலெழுகோடியர்பிருணிலம் வளர்க்குமட்டகராவார்
தண்டபாதலம்புரக்குமாமணிமுடிக்கணபணத்துரகேசர். ௰௨

அண்டகோளகையுச்சியருருத்திரரைந்துநூற்றுவராவார்
கொண்டல்வண்ணனைவிரிஞ்சனைப்பணிகொள்வார்குரகதமாசாத்தர்
சண்டமால்விடைப்பசுபதியுருத்திரர்தரிக்குமீராஞ்ஞூறுன்
கண்டபேரவித்திரனுருத்திரகணப்பெரும்படைவீரர். ௰௩

நூறுகோடியர்பதிசெருகோடியர்நூற்றுவர்நுதற்கண்ண
ராறுகோடியினிரட்டியர்நடத்துதோரதவரலர்மேலும்
வீறுகோடியினிரட்டியாமருத்துவர்வசுக்களாம்விழுச்செல்வர்
கூறுநாவிருகோடியர்மூன்றனைக்கோடியபெருந்தீர்த்தம். ௰௪

மூலநான்முகனடங்குறவவன்முரிபுருவத்தினிடைத்தோன்று
நீலலோகிதர்முதலினோர்மூவிலைநெடியவேற்கங்காளர்
சூலபாணியர்கேத்திரபாலர்மெய்ச்சவாயினர்திருவாணைக்
கோலமேயவர்பச்சிளங்கஞ்சகக்கொற்றவரிருநால்வர். ௰௫

கருதுபாற்கடலுண்டுதென்னருட்கடல்கண்ணனுக்கருள்செய்தோ
னரியமாமறைவியாதமாமுனிசுகன்றதீசியத்திரியென்பான்
பிருகுரோமசன்கண்ணுவன்பராசரன்பெருந்தவத்துருவாசன்
சாரதநாரதன்கபிலன்மாசத்தியன்சதாநந்தன்பரத்வாசன். ௰௬

சித்தர்மாதவர்தந்திரர்கருடர்கிம்புருடர்கின்னரர்போகர்
வித்தியாதரர்சாலகடங்கடர்நீசிசரர்வேதாளர்
சித்தர்விண்ணவர்மாகசாரியர்தயித்தியர்கடவுளர்யோகர்
சத்தசாரியரட்டமாசித்திகள்சத்தமாமுகில்வேந்தர். ௰௭

அனகனீள்சடையகத்தியன்புலத்தியனங்கிராமார்க்கண்டன்
மனநிலைப்பெருங்காசிபன்கவுதமன்வசிட்டனுமெழுவோர்கள்
சனகனேசனற்குமாரனேசனுதரன்சனந்தனென்பவர்நால்வர்
பனகனீண்முடிப்பதஞ்சலிகால்கையிற்கண்பெறுபுலிப்பாதன். ௰௮

ஒருதினம்பொழுதிரண்டுமுக்காலநான்குயர்மறையைம்பூத
மிருதுவாறுடனெழுபெருநதிக்குலமெண்கிரிநவகண்ட
மருமையெண்டிசையெழுதடம்புவனமாறங்கமைம்புலநான்கு
கரணமுக்குணமிரண்டறமொருபெருங்கதிமதிவிதிமாதோ. ௰௯

சரிதையாதியசதுட்டையமந்திரந்தத்துவம்புவனங்கள்
வருணமேபதங்கள்கலைகள்வன்பதங்களாமத்துவாவகையாறுந்
திருமடந்தைபாரதிபுலோமிசைமுதற்றெய்வமங்கையர்யாரு
மிரதமூர்திகளுகைத்தனர்கயிலையிலெய்தினர்விசும்பாறு. ௨௰

புவனம்வானமும்புதைபடமீமிசைபுடைபரந்தாகாய
கவனரேமுதல்யாவருந்தாழ்ந்தெழீஇக்கயிலைமால்வரைசூழ்ந்தார்.
குவலயந்தொடுத்தண்டகோளகையெலாங்கோத்தெழுமுகவாரி
சிவபிரான்பெருந்திருமலைபணிந்துபோய்வலஞ்செயுஞ்செயன்மான. ௨௧

ஒத்தெழும்பதினான்குபேருலகமுமொருமுகக்கொடுபோந்து
மத்தனைக்கெலாமவரவர்க்கிடங்கொடுத்தன்னலார்கயிலாயம்
பத்திமுத்தமிழ்ப்புலவருக்கருள்சங்கப்பலகையொத்ததுமேனுந்
தத்தியண்டமும்பூண்டதோர்பாரிடத்தலைவனொத்ததுமாதோ. ௨௨

எயில்சிதைத்தவில்லாதலாலெம்பிரான்றிருக்கடையினின்மேருச்
சயிலமிற்றல்போனின்றபொற்கோபுரந்தனைத்தொழுதெழுதேவிப்
பயின்மணப்பெருங்குழுவெலாநிறைதலாற்பரம்பரனுடன்மேவிக்
கயிலைநற்கிரியுலகெலாமீன்றருள்கவுரியுநிகராமால். ௨௩

உவரிமாலயனுருத்திரகணமுதலுயர்ந்தவர்குழுவெல்லாஞ்
சிவபிரான்றிருவாய்தலின்மொய்த்தனர்தேனகுடத்திரளீப்போ
லவர்கள்பூதர்பாலவர்கணாதர்பாலறிவிப்பவவரேகி
மவுனநந்திபாலுணர்த்தலுமாங்கவன்வள்ளலார்க்கறிவித்தான். ௨௪

தருகவீண்டெனவருளலும்வேத்திரத்தனிப்பெரும்படையோச்சி
வருகவென்றவன்மரபினுய்த்திடவந்திறைஞ்சலும்வாக்கா
லருமைநோக்கினுலருட்குறமுறுவலாலவரவர்ககருள்செயதா
னெருவனுமெற்றுலகெலாமாகிநின்றுயிர்க்கெலாமுயிராவான். ௨௫

எம்பிரானிடத்திவ்வணநிகழ்தலுமிமையமால்வரைவேந்தன்
கொம்பனுண்மணவோலையுய்த்தலுங்குலவரைக்கிறையவர்யாரு
மம்புராசிகட்கதிபர்தங்கணங்களுமருண்முனிக்கணம்யாவும்
பம்புமால்வரைத்தெய்வதக்குழாங்களும்பரவைபோற்பரந்தன்றே. ௨௬

கமலைபூமகள்பாரதிவயிணவிகாடுகொள்பிரமாணி
குமரிவீரிமக்தாகினியோகினிகொற்றவையயிராணி
யமலமேனகையுருப்பசிதிலோத்தமையரம்பையர்குழுவெல்லா
முமையைவந்தடிதொழுதெழீஇதிங்கள்சூழுடுக்குலமெனச்சூழ்ந்தார். ௨௭

நகரமாடங்கள்கூடங்கள்கோயில்கண்ஞாயில்கள்செய்குனறஞ்
சிகரகோபுரமாளிகைசூளிகைதெற்றிசித்திரகூட
மகரதோரணங்காவணம்பூவணமன்றநாடகசாலை
யகரமாயிரகோடிகள்வகுத்தனனமரர்கம்மியன்மேலும் ௨௮

மேடைமேனிலையுபரிகைவேதிகைவிரவுசாளரங்கோடி
மாடைமாமதிமணியினுலரமியமலரினுன்மணப்பந்த
ரடைநீள்கொடிபடங்குசாமரைகுடையணிகொள்பூரணகும்ப
மோடைமாகரியாளிகண்மீளிகளுருக்கள்பற்பலகோடி. ௨௯

இரசதத்தபூதம்வயிடூரியத்தெழிலரம்பைகளுட்டி
மரகதத்தினுற்பாசடைகாய்க்குலைவகுத்துநற்பசும்பொன்னூல்
விரவுமென்பழுக்காய்பழுத்தாறுவெண்ணித்திலவிரிபாளை
புருடராகத்தாற்பவளமாமணியினுற்பூங்கொத்துமமைவித்தான். ௩௰

மண்டபங்களுமாளிகைப்புறங்களுமாடகூடமும்வான்மேற்
கொண்டகேரபுரங்காகளும்வரைகள்போற்குழுமலாற்பனிக்குன்றம்
பண்டையாதியம்பரனைவேட்டவனுறைபனைதிருவிளையாட்டா
லண்டம்யாவையுமெடுத்தெடுத்தடுக்கியசிற்றில்போன்றதுமர்தோ- ௩௧

தெருக்கள்பற்பலவமைத்தனபுவனமாத்திரள்வகுத்தனபோது
முருக்கள்பற்பலவகுத்தனவுயிரெலாமொருங்குநித்தனமாலும்
பொருப்பினிற்றிலைவகுத்தவான்கம்மியன்பூவின்மேலயன்போன்று
னருத்தவீதியினணியினுக்கணிசெய்வாராயன்கொடித்திரள்போன்றர்- ௩௨

வல்லிதோரணந்தழைதொடுத்தியற்றுவார்மாத்தழைவனமாக
முல்லைமல்லிகைசண்பகநாற்றுவார்மொய்ம்மலர்ப்பொழிலெய்ப்ப
வெல்லிமொய்த்தெழுகொடிபலநிரப்புவாரொன்றும்வானவிமானத்
தொல்லைமீமிசையூனிர்தூயவானகமெனச்சுடர்விளக்கணிசெய்வார். ௧௩

அரியநாண்மலர்த்தேன்களாற்குறிஞ்சிமேற்குறிஞ்சியானதுசார்ந்தான்
மருதமானதுமுல்லையேகிளர்த்ததுமாதர்மெய்விளையாட்டாற்
பரவுமாமணித்திரள்களாற்பரல்படுபாலையொத்ததுபன்னீர்
விரவிவீசலானீர்வளர்நெய்தலேகிளர்த்ததுப்பனிக்குன்றம். ௧௪

மலரினுற்கரும்பாற்சுரும்பாண்மடமாதரானடைக்காவாற்
குலவுதென்றலாற்கொடிநிரைத்திருண்டதாற்கோமதனுயிர்மீட்பான்
சிலையுநாணும்வெங்கணைகளும்வேழமுஞ்சேனைதேர்படைவீடு
முலகநாயகிதிருமணச்செவ்விபார்த்தொருங்குநிற்பனமானும். ௧௫

இறைத்தசுண்ணமுஞ்சிதறும்வெம்பொரிகளுமெடுத்தெறிவிடுபூவு
நிறைத்தமாலையினுகுத்ததண்மலர்களுநிரைத்துவீழ்பூந்தாது
நறுக்கியொப்பிடுசரங்களிற்சிதறியநவமணிகளும்பொன்னுங்
குறித்தகுப்பையாற்பணிவரையனந்தமாங்கொடுமுடியுடைத்தம்மா. ௧௬

இமநெடுங்கிரிகாவலனின்னணமெழில்வரையணிசெய்யக்
கமழ்பசுந்துணர்க்கொன்றையந்தொடைபுனைகயிலையம்பெருமானைத்
தமனியப்பணிகொடுமணவணிசெயச்சதுமுகனெதிர்வேண்ட
வமரர்தம்பிரானணிந்தமைகாண்கெனமுறுவல்பூத்தருள்செய்தார். ௧௭

புலவுநாறுகோட்டாம்பல்வெம்புலிதருபோர்வையுமுட்சாத்துங்
கலிகொள்பாரொலாமாருபணத்தேந்தியகணபணுடைவிக்கச்சு
மொலியலாகிமேலொளிறுபீதாம்பரவுத்தரிகமுமாகி
வலியகாஞ்சனப்பட்டிகையாகவுமலிந்துதோன்றியவன்றே. ௧௮

காதிற்குண்டலமார்பணிசரப்பணிகண்டிகைதிருத்தோளின்
மோதுபொன்வளைகங்கணம்பவித்திரமோதிரங்களையாழி
பேரிற்பொங்கியவர்சிகைகரோடிகைபுனைதிருவரைநாண்கள்
பாதநூபுரப்பொற்பணியாயினபணுமுடிப்பணியெல்லாம். ௧௯

அமருப்பொடுமீனலோசனம்புடைதொடுத்தவெண்டலைமாலை
காமர்பொன்னணிசன்னவீரம்பலகாசணிப்பணியாக
மீமையானத்துவெண்டிருநீறுவெண்கருப்புரநறுஞ்சாந்தா
யாமையோடுபொற்பதக்கமாவென்பெலாமாரமாயினமாதோ. ௨௰

கண்ணின்மேற்றிகழ்கண்ணொளிர்தருங்குறிவிழுதற்குறியாக
வண்ணமேற்குழைமகரகுண்டலத்தொளிமேனிவளைத்திருத்தோண்மேல்

விண்ணின்மேற்பொலிகதிரொளிநிலவெனவிளங்குபேரொளிகீச
வண்ணமாமணித்திருமுடியானதுவளர்சடைமுடியம்மா. ௪௧

வேறு.

மணிப்பணியக்கதப்புயமும்வாய்ந்தபொன்
னணிப்பணியகலமுமகலங்காண்குறத்
தணிப்பணிதகைமையாற்சலித்திட்டான்சகம்
பணிப்பணியிலமும்பார்த்தபார்வையான். ௪௨

பூதநாயகன்முடிதொடுத்தப்பூவெலாம்
வேதநான்முகன்விழிகுளிர்ப்பக்கண்ணுறீஇப்
பாதமேற்பணிக்தெழீஇப்பண்டுதானுநன்
றூதையும்பெறவொணாத்தவம்பெற்றேகினான். ௪௩

வேறு.

கொம்பனாள்பெருமணநிறைவேறவானிமையவர்குறைதீர
வெம்பிரானெழுந்தருளுகதருணமென்றிமையவெற்பிறையேகித்
தம்பிரான்றனக்குணர்த்தலுங்கயிலையஞ்சயிலநின்றடலேற்று
நம்பிரான் புறத்திவர்ந்தனருயர்கணநாதர்போற்றியநாதர். ௪௪

நீலலோகிதராடகாட்டகர்விமலர்நூற்றுவரண்ட
மேலையுச்சியரண்டமூலத்துறைவிமலருத்திரர்யாரு
மாலும்வேதனுஞ்சயசயசயவெனவரதனைப்புடைசூழ்ந்தார்
கோலமேருமால்வரையினைச்சூழ்தருகுலவரைத்திரண்மான. ௪௫

பிந்துபல்கணநாதரும்பூதரும்பெருந்திரைக்கடலேய்ப்ப
வைந்துபல்வகைவாத்தியமுழக்கொலியந்தரவெளிபோர்ப்ப
விந்துவைத்தவர்திருமணத்பெருங்குழாமெண்டிசைக்சடங்காதே
தந்தமைத்தெனிந்தவர்பிரானருளெனச்சகமெலாங்கடந்தேக. ௪௬

மோதகம்பனைக்கோடுபாசாங்குசந்தரித்துமுடிகமேறித்
தாதைதன்மணத்தங்குரமெனமுனர்த்தந்திமாமுகனேக
வேதபாரகர்வாழ்த்தொலிமுழங்கிடவிஞ்சையர்புகழ்பாடக்
கீதமின்னரர்தும்புருநாரதர்கினரிசையமுதூற்ற ௪௭

இந்திரன்குடைநிழற்றிடப்பாவகனெடுத்திடநமன்றூப
மந்தகன்படைதாங்கவீசானன்வந்தடைப்பைகைக்கொளவூதை
மூந்துமாலவட்டங்கொடுசுழற்றமுக்கீர்க்கிறைதனிதுவச்
சிந்துபல்கொடைத்திரவியமெடுத்தெடுத்தேந்திடவளகேசன். ௪௮

கிருதிபாதுகைசமப்பமாநாகங்கண்[illegible]ரமணிவிளக்கேந்தப்
பரிதிசோமர்நிவர்த்திகைபிடித்திடப்படிவர்பல்லாண்டோதச்
சுருதியாயிரநாமமேத்தெடுப்பவான்சுரர்கள்பூமழைதூவ
விருதுநான்களுக்கோன்களுமிமித்தமூமேவியபணிகேட்ப. ௪௯

பனிவரைக்கிரிபொழிதல்போலிமசலம்பன்னவர்புடைசூழ்தக்
கனிமொழித்திரளரம்பையர்தமனியக்கவரிகாலசைத்தேக
வினியமாலயனிருபுடைகாப்பமற்றிமையவர்புறங்காப்பப்
புனிதநந்திதன்கைத்தொடும்வேத்திரப்படையொடுமுன்போத. ௫௰

அருமைநாயகன்வருகின்றனடிமுடியரியயனறியாத
பெருமைநாயகன்வருகின்றனுலகெலாம்பெற்றருள்பெருமாட்டி
திருமணஞ்செயவருகின்றனுதல்விழித்தெய்வங்கண்மணவாளன்
வருகின்றன்வரிறைவொடுகுறைவிலாவாழ்வினன்வருகின்றன். ௫௧

அமரர்நாயகன் வருகின்றனுலமுண்டமரர்தேவியர்க்கெல்லாந்
தமதுமங்கலந்தத்தமக்கருளியதனிமுதல்வருகின்ற
னிமலநிட்களநிராமயன்வருகின்றனினைப்பவர்மலமாயைத்
திமிரபாற்கரன்வருகின்றனெனப்பலசின்னங்கள்பணிமாற. ௫௨

படவிருழ்தருபெருந்திரைக்கடலெலாம்புறக்கடலொடுந்தாவிப்
படருகாந்தநாஞ்வெள்ளியங்கிரியின்மேற்பானுவாயிரகோடி
சுடர்தழைத்திடத்தோன்றியதெனமணத்தொகுதியாம்பெருவெள்ளத்
திடைதிளைத்துமால்விடையின்மேலெம்பிரானெழுந்தருளியவேலை. ௫௩

வடபெருங்கிரிக்காவலன்மந்தரமன்னவன்வடவிந்தத்
தடவரைக்கிறைகந்தமாதனத்திறைசக்கரக்கிரிவேந்த
னிடதவெற்பினேமகூடத்திறைநீலவெற்பினனாதி
யடல்வரைக்குலவேந்தருமெழுகடற்கரசரும்புடைசூழ. ௫௪

அம்மலைச்சிலைவளைத்தவர்புயமலையதிசயத்தனைக்காண்பா
னெம்மலைக்குலங்களுமெதிர்போந்தெனவிமையமாமலைவேந்தன்
மைம்மலைப் புரவலரொடுமருகனுக்கெதிர்கொடுமலர்தூவிச்
செம்மலைப்பணிந்தினியனமொழிந்துதன்செழுமலைப்பதிசேர்ந்தான். ௫௫

ஈசனைத்திருமருமகனாகவந்தெய்தறத்தவஞ்செய்தான்
பாசனத்தொடுமெதிர்பணிந்தேகலும்படர்விடைக்கொடிபாட
காசமில்லவரிமவரைவீதிவாய்நகர்வலஞ்செயப்போந்தால்
வாசமும்பதிநால்வகைப்புவனமுந்தமைவலஞ்செயமாதோ. ௫௬

வேறு.

பண்களித்தபனிமொழிச்செய்யவாய்
வண்கிளிக்குலம்போல்பவர்வள்ளலார்
விண்களிக்குமிடற்றெதிர்நோக்கினர்
கண்களித்தனர்கார்கண்டதோகைபோல். ௫௭

கார்த்தபூங்குழல்கட்டழருக்கெலர்
மேர்த்தபேரெழிலாளரிவரென்பார்
தீர்த்தன்மேனியுஞ்சேயிழைமேனியும்
பார்த்தகண்கள்பதிப்பரிதாமென்பார். ௫௮

அண்டர்காதரமுகினுக்கோர்குறை
கண்டமீதகறப்புளதாலென்பார்
வண்டுவார்குழன்மாதெழில்பார்க்கினு
முண்டுசிற்றிடையாற்குறையொன்றென்பார். ௫௯

மண்ணின்மேற்புளன்மேல்வன்னிமாருதம்
விண்ணின்மேலடங்காவுருமேவினர்
பெண்ணிமேலவள்பேரெழில்காணவோ
கண்ணின்மேலொருகண்படைத்தாரென்பார். ௬௰

சங்குசோர்வதுந்தாழ்குழல்சோர்வதுந்
தொங்கன்மேகலைசோர்வதுநோக்கலா
ரங்களுனெழிலாராவமுதினை
நங்குவாரெனநோக்குவர்நோக்கினுல். ௬௧

காய்தரும்பிறைமாமுடிகாட்டியே
மோய்தரும்பெருமோகத்தைநல்கினர்
சாய்தருந்தொடிகொண்டனர்தக்கவோ
வாய்திறந்தொருவார்த்தைசொல்லாரென்பார். ௬௨

சுழிகுலாமுந்தித்தோகையன்னீர்கமைக்
கழிவிலாதுயிர்காத்தலுமோனமோ
விழியினுன்மதவேலையும்வென்றுளார்
மொழியினுற்சகமூன்றும்வெல்வாரென்பார். ௬௩

தூயசோதியருள்சுரக்கின்றகண்
காயுமோவிவர்கட்டெழில்காணவே
போயமாரன்பொருமையின்மாய்ந்தனன்
வேயுங்கண்ணழல்வெந்தழல்போலென்பார். ௬௪

ஆரமாதவஞ்செய்யவயர்கின்றேம்
வீரமாதவர்வெம்புயத்தண்ணலைச்
சாரமாதவன்றங்கைசற்கங்கைபோத்
சேரமாதவஞ்செய்திலம்யாமென்பார். ௬௫

நுதலைக்கண்டுநெடங்கியகூன்மதி
மதலைத்தார்முடிவந்தமைக்காயுமான்
முதலைச்சேர்ந்தகனுழலைமோடளம்
விதலைப்பார்ந்தள்விளைத்தமைபோலென்பார். ௬௬

வஞ்சிகைவளைபோம்வழிமற்றுமோ
ரஞ்சொலாளைவிருவ்வருந்தன்
னெஞ்சபோம்வழிதேடவுகேடிப்போய்த்
தஞ்சல்போக்கினின்றுனொருசொன்னுவார். ௬௭

போதுசாந்தமும்பூரணகும்பமு
மாதர்தாங்குபொனமாடம்புகாமலே
மீதுநாதனையுங்கொடிவீதிபோ
மீதுமாலவிடையெனபதுமெய்யெனபார். ௬௮

அஞ்சலென்றகமலமெய்யாரருட்
கஞ்சமாம்பொதுக்காட்சியைத்தமமன
முஞ்சலாடவுமஃதெமக்கெனனவே
விஞ்சுபூசலவிளைத்துநிறபார்சிலர். ௬௯

அகிலுணகோதையராயிரகோடியா
தகிலுமாரமுஞசோரவிழுகணமீர
முகிலுணகூநதலொநததிமுனனேகுவார
நிகிலநாதாகருநீதுபிர்தாவெனபார. ௭௰

பரதமாலவரைவீதியிறபாவைமார
சுரதவாளவிழியணடினஞநழவர
விரதயோகாவிழிசதும்பியாதலால
வரதாமேனிமதுதகிரணமானுமே. ௭௧

வேறு.

உரகர்தானமுங்கீழபபடவெணமாவாழுலகமுரசிகைத்தேநக
விரவிமீமதிடிஈருகுருவாஞயரிடஙகளகோளிடமாக
விரவுகினனரா ழிடமவீணையெயசூடயோக்கிப்
பாமாமாமணபெருகமொரடுமபொலிநததாறபணிவளாவளமூனர். ௭௨

விநதைவானவாவருசலாறபவனமுமவெறுககையெயதிடவாணி
யாதனுளனுஙகணதமதாடுவருதலாலவனுலகலொயதப
பைநதுழாயனுநசமலையுமேவலாறபாறகடலசலமேய
சுநதிநாயகனவருதலாறகயிலையுநணியிளாததமாதோ ௭௩

மேவுவிஞசையருலகமெனபாசிலாவிரிஞசனவாழுலமெனபார
தேவலோகமாவுலகமெனபார்சிலர்சிவபுரமிதுவென்பார
தாவிலேழுடனேழுபேருலகமுநதநதிந்நகரெனபார
யாவுமினறவடனையினறருளபதிககிதுகொலோவறிதெனபார். ௭௪

வேறு.

பூதர்சங்கமும்வானவர்சங்கமும்புவன
நாதர்சங்கமுமுருத்திராசங்கமுநானகாம்
வேதர்சங்கமுமாமுகிற்குலத்தொடுமிடைநத
மாதாசஙக மாயினவெனும்பொலிவமைநது. ௭௫

கொடிகளும்பெருங்குடைகளுநிரைத்தகோவேநதர்
தொடிகளுநதிரண்முடிகளுமுகுத்தபொற்சுண்ணம்

பொடிகள்சிந்திடமிமசலச்சேறுகாம்புதைந்து
பிடிகளுக்துடியடிகளுங்கண்ணுறும்பிளிறும்- ௭௬

தெருவடங்கலாப்பெருநதிரளாகினுஞ்செகத்தோர்
பொருவினைபயன்பொருந்திநியதியேபோல
மருவுஞாயிலின்றிருக்கடைநெருக்குறவருவோர்
பெருமைகீழ்மையினமைத்திடுநகிலைப்பிரம்பு- ௭௭

குன்றுளார்திசைவேந்தருநாரியர்குழாமும்
வென்றிமாலயனுருத்திரகணத்துமேலவரு
மனறுளார்மழவிடையுமாமுனிவருமல்லா
லின்றுளார்பதம்பெயர்த்திலர்மறுகெலாநிரம்பி- ௭௮

தவமுனிக்கணமரசிலைதருப்பைநீர்தெளிபப
வவர்திருக்குலமாதர்நீராஞ்சனமமைப்பத்
துவசநறகுடமணிகொடிமுரசபூநதோட்டி
கவரிதீபமாமெண்வகைமங்கலக்கலங்கள்- ௭௯

என்குலக்கிரிமடந்தையரிவைமுறையெடுப்ப
வண்கருப்புரதீபமோர்மேருமால்வரையிற
பெண்கையிற்கொடுவலஞ்செயநதெய்வதப்பிறைக்கள்
கண்களிப்புறவேநதுமாலத்திகள்களுல. ௮௰

வேறு.

முருகையார்தழையானிரான்முதுவரைத்திரிகூடத்தி
லொருகையாற்பதம்பூசித்தவுயர்கயகருணனென்பா
னிருகையாங்கமலம்பற்றிவிடையினைதிழிநதுநாநதி
தருகையாலமரர்மோலிசாத்துபாதுகைதாள்சாத்த. ௮௧

இடம்வலமயன்மால்செங்கைபற்றிமுத்தொழிதுக்கென்று
முடைமைதோன்றிடவசுக்கள்சுவத்திகமுரைப்பமாதர்
கடைபடம்விரிப்பவானோர்நாண்மலரிறைப்பச்சென்றூர்
வடவரைவளைத்தவள்ளல்பனிவரைக்கோயில்வாயில். ௮௨

நசனேமருகாவெய்தவேமூலகின்றுடன்னை
வாசமாமகவாப்பெற்றுமரபெலாம்புனிதம்பெற்று
ளாசறுபுனலாலன்னலடியிணைவிளக்கிச்செய்யும்
பூசனைநீராதுன்றும்புறத்தினும்புனிதஞ்செய்தான். ௮௩

அந்நிலைடந்தபோதியாயிரம்பவளச்செங்காற்
பொன்னின்மண்டபத்துள்ப்பட்புருடராகத்தின்வேதி
மன்னுபொற்பதுமராகவடங்கலாசனத்தின்மேவிப்
பன்னெதிபமரர்பே[illegible]ரஞ்சூழிருந்தார்மன்றே. ௮௪

இருந்தபின்பிரமன்மாமாலிந்திரனெழிற்கூர்மாண்ட
னொருங்கமராடகேசனுருத்திரர்முதல்லார்யார்க்கு
நெருங்குபொற்றவிசுந்தாசனிலைத்தகம்பலமுநாதர்
தரந்தரமிருக்கைகாட்டித்தடங்கண்ணலருளிச்செய்தார். அ௫

பாருளார்விசும்பினுள்ளார்பாதலத்துள்ளார்பார
மேருவாரிமையமாதிவெற்புளார்புவனபோகத
ராருளாரவர்கட்கெல்லாமண்டபமமைத்ததம்மா
ஞ்சேருவார்க்கெல்லாநாதர்திருவடிக்கமலம்போல. அ௬

மன்றலின்குழூஉநிறைதலாற்றாழ்ந்ததுவடபெருந்திசையாவு
நின்றதெக்கணம்வானுறவுயர்ந்ததுநெளித்தனனுரகேசன்
றென்றிசைக்கடல்வடதிசைக்கெழுந்ததுநிலைத்ததுவடமேரு
மென்றளிர்க்கரம்விதிர்த்தனள்பார்மகள்வெருவினவுலகெல்லாம். அ௭

மனிதர்மாதவமுனிவர்பானுரைத்திடமாமுனிவராகிப்
புனிதவானவர்க்கியம்பவானவர்வெரீஇப்போந்துபொன்னுலகாளு
நனிகொள்வாசவற்குணர்த்திடவாசவனான்முகற்குரைசெய்ய
விளியநான்முகன்மாதவற்குணர்த்தினனெழுந்தனரிருவோரும். அ௮

உவணவூர்தியுந்திசைமுகக்கடவுளுமும்பருந்திரண்டேகிப்
புவனமூன்றுமோர்பொருப்பினமேற்படர்தலாற்புவிபொறையாற்றுமற்
கவனமேகொடுவடதிசைதாழ்ந்துதெக்கணதிசைமேலாகிப்
பவனநோக்கியதெனவுயர்கயிலையம்பரமர்பாலறிவித்தார். அ௯

உம்பர்யாவருமுறையிடுதலுந்திருவுளத்திடையருள்கூர்ந்து
கும்பசம்பவமுனிவனைத்திருமணக்குழாத்திடைக்குறிப்பாக
வெம்பிரான்றிருக்கடைக்கணோக்கலுமிறைஞ்சினனெழுந்தேகிச்
சம்புநாயகசரணெனநின்றுவாய்புதைத்தனன்செவிதாழ்த்து. ௯௰

தாழநின்றெதுபணியெனப்பரவுவான்றனிமனங்களிதூங்க
வாழ்பெருங்கடலமுதுகுத்தெனத்திருவாய்மலர்ந்தருள்செய்வார்
சூழ்பெரும்பதினால்வகைப்புவனமுந்தொக்கபேரவைகாட்டி
யேழ்பெருங்கடலெழுபெருந்தீபமுமெடுத்துமேலிசைக்கின்றார். ௯௧

மகரவாரிநடுவுறைமரக்கலம்வளைந்தநாவலந்தீபம்
பகருமாடகக்கிரியொருபாய்மரந்துருவசக்கரம்பாயல்
சிகரவெண்குலக்கிரிகளுநங்கூரத்திவிசைகல்லாகு
நிகரில்பல்லுயிர்த்தொகைகளேவகைபெறநிறைத்திடும்பலபண்டம். ௯௨

மன்றல்சேர்பெருமங்கலக்குழுவினுன்மகிதலமெனுநாவாய்
தென்றிசைப்புறமுயர்ந்திடவடதிசைசென்றுதாழ்ந்ததுயார்ராய்
வினறுநீர்க்கடலமிழ்ந்திடாதினிநிலைநிறுத்துதற்கியாம்வேண்டு
மின்றியெம்மையேயிடைவிடாதுளத்தினிலிருத்தியநீவேண்டும். ௯௩

சந்திராதித்தர்வலம்வருமுலகெலாந்தழைத்திடமனைவாழ்வு
மிந்திராதியர்சுவர்க்கமுநிலைபெறவிமையமீன்றவண்மாதை
மந்திரகமப்படிமணஞ்செயமணம்மைத்தநம்பொருட்டாக
நந்திராவடமுனிவநீதென்றிசைநயப்பொடுஞ்செலவேண்டும் ௯௪

வேறு.

சென்றுநீதெக்கணபானமெலிவகற்றித்தெனமலைக்கேசெறிந்துவாழ்தி
துன்றுகதிர்முதல்வானோர்நெறிசெலுத்தமேருவிலவாழ்ந்துருவனபோல
வென்றபராம்பரனருளவேறுவிண்ணப்பமெனவிறைஞ்சியேத்தி
யொன்றுதமிழ்க்குறுமுனிவனிரண்டுவரம்வேட்டருளாலுணர்த்துகின்றான். ௯௫

முன்னதுநீயிமையவனைச்செல்வித்தனைமணம்புரியுமுறைமைகாணப்
பின்னதுநின்றிருநடனங்காணவெனுமாசையினுற்பெரிதுகாலம்
பொன்னசலத்திருந்துதவமியற்றியொருகாட்சிபெறப்போந்தேனிப்பா
லின்னமுமொன்றுளதாகவிரண்டுமெனக்கெய்திடுமாறருளென்றான். ௯௬

பனகவரையானுடையார்குறுமுனிபாலருள்கூர்ந்துபரிவானோக்கிக்
கனகவரையாயிரயாண்டுதவுபலனூறாண்டிற்காமகோட்டி
சனகவரைகொடுகுமரதத்தவபயனையோராண்டுதனிலோல்கு
மனகவரைத்தெக்கணபாற்கேதாரமுதலுளவெனாறருளிப்பின்னும். ௯௭

தென்பாலிலொருதலத்துக்கோடிநாளுதவுபலன்சிறிதுநாளில
முன்பாகக்கொடுப்பதொருதலமுளதக்தப்பிறர்க்குமொழியோம்பா
லன்பாகவினவுமவர்க்கருள்செய்வோமெனவுமைப்பவருளாயென்று
மின்பாவுஞ்சடைமுனிவன்பாதமலர்சூடுதலும்விளம்பாநின்றார். ௯௮

பொன்மலைக்குநிகயிலையெனும்வடமலைக்குந்தென்மலைனபொதிகைவாசத்
தென்மலைக்குவடமலைநந்திரிகூடத்திருமலைமேற்செம்பொன்னூட்டு
மினமலைக்குமணிகொழிக்கும்வடவருவிக்குற்றாலம்விபுலமீன்ற
நின்மலைக்குமெமக்குமொருபொதுத்தானமுவருக்குநியமத்தானம். ௯௯

புண்டரிகத்தயனுமைப்பவத்தலத்துப்புரந்தரர்தியர்கள்போந்து
மண்டுபெருந்தவம்புரிந்துமாறுதபாதகங்கண்மாறுந்தானம்
விண்டலத்தோர்மகிதலத்தோர்வினைதீர்க்குங்கங்கைவினைதீர்க்குந்தானந்
தண்டமிழ்சொன்மாமுனியதருமமொன்றுகோடியெனத்தழைக்குந்தானம். ௱

செல்வம்வேண்டினர்க்கருளத்திருமைக்காத்திருப்பதனுறைசெங்கண்மாலுங்
கல்விவேண்டினர்க்கருளக்கலைவாணியுறைதவிஞறகமலத்தோனும்
வெலவிசையங்கொடுப்பதற்குக்கொற்றவையுமகப்பொலியாவேள்விவேட்டு
நல்வடுகச்செம்மலுங்காத்துறைதானந்தமிழ்ச்சுருதிதிகடிக்குந்தானம். ௱௧

முத்தலைகயமகளிர்மூலைத்தடத்துவானவர்கண்முயக்குந்தோறு
முத்தரிகந்துயல்வருவானவர்புயத்திலவர்மூலைக்கோடிழக்குந்தோறு
மித்தலத்தினமகிமையெண்ணிக்கைகூர்ந்துதிசைநோக்கியிறைஞ்சுந்தானஞ்
சித்தர்சாரணரியக்கர்கின்னரர்கிம்புருடர்தவஞ்செய்யுந்தானம். ௱௨

பந்தாடல்கழங்காடல்கற்பகப்பூம்பந்தரிடைப்பசும்பொன்னூசல்
வந்தாடல்கங்கைநதிவிளையாடல்பூங்காவின்மலர்கொய்தாட
லிந்தாடன் முகமலரவிந்திரனோடாடுதொழுமிந்திராணி
சந்தாடைமுலைதடிப்பவிதழ்துடிப்பப்பாடியசீர்தழைக்குந்தானம். ௭௩

வேறு,

கலைப்பெருங்கடல்களெல்லாங்கருத்தினிலடக்கிக்கையி
லலைக்கடலடச்சிரம்பாலருட்பெருங்கடலினாடு
நிலைக்கடமுனிவுகேண்மோநின்மலப்பவையும்யாமுங்
கொலைக்கடகரிசெய்பூசைகொண்டினிதிருக்குந்தானம். ௭௪

அந்நகர்க்கணியாபூழியாழிதாங்கெயிலாயோங்கு
முன்னதத்திரிகூடத்திலுத்தரபாகமாக
என்னர்சித்திரபூங்கங்கைநமதருளாகத்தோன்றி
முன்னினரெவர்க்கும்பாவமோசனஞ்செய்யாநிற்கும். ௭௫

தேனமர்திரிகூடத்திற்சித்திரநதிதோய்வார்க்குத்
தானமுந்தவமும்வேறுதருமமுஞ்செய்யவேண்டா
ஞானமும்புகழுங்கல்விகலங்களும்பொருளுமெய்தும்
வானவர்பதமும்வேண்டும்வரங்களுங்கொடுக்குமாதோ. ௭௬

உத்தரமுகமதாகவுயர்திரிகூடந்தோன்றுஞ்
சித்திரகங்கைதம்பாற்றிருமணங்காணவேண்டி
யித்தலைபோந்ததங்கணெய்துதற்கருளுகின்றே
மத்தலையகத்தியருந்தவம்புரிதியென்று. ௭௭

வேறு.

வேடனொருவன்றிதுடர்ந்தொருதுறையில்வீழ்ந்துபெற்றவீடுபேறுந்
தேடருமெய்த்தலமூர்த்திதிரிகூடவடவருவித்தீர்த்தஞ்சத்தி
பீடமிமையும்வேதக்குறும்பலாமான்மியமும்பிலையகாலு
மாடல்பெறுஞ்சிற்பொதுவினதிசயமுந்திருவாக்காலருளிச்செய்து. ௭௮

ஓதியபேருலகனைத்துமொடுக்குமுறையொடுங்கியகாலொடுங்காதநி
நீதிபெறாமதருளானின்றபுடார்ச்சனபுரத்துநின்றியாமே
சோதிபெறுதிருமுகமாயிரம்படைத்துத்தரும்புவனத்தொகைகளெல்லாம்
போதிலுறையயனுக்கருளித்திருமாலாய்ப்புரக்கின்றேமால். ௭௯

மாலாகியிருக்குநமைப்பணிந்துசிவவடிவாக்கிமகுடமென்று
மாலாதியாகமத்தாற்பூசைசெய்துறவனுமணக்கோலங்காண்டி
மேலானதிரிகூடச்சாரலிடையஞ்ஞூறுவேள்விசெய்து
காலானமறைபரவுநம்பெருஞ்சித்திரசபைக்கேநடனங்காண்டி. ௮௰

மூர்த்தமலைபொரோமுமினி துறையுங்குற்றாலமுறையிற்போற்றிச்
சர்த்தமலைத்தடங்கோட்டி லுறைதியெனவருளுதலுந்தம்பிரானை
வாத்தமலைக்கடலடக்குமலர்க்கையாற்பரவிநின் றுவரம்வேறொன் று
வித்தமலைவாதாவிக்கிடந்துடிப்பவலம்புரிந்துவேண்டிப்பின்னும். ௩௧௧

தொழுதுபுனல்வேண்டுதலும்பொன்னிநதிசென்னிமதித்தொடையார்கல்க
வொழுகுநிறைப்பெண்டகைமாராண்டகைபின்றனித்தேகலுரித்தோவென்றான்
கெழுதகைநம்மன்பனிவனிருவினைவென்றவனெனவேகிளப்பமீளும்
பொழுதகுறித்தருளுமெனப்புவியில்வன்கைகாட்டும்பொழுதேயென்றார். ௩௧௨

எம்பாருள்கொண்டுவிடைகொண்டேகித்தென்புவியினவைகண்மாற்றிக்
கும்பமுனிதண்பொதியந்தென்பொதியமாமலைமேற்குறுகுங்காலை
யும்பர்வடதிசைபோலத்தென்றிசையுமொத்ததுகோவணத்தாலோர்கா
ளெம்பெருமானமர்ந்தியுவந்தேறுமொருதலையிருதட்டேபோல். ௩௧௩

வேறு.

ஒருதிண்புவிகோணறநிற்றலினும்பரொல்லாம்
வருநம்பனைமாலமையத்துவணங்கியார்த்தா
ரிருமங்குலிஞெநியையோதியரீன்றபொன்னைத்
திருமங்கையர்பொற்பினையொப்பனைசெய்வதானார். ௩௧௪

அகிலாண்டமுமீன்றழகுக்கழகாகினாளைத்
திகழ்பேரொழிலுக்கெழில்செய்வனசெய்யநேர்ந்தா
ளிகமேலுறுபேதைமைமாதரியற்கையாலோ
வகமேலளவுக்களவாமவடன்மைதேர்ந்தோ. ௩௧௫

ஆலத்தையவர்க்கமுதாக்கியகண்டமெல்லாஞ்
சாலப்பெருமங்கலமாக்கியதையலாட்குக்
கோலத்திருமேனியைமங்கலக்கோலஞ்செய்யக்
காலத்தின்முன்னெண்ணியபூசைக்கடன்சமைந்தாள். ௩௧௬

கங்கைப்புனலாட்டிமணிக்கலைநீறுசாத்தி
யங்கைத்திருமாமலர்செய்தவருந்தவத்தான்
மங்கைக்கணிசெய்வதுபோன்மலர்மாமடந்தை
செங்கைப்பலசெம்பொனணிக்கணிசெய்வதானாள். ௩௧௭

காராகெருங்குழலாகியகங்குன்மீதே
தாராகணமொய்த்ததெனப்பலதார்கள்சூட்டி
யோராடியகொண்டலின்மின்றனையிட்டதேபோற்
சோரதலைப்பணியுத்திதிருத்தினளே. ௩௧௮

கருமைக்குழல்விண்டெனிறன்டெளிகாட்டுமோபோற்
பருமுத்தணிதொங்கலசைத்தொருபட்டம்வீக்கி
யொருமைப்பிறைமேலிருபானுவுதித்தன்மான
விருமைத்திலதந்திருநெற்றியிலிட்டனளே. ௩௧௯

ளுயிழ்முத்தமணிக்தனன்கொவ்வைமுகிழ்க்குமுத்தி
னமாத்தவமூசியினிற்குமோராரமேபோற்
கமழ்பொற்குழையிற்குழைசாத்தினன்காலிலே
முயிழ்கட்கடலிற்புடைபாய்கறவொத்தலாவ. ௯௨௰

வயிரப்பணிதங்கியகொப்புயயக்குமின்ளுன்
பயில்பொற்குழைபூடுருவிக்குழல்யாய்கண்வாளி
கயிலேத்தனிராயகர்சிக்லைதகவற்றுமென்றே
வெயிலைப்பொருவானிதனைப்பொருமென்றதாளே- ௯௨௧

வருமங்கலஞானணிமல்குவலம்புரிக்கே
திருமங்கலஞானணிதாங்கமதாணிசேர்த்தித்
தருமங்கலமானதடங்கைதனைத்தினைஞ்சூழ்
பெருமங்கலமார்கடகஞ்சரிசங்குபெய்தாள்- ௯௨௨

மதர்வைத்தவிழிப்பொருகாவலஞ்செய்கார்போ
லுதிக்கெழுநஞ்செனவஞ்சனமொன்றுதீட்டி
விதுவைத்தன வெள்ளிவளைக்குமுகிழ்த்தகஞ்சங்
க்திர்வைத்துவிரித்தனபோற்கனையாழியிட்டாள்- ௯௨௩

எழுமுத்தலமீன்றவைமுற்றுவதின்றிமுற்றுச்
செழுமுத்தமுலைத்துணைமுக்கணர்செவ்வியெய்தக்
கெழுமுத்தவமெய்தினையென்றுகிளத்தலைபம்பூண்
முழுமுத்தமிடற்கிணைமுத்தணியாரமிட்டாள்- ௯௨௪

பொருகுன்றின்முனைத்தகரும்பொடிவல்லிபோலு
முருகுக்தொயில்குங்குமமான்மதமொன்றுதீட்டிப்
பருமம்பெருமேகலைதந்துபணிக்கலாப
மருமென்கலைசுற்றிமருங்குலைவாட்டினின்றுன்- ௯௨௫

போதுங்கலனுந்திருமேனிபொதிந்துநின்றீ
ரேதின்றுசெயுங்கொன்மருங்கெனவேங்குமாபோற்
யாதுங்கள்புலம்புசிலம்பொடிபாதசால
கிதம்பொலிகிண்கிணிதண்டைகளார்த்திட்டான்- ௯௨௬

வேறு.

பொருப்பினுக்கரசனின்றபுனைமலர்க்கொம்பனுளை
யருத்தியால்வலங்கொண்டேகியவிமணிக்காப்புச்சாத்திக்
கருப்புரதீபஞ்சுற்றிக்கண்ணெச்சில்கழித்துநின்று
டிருப்பதம்பரவிமுன்னேதிருப்பதம்பெற்றசெல்வி. ௯௨௭

முனிவரரெழுவர்போந்துமுகூர்த்தம்வந்துற்றவாற்றுற்
பனிவரையரசைநோக்கிப்பாவையைக்கொணர்வரென்ன
கனியவனருளாற்போதுகனிர்வளைக்குலத்துமாதர்
புனிதரையமிமுன்கூறப்பொருக்கெனவெழுந்தாண்மன்றே. ௯௨௮

செல்வியுமதுரவாணிதேவியுமெழுந்துபோற்றி
மெல்விரற்றளிர்க்கையேந்தவியன்வலமிடப்பால்பற்றி
வெல்விரிகாலைமாலையேத்துவார்தமக்கேசெல்வங்
கல்வியுங்கதியுநல்குங்கரதலத்தியற்கைகாட்டி. ௩௨௧

அலத்தகமுழுத்துதாளிலயிராணிமலர்கவே
பலப்பலசிலம்புதண்டைபயப்பயப்பயவென்றார்ப்பத்
திலத்தமைதுசுதாங்கச்செயமகண்மருங்குகாப்ப
கலத்தருங்கங்கையாதிநங்கையர்கவரிகாட்ட. ௩௨௨

உருப்பசிகளாஞ்சிதாங்கயோகினியடைப்பையேந்த
விரிப்புறுமடைப்பாவாடைமேனகைவிரிப்பயாண்டும்
பருப்பதக்குலத்துமாதர்பனித்துளிதெறிப்பவேதந்
திருப்பல்லாண்டிசைப்பத்தெய்வச்சிலதியர்சுண்ணந்தூவ. ௩௨௩

கின்னரமகளிர்பாடக்கிரியரமகளிர்வாழ்த்தப்
பன்னகர்குலத்துமாதர்பன்மணிவிளக்கமேந்த
வன்னமென்பெடையுநாணவணிமலர்க்கொம்பர்நாப்பட்
பொன்னிளங்கொடிபோலொல்கிப்பொருப்பிளம்பிடிபோற்சென்றாள். ௩௨௪

குலத்திரள்கொங்கைகாட்டக்குணத்திரள்வடிவுகாட்ட
கலத்திரள்சுமந்துதொய்யுநாண்மலர்க்கொம்புபோல
நிலத்திடையிறைஞ்சியேகிநீளரித்தவிசிலெம்மான்
வலப்புறத்திருந்தாள்வல்லிமதியுடன்விதிசேர்ந்தென்ன. ௩௨௫

மண்பெற்றார்சுவர்க்கம்பெற்றார்வரைபெற்றார்திரைகள்பெற்றார்
விண்பெற்றார்புவனமூன்றுமிகப்பெற்றார்மகப்பெற்றாரிற்
பெண்பெற்றார்க்கெய்தாப்பேறுபெற்றனனிமையவேந்தன்
கண்பெற்றானன்றுபெற்றார்காட்சியாற்பெறும்பேறெல்லாம். ௩௨௬

இன்னணநிகழுமேல்வையிமையவெற்பரசிமேனை
மின்னனார்தசும்பிலேந்தும்விசும்புதோய்கங்கைநீராற்
சின்னவெண்பிறைசேர்மோலித்தேவனெம்பெருமான்கஞ்சப்
பொன்னடிவிளக்கிச்சாந்தாற்பூவினாற்பூசைசெய்தாள். ௩௨௭

அந்நிலையிமையவேந்தனருந்தவக்கொழுந்தின்செங்கைக்
கன்னியம்புயத்தைமுக்கட்கருணையங்கடலின்பாணி
மன்னுறவமைத்துப்போற்றிமங்கலச்சொல்லால்வாழ்த்திப்
பன்னெடும்புவனவாழ்க்கைப்பயிர்தழைத்திடநீர்வார்த்தான். ௩௨௮

முழங்கினமுரசபேரிமுழங்கினதுடிதடாரி
முழங்கினசுருதிவேதமுழங்கினபணிலநாத
முழங்கினமுனிவராசிமுழங்கினநடனகீத
முழங்கினகுரவைபோலசைமுழங்கினதிசைகடோறும். ௩௨௯

ஆடினர்பவுரிமென் மேலார்த்தனர்சிரமேற்செங்கை
சூடினரனந்தானந்தத்துறைபடிந்தாடியாடிப்
பாடினர்பரமகீதம்பரவினராழியாவினப
தேடினரகிலாதன்றிருமணங்கண்டோரெல்லாம். ௱௩௮

தாமரையுழவன்வேதச்சடங்கெனுந்திரளோப்பூட்டி
யோமமென்னிலஞ்செய்யாகவுயர்திரவியங்களாவித்திக்
காமருதேனுநெய்யாங்கமழ்புனல்வார்ப்பவார்ப்ப
மாமகப்பயிராஞ்செந்தீவலஞ்சுழித்தெழுந்ததன்றே. ௱௩௯

குணின்றூரசிடம்பவொற்றைவலம்புரிருளிறவாணி
தணைவனேசடங்குசெய்யச்சுருதிமங்கலநாண்சாத்தி
யிணையிலிமுக்கணெம்மானிமயமான்மலர்க்கைபற்றி
மணவிறைகோலங்காட்டிவானவர்வாழ்த்தநின்றார். ௱௪௰

பிலத்துறைவேந்தனோராயிரப்பெருநீபமோத
மலர்த்திருமகள்கொண்டாடவாணிமாகளங்கள்பாடக்
குலக்கிரிமகள்பினனேகச்சொழுந்தழல்வலங்கொண்டேகு
கலத்தகுபொரிகடூவிநயம்பெறும்வேள்வியாற்றி. ௱௪௧

செப்பொடுபவேர்ந்தசெங்கைத்திருபபுயங்காணுந்தோறுங்
கொப்பொம்மைபாருவாட்கணனுளகுலததொடும்பளைப்புக்காட்டக்
கைப்பிடித்தருருவகையாற்காலபிடிதநம்பிசாத்தி
மெய்ப்புகழ்வடன்றேவிவிண்ணிடைபபரவக்காட்டி. ௱௪௨

மருமலர்விதானவேள்விமண்டபங்கடந்துளம்பாடுத்
திருமணவறையின்மேவித்தேவியுநதாமுமாக
வரும்மணக்கோலக்காட்சியருளிவீற்றிருந்தாமனறோ
கருதுவார்கருதும்வண்ணங்காட்டிதந்தருளும்வளளல். ௱௪௩

வருக்கையின்சுளையும்பாலுமவாழைமென்கனியும்பாகு
மருத்திமாம்பழமுநதேனுமமிழ்தெனத்திருத்தியனபாற
பருங்பதத்திறைவன்செம்பொற்பாசனத்தமைப்பநாதர்
திருக்கைதொட்டுவநதோமென்றார்செகமெலாநிறைநததம்மா. ௱௪௪

வாசனைச்சுகநதம்பன்னீர்மணங்கெழுதெய்வச்சாநத
மீசனெம்பெருமான்முளனரியற்றினனுவப்பபின்னர்ப
பாசனநிமலச்சேடம்பரிசனத்தவர்களோந்தத்
தேசனதருளாலுய்த்தானதிருமணகுழுவுக்கெல்லாம். ௱௪௫

நிமலர்பாற்கழித்தசேடநிணமலவுணவைத்தேவ
ரமரர்கோன்முனிவர்பூதருருத்திராயன்மாலாதி
யிமவரைக்கிறைவன்மேலையேனையசுற்றத்தாருந
திமிலமுற்றருந்திச்சென்னிதெனித்தனர்களித்தாமன்றோ. ௱௪௬

சொல்லறநின்றார்வீறுந்துறவறத்திருந்தார்பேறு
மில்லறம்புரிவார்தம்மாவியையவதாலிதுவ்வயார்க்கு
நல்லறமெனவேவானுஞாலமுந்தெளியக்காட்டி
மெல்லறலனையகூந்தன்மணந்துவீற்றிருந்தாரெங்கோன். ௱௪௭

மாமனார்பரவத்தெய்வமலையாட்டிமகிழவைகிச்
சோமனார்புனைந்தவேணித்துங்கனாரமரர்வேண்டக்
காமனாராவிமீட்டுக்கவுரியுந்தாமுமாகப்
பூமனாரணனும்போற்றக்கயிலையம்பொருப்பிற்போந்தார். ௱௪௮

திருப்பொலிமழுவாளங்கைச்சிவபிரான்கயிலைமேவி
மருப்பொலிகுழலுந்தாமுமடங்கலாசனத்துவைகி
யுருத்திரரயன்மாலாதியும்பர்மாமுனிவர்க்கெல்லாம்
விருப்பொடுசிறப்புநல்கிவிடைகொடுத்தருளப்போந்தார். ௱௪௯

கயிலைமால்வரையின்மேயகண்ணுதற்கருணைமேகஞ்
சயிலமின்னொருபான்மேவித்தண்ணளிபொழிதலாலே
பயில்வனவூர்வதிற்பறப்பனநடப்பவாதி
யுயிரெலாம்பயிராயீரேழுலகெலாந்தழைத்தமாதோ. ௱௫௰

மவுனநான்மவுனமுற்றார்மடந்தையைமணந்தஞான்றே
பவனமேல்விண்மேன்மண்மேற்பரந்தபாதலமேன்மற்றைப்
புவனமேலுள்ளோரெல்லாம்புவனபோகங்கள்பெற்றார்
சிவனதுசெயலேயல்லாற்செயலுண்டோவுலகுக்கெல்லாம். ௱௫௧

சூரினாலலக்கணெய்தித்துயர்பெரிதாற்றாராகி
மேருவின்மறைந்துவைகும்விரிஞ்சன்மான்முதலாம்விண்ணோர்
காரியல்கண்டத்தண்ணல்கயிலையின்முறையிட்டார்க்கு
நேரிழையொருபால்வைகுநின்மலன்கருணைகூர்ந்து. ௱௫௨

முந்திராசியமுமாகமூவிருமுகமாய்த்தோன்றிச்
செந்தழற்பொறிகளாறுதந்தனர்தேவருய்ய
வந்தமாப்பொறியைக்காலுமங்கியுங்கங்கைசேர்ப்ப
வுந்துவானதிகொண்டேகிச்சரவணத்துய்த்ததன்றே. ௱௫௩

இமையமேற்சரவணப்பூந்தடத்தினிலெய்திவாசக்
கமலமேற்பொறிகளாறுங்கண்ணுதலருளினாலே
யமர்தருகுழவியாறாயாறுமீன்முலைப்பாலுண்டு
தமரநீருலகும்வானுந்தழைத்திடவளருங்காலை. ௱௫௪

எந்தையாருடன்பூவாவியெய்தினளிமையச்செல்வி
மைந்தரொன்றெப்பவிறுவடிவமும்படிவமொன்றா
யந்தமார்முகங்களாறுமம்பிகைமுலைப்பாலுண்டு
கந்தவேளெனப்பேர்கொண்டுகயிலையின்வளர்ந்தான்மன்றோ. ௱௫௫

அன்னவனண்டகூடமலைத்தெழுதகர்மேற்றாவி
கன்னவனீரர்சூழமேடமேன ஞாயிற்றன்னப்
பொன்னமர்பொருப்பும்பொன்னாட்டிறைவனும்புத்தேள்யாரும்
வென்னிடக்கதிரடாத்திவிதிசிறையமைத்துமாற்றி. ௱௫௬

மிறைபுரிகொடுஞ்சூரிட்டவிண்ணவர்சிறையைமீட்பான்
முறையிடுமகவானுதிமுதல்வர்பாலிரங்கிமுக்கட்
கறைமிடற்றண்ணலேவக்கண்களாயிரத்தோனை
சிறைமயிலூர்ந்துசெந்தீச்செல்வனுஞ்சேவலேந்தி. ௱௫௭

உருத்திரர்கொடுத்ததானைபதினொருகரத்துமோங்க
வருத்தியாலகிலநாதனாருளும்வேலொருகைதாங்கிக்
கிருத்திமத்தானைவெள்ளக்கிளர்தரத்தனைவர்சூழ
மருத்துவர்முதலோர்நோய்க்குமருத்துவனெனவேபோந்து. ௱௫௮

வண்கடல்சுவற்றிக்குன்றமெறிந்துவல்லசுரர்சேனைத்
தெண்கடலனைத்துஞ்செவ்வேல்வடவனற்கீந்தசூத
நன்கடல்புரிந்துவீழ்த்துநணிகடவுளாைமீட்டுப்
பின்கடன்மிசையோர்பானுப்பிறையுடனுதித்தாலென்ன. ௱௫௯

மரகதக்கலாபதுங்கமணியணிவிழிமயூரக்
குரகதமுகைத்துவெண்பாற்குக்குடத்துவசமோங்கிச்
சுரர்சூழாத்தேகிச்செந்தூர்த்துறையெழீஇத்திரிகூடத்துத்
தரணிபீடத்தநீங்காத்தந்தையார்பாதம்போற்றி. ௱௬௰

புரந்தரன்மகளைவெற்பின்புள்ளிமான்மகளைவேட்டுப்
பரங்கிரிதணியன்மேவிப்பரவுகுன்றிடந்தோறுடி
வரங்கெழுகயிலைநண்ணிக்கந்தவெற்புறைதன்மான
வரன்றிரிகூடம்போற்றியிலஞ்சியிலமர்ந்தானையன் ௱௬௧

தேவர்தன்றேவர்தேவன்றிருமணப்பொலிவீதென்று
தாபதர்க்குணர்த்தப்பின்னுநதமிழ்முனிதென்பாற்சென்று
மேவரும்புதுமையாவுந்தொகையுறவிளம்பாநின்று
யாவலின்விரிவாயெங்கட்கருளெனவறைவான்சூதன். ௱௬௨

உ-வது—திருமணச்சருக்கமுற்றிற்று.

ஆகத்திருவிருத்தம்—௨௱௰௫.

---

## ௩ வது-திருமால்சிவபிரானானசருக்கம்.

ஐந்துநூற்றிரட்டியுடனீறாலண்டமரசுசெயுஞ்சூர்மாய்ப்பவடல்வேலேந்திச்
செந்தின்மாநகரில்வருகுமரவேட்குச்செங்கண்மாலயன்றேவர்சபையினுடே
விந்தைவான்சுரர்குருவாய்புதைத்துப்போற்றிவிண்ணப்பஞ்செய்ததெனத்திருக்கு
ற்றாலத், தெங்ஙதமால்வடிவுசிவவடிவமாகவிருந்தருளுமகிமையெடுத்திசைப்பதா
னுன். ௧

கற்றாரும்பலகலைநூற்கவிவல்லோர்க்குங்கதிபுகன்முத்தமிழுடையீர்கயிலைச்சாரன்
முற்றாலினுயர்ந்தகுறும்பலாவின்மேவுமுதலைப்போலுயர்கருணைமுதலுமாதிக்
குற்றாலம்போலுயர்ந்ததலமுஞ்சைவக்குறுமுனிபோன்மாதவனுந்திரிகூடத்து
வற்றாதவடவருவிகளர்க்குநதெய்வவரைநதியுந்திரிபுவனவரையிலுண்டோ. ௨

மூவுலகும்பனிவரைமேன்மொய்த்ததாலே முந்தியதிசைதெற்குயர்ந்துவடபாற்றாழ்ந்த, பூவுலகின்பெருங்கோட்டந்தவிர்க்கவேண்டிப்புரந்தரன்மாலயன்முதலாம்வானோர்சங்கம், யாவுமெதிர்நிற்கவுநீபோதாவென்னவெம்பிரான்பிறைமவுலித்தம்பிரானார், தேவர்பிரான்றிருவாக்காலருளிச்செய்தான்சிறியதொருகுறுமுனிவன்பெருமையம்மா. ௩

விரிகூடவிரித்ததமிழ்முனிக்குநாதன்மிக்கபுடார்ச்சுன்புரத்துமாலாமெம்மைப்
புரிகூடமுடித்தசடைப்பரமனுக்கிப்பூசைசெய்துவதுவைநடங்காண்பாயென்ன
வரிகூடவயன்றேடிக்காணாத வண்ணலார்திருவாக்காலருளிச்செய்த
திரிகூடவரைநோக்கிச்சிந்தைகூடச்செய்தவமுங்கைகூடச்செல்லுகின்றான். ௪

வேறு.

வரதனருளாலிமையமலைகடந்துகலைகடந்தமலையயோகி
பாதனுறைகருமகண்டமொன்ப துபாகத்திலெண்மர்பாகநீக்கி
விரதநெறிக்குமரிகண்டமாயிரம்யோசனைக்குள்வந்துவிசையத்தண்டங்
கரதலத்துமணிவிளக்காக்கவுஞ்சவரையிருட்படலங்கடந்துபோகி. ௫

எந்தைகுமரப்பெருமானொருநெடும்படைவேலாலிமைப்பினீறாச்
சிந்திடுதியெனச்சாபவாக்கமைத்துக்குடுமிதொறுந்தெய்வச்சாபக்
கந்தாஞ்சேர்கேதாரவரையணுகிச்சிவபெருமான்கழல்கள்போற்றி
மைந்தனுந்தன்றேவியும்வாழ்விதர்ப்பநாடணைந்துவளர்காசிமன்னி. ௬

மேருவுடன்பகைப்பாகியாழ்முனிவன்புணர்ப்பதனால்விந்தஞ்சோம
சூரியரைமடுத்துலகினெறிதடுத்துக்குறுமுனியுந்துன்றூதோங்கி
சேரியர்க்கும்பூரியர்க்குமூன்றிரண்டொன்றெனத்தேருநெறியுந்தீர்ந்து
சீரியரல்லார்க்குவாதசெல்வம்போலிறுமாந்துதிமிர்த்ததன்றே. ௭

காவிந்தவரைவளர்த்ததெவ்வளவோவவ்வளவுங்கையைநீட்டி
யரவிந்தமசலமிசைச்சுவித்ததெனக்குடுமிபற்றியவனிதாழ்ப்பத்
தரவிந்தருறைமனத்தாயுய்வதருளெனவுறுசென்னிதாழ்த்ததம்மா
வரவிந்தமுறையெனமேல்வரமுன்னேயறிவர்வந்தாலறிவர்கீழோர். ௮

செம்புவரைதனிலேகிவெள்ளிவரைக்கிவ்வழிநான்செல்லுங்காறும்
வெம்புவரைக்குடுமிபடிந்திவ்வாறுகிடத்தியெனவிளம்பியாதிச்
சம்புவரைநாண்மகிலாஞ்சாதிமிருகாதிகள்சஞ்சரிக்குங்கான்போய்
நம்புவரைச்சலம்வருத்தும்வில்வலன்வாதாவியனைநண்ணினுல்- ௯

உருத்திரவனந்தனக்குவருவதனைரான்வருவதனைர்த்துமேறூன்
விருத்திராசுரனெனுகம்மேலோனைமுடிப்பதற்காவேலையுண்ட

குருத்திராவடமுனிவையெல்லவிதுகருணமெனக்குறிப்பிளேர்ந்து
கருத்திராவணமிருண்டவில்வலன்மெய்த்தவவேடங்கரயிற்பூண்டான். ௰

குறுமுனிமுன்போய்விருந்துவிளம்பியொருகருத்தையுய்த்துக்குறைதீரன்ன
மறுமுனிதன்பலத்தமைத்துக்கருணைவாதாவிதனைமறிசெய்தாக்கி
யுறுமுனிவுவிருப்பகன்றுறுண்டதற்பினையன்வரத்தாலொருகாற்கூவக்
கறுமுனிமுன்கறியாருன்மறியாகிமுனியுதரங்கலக்காநின்றான். ௧௧

அன்னவன்வஞ்சனைபோர்ந்துபரமன்வரத்தானுமுனிவனகங்கையாலே
தன்னகடுதைவாலுந்தலைவறுண்டகாளமெனச்சமித்தான்பின்னோன்
முன்னவன்வெஞ்செருப்பயிலமுன்னுதலுந்தருப்பையினுன்முடித்துவீட்டித்
தன்னுபுனற்கோதமியிற்படிந்தாடிமல்லிகார்ச்சுனமும்போற்றி. ௧௨

ஆனதுங்கபத்திரியின்னதிபடிந்துகாஞ்சிநகரருணைபோற்றி
ஞானதுங்கர்முத்தாருதிருமுதுகுன்றமும்பரவிக்கயப்பாலேகும்
பீனகும்பசம்பவனைவில்வலன்வாதாவிகொடும்பிரமச்சாயை
கானமெங்குந்தொடர்ந்துதொடர்ந்தலைத்ததாலாறலைக்குங்கள்வர்போல. ௧௩

அங்கி நந்துமறைச்சிறுவரிருவர்போலுநுவெடுக்குமடுக்குநீங்கு
மெங்கிருந்துமிகல்விளைக்கும்பழிதுறிக்கும்வழிமறிக்குமினைக்கடிர்ப்பான்
கொங்கிருந்துசிவபானைக்குருமுனிபூசனைபுரிந்தான்குலிசவேந்தன்
பொங்கிருந்தண்காவிரிக்காப்புகலிதன்னிற்கயமுகனைப்பூசைசெய்வான். ௧௪

வேறு.

ஆவினிலைந்துபலோதகமைந்நூறுடைவகைத்திரவியமைவங்கயமிர்த
நாவிமதங்கமழ்சாந்தமுமாட்டிநறகலைபூண்மலர்மாலையணிந்து
தூவியபாளிதபாயசமன்னஞ்சுவைதருமோதகம்வடையவல்கன்னல்
மேவியபண்ணியமுப்பழமபயிக்கநிவேதனமொக்கவமைத்து ௧௫

தூபமுடன்பலதீபமியற்றிச்சோதிதரும்படிமங்கலமேற்றி
மாயலசத்திரசாமரமேநதிமறைபயிலாயிரநாமமுமோதித்
தாபனமந்திரவோமமியற்றிச்சயசயசயவெனவானவர்வாழ்த்தத்
தீபமெனுங்கயமாமுகவரைச்செஞ்சரணாற்சரணென்றுபணிந்தான். ௧௬

படலையின்மலராறுகணிபவசரணம்பனிவளாமகள்பெறுதனிமுதல்சரண
நடமிடுபரிபுரபதயுகசரணந்திபதிந்திபதியதிபதிசரணங்
கடன்மடையெனவருமதமலைசரணங்கயமுகன்சிரன்வயவரிசரணங்
குடங்கர்தடவயிறுடையவசரணகுருணதரசிவசுதகணபதிசரணம். ௧௭

முடிபடிதெரிவருமுதியவசரணமுறைதெரிமறையவரிறையவசரணம்
வடிவினிலுயரியபெரியவசரணம்வலவையையமருவியபுயதரசரண
நெடியவன்விழிதருநெடியவசரணநினைபவர்பவமறநினைபவசரண
மடியவர்வினைகெடவருள்பவசரணமரகரசிவசுதகணபதிசரணம். ௧௮

வேறு.

எனவருச்சனைசெய்வான்முன்னெழிற்கரமைந்துநான்கு
கனவரைப்புயமுந்தோன்றக்கடகரிமுகத்தெங்கோமான்
றினகரோதயம்போல்வந்தான்றேவர்கோன்விழிகளெல்லாம்
வனருகக்காடுபோலமலர்ந்தனன்வணங்கிவீழ்ந்தான். ௧௯

பாகசாதனனையன்பாலங்குசபாசச்செங்கை
யாகுவாகனத்துமுக்கணைங்கரத்தானைநோக்கி
யோகையாலுன்றுபூசைதோத்திரமும்வந்தோம்வேண்டும்
வாகைசேர்வரங்கள்கேண்மோவென்னலும்வணங்கிவாழ்த்தி. ௨௰

பந்தனமுலையாள்பாகப்பரன்றிருப்பள்ளித்தாம
நந்தனவனங்கள்வாடிநலிந்தனதழைக்கும்வண்ணம்
சந்தனவனங்கள்சூழ்ந்தனிவரைமுனிவன்கைமேல்
வந்தனள்பொன்னியீண்டுவரப்பணித்தருள்வாயென்றான். ௨௧

காண்டகுமண்டங்காக்கையெனக்கயமுகந்தோன்செல்லச்
சேண்டகையண்டங்காக்கைத்தேவனென்றுணரான்கும்பன்
கூண்டகைநீட்டியோச்சக்கும்பநீர்துண்டத்தாலே
யாண்டகைகவிழ்ப்பப்பொன்னியருள்வழிப்பார்மேற்புக்காள். ௨௨

புக்கபாரிடந்துபாரப்பொருப்பினையெடுத்துவாரிச்
சக்கரஞ்சங்கமேந்தித்தடம்பணைமருதமுந்தி
நெக்கநீர்ப்புள்வாய்போழ்ந்துநெடியவேபரம்பினாலே
மைக்கடல்கிழித்துநேமிவளருமால்பொருவும்பொன்னி. ௨௩

பொன்னியைப்பிரித்தபிள்ளைபூசுரப்பிள்ளையாகச்
சென்னியிற்செங்கைதாக்கச்சேறலுமஞ்சினான்போ
லன்னியனணியனாகியாசைகடோறுமோடிப்
பன்னிசைமுனியோடாடல்பலபலபயின்றனையன். ௨௪

பாரின்மேற்படர்ந்துமேழுபரவைமேற்கடந்தும்பார
மேருமேன்மிதித்துத்தாவிவிண்ணின்மேற்குதித்தும்வேண்டுஞ்
சாரிமேல்விளைத்தானையன்றமிழ்முனியிளைத்தானம்மா
வாரியன்மகிமைபார்க்கிலாதியம்பரனேயென்றான். ௨௫

குறுமுனிமெலிவுநோக்கிக்குஞ்சரமுகத்தெங்கோமா
னுறுதனிப்பிறைவெண்கோடுமுடையபாதமுமுக்கண்ணுஞ்
செறிதிருப்புயங்கணான்குஞ்செழுமலர்க்கரமோரைந்து
மறுகணிமுடியுந்தோன்றவருளொடுந்தோன்றிநின்றான். ௨௬

நம்பியோவிதற்காவந்தானுனிநேர்கொடுமைசெய்தே
னெம்பிரான்சென்னிதாக்கவெடுத்தகையிதுவோவென்று
பம்புதன்சென்னிசெந்நீர்பதிபடநின்றுதாக்குங்
கும்பமாமுனியைநோக்கிக்கும்பமாமுகத்தெங்கோமான். ௨௭

மாதவமுஞ்செல்சென்னிவருந்தநின்சென்னிதாக்கு
மீதுவந்தனையாக்கொண்டோமிவ்வணம்புரிவார்க்கெல்லாங்
கோதிலாக்கதிகள்செல்வங்கொடுக்கின்றோநினக்குவேண்டுங்
காதல்சேர்வரங்கள்கேண்மோகருதினதருதுமென்றான். ௨௮

நீகமண்டலத்துநன்னீர்நிறைத்தருளெனலுநாதன்
மேகமண்டலத்துமூந்நீர்பிசைந்தெனத்துங்கைநீட்டி
மாகமண்டலத்துவாரிமாறுகாவிரிநீர்வாரிக்
காகமண்டலத்திற்சாய்ந்தகரகமண்டலத்திற்பெய்தான். ௨௯

கரகநீர்ப்பெருக்கும்பார்மேற்காவிரிப்பெருக்குநோக்கிப்
புரகரனருளின்மிக்காம்புதல்வன்மெய்யருளொன்றேந்திச்
சிரகரகம்பஞ்செய்துதெண்டனிட்டிறைவனுருக்
குரகதம்வடபாறசெல்லக்குறுமுனிதெனபாற்சென்றான். ௩௰

சுழிபெறிதரங்கப்பொன்னித்துறைகெழுகுடந்தையாரூர்
வழிபுனற்றிருவையாறுவலஞ்சுழிமருதூர்மாயன்
விழிதுயிலரங்கங்காவைவெண்காடுமறைக்காடேத்திச்
செழுமறைப்பொருளார்தொல்லைத்தில்லைமாநடனம்போற்றி. ௩௧

தருபுனற்செறுங்காவேரிச்சங்கமத்துறைநீராடிக்
குலாகடற்சேதுமேவிக்கொடுங்குன்றங்காணைபுத்தூர்
பரமசேடிமாடானைபரங்கிரிமதுரைநெல்லைத்
திருநகர்பரவிப்போந்தான்றென்றிசைதழைக்கவந்தான். ௩௨

இருஞ்சிவலிங்கமாக்கியிடந்தொறுமருச்சித்தேத்தி
வருந்தமிழ்ப்பொதியமேவிவடதிசைக்கணமுந்தென்பாற்
பெருந்திசைமெலிவுந்தீர்த்தநான்பிறவியாம்பிணியைத்தீர்க்கு
மருந்திருமருநதைக்காண்பானணிதிரிகூடஞ்சார்ந்தான். ௩௩

கவனவெங்கானநீங்கிக்கடவுளர்திருக்குற்றாலம்
புவனமார்குரோசமைந்திற்புகுதலும்புனிதத்தென்றல்
சிவமணம்வீசக்கண்டுதெய்வமாமுனிமுன்செய்யுந்
தவமினிப்பலித்ததென்றுதடம்புயநடிப்பச்சென்றான். ௩௪

நூற்கடல்கடந்தமேலோனுவலருந்திரிகூடத்து
மேற்கடுவிடமுண்டாரோவிண்டுவாயிருந்தாரொன்று
✠ நாற்கடவுளரும்போற்றும்நன்னகர்த்திசைகள்சூழ்ந்து
பாற்கடல்கிடந்தாலென்னப்பங்கயத்தடங்கள்கண்டான். ௩௫

---

✠ நாற்கடவுளர்-மனுக்களுள்இருவருள் ஏழாவதுவைச்சுதமனுவின் ஆட்சியாகிய இக்காலத்து ஆதித்தியர் உருத்திரர் வசுக்கள் மருத்துவர் எனநான்குவகுப்பினரா யிருப்பவர். இவர்முறையே பன்னிருகோடியர் பதினொருகோடியர் எண்கோடியர் இருகோடியர் எனமுப்பத்துமுக்கோடிதேவராவார். இவ்வாறுமற்றைமனுவந்தரங் களிலேயும் பற்பலநாமவகுப்பினராயும் பற்பலதொகையினராயும் வகுத்தெண்ணப்படுவார்கள்.

அறத்துறைமுனிவன்வாவியருகதுறையணுகுங்காலை
நிறைப்புனல்கரைமேற்றுவிசெடுந்தினைசுருட்டுந்தோற்றம்
புறத்துறுசமையத்தோரைப்போகெனப்புறங்கையோச்சி
விறற்சிவசமையத்தோரைவிரைவுடனழைத்தன்மானும். ஙசு

செறிதடங்கரையின்மீதேசெழுந்தினைகொழிக்குமுத்த
கதியபூந்திருவெண்ணீறறுநாயன்மார்வருதல்போலும்
மெறிபுனற்றிரையினூடேயெழுகயன்மறையுந்தோற்ற
மறுபுலச்சமையத்தோர்கள் வயினவமிறெருள்ந்தமைமானும். ஙஎ

உரவுநீர்த்துறைமண்டேகமொலிபடுதமுனிவைக்கண்டே
யரவொலிபரப்புந்தொண்டரார்ப்பொலிநிறைத்தல்போலும்
விரவுநீரழுததாரைவிண்மிசைப்பொழிதனழுக்கட்
புரகரன்கருணைமாரிபொழிவதுபோலுமாதோ. ஙஅ

காஞ்சிசூழ்கழனிதோறுங்கழைகள்கண்வெடித்தமுத்தந்
தாஞ்சிலர்வருவார்போவார்தரநதிசைகணிகைமார்போற்
பாஞ்சராத்திரிகடம்மைப்பழித்திடுகையைப்போலும்
வாஞ்சைசேர்சைவர்க்கண்டுமகிழ்தருமுறுவல்போலும். ஙகூ

அரத்தநெட்டிலையாங்காவியணிகதுநித்திலம் [illegible] ரடிச்
சிரத்தினிற்கதிர்களாய[illegible]செஞ்சடையின [illegible] செனனி
தரத்துறவனெந்தசென்னல்சைவமாமு[illegible]
வரத்தவம்புரிந்தோமெனவணங்குமா[illegible] போலும். சம்

வருபுனற்புகலிவேந்தர்வழுதிநோயொழித்தசா[illegible]
யிருமனத்தருகர்போலுமிடைபழம்பழுதரவாழை
விரிகனற்புனலிலேலடுவென்றகுழ்விருபபாஞைசவத்
தொருமனத்தவரேபோலுமொளிறுசெம்பழுக்காய்ப்பூகம். சக

வறிமெலர்த்தேனுடியுவகததாதாடுகதும்பி
யாறிடுதடத்திலீசனடியராய்முழுகித்தெய்வ
நீறிடுவாரைப்போலுநீறணிதொண்டர்க்கெல்லாஞ்
சோறிடுவாரைப்போலுமகரந்தஞ்சொரியுங்கைதை. சஉ

புண்டரீகத்தினவாவிப்புடார்ச்சுனபுரத்திலெல்லை
யொண்டவமுனிவன்செல்லவுதையவன்மறைந்ததோற்றம்
பண்டுசேர்தக்கன்வேள்விப்பயத்தினுறசமையபேதங்
கொண்டவர்குழாத்துகின்ருன்குன்றுபுக்கொளித்தல்போலும். சங

ஒழுகுநீர்த்தடங்கடோறுமோங்குசீர்ப்பழனக்கோறுஞ்
செழுமுகையுடைத்தநீலத்திசைதொறுமலர்த்தத்தோற்ற
மெழுபெரும்புனரியுண்டான்குறுமுனியிவனேயென்னப்
பழுதிலாவிறும்பூதெய்திப்புனன்மகள்பார்த்தல்போலும். சச

